

## அட்டகாசமான ஒரு சட்டக் கல்லூரி

# ஜெத்மலானி தேர்ந்தெடுத்த பத்து மாணவர்கள்!

காம்பஸ்"க்குள் நுழைந்த போதே தெரிந்தது. கல்வீச்சு, ஸ்ட்ரைக், ராகிங் என்று 'ஜாலி'யாகப் பொழுது போக்குகிற சாதாரண சட்டக் கல்லூரி அல்ல இது. பெரிய மனிதர்கள் வீட்டு பிள்ளைகள்கூட கடுமையான சட்ட திட்டத்தை மீறாமல் நடக்கிறார்கள்.

கஷீல் என்ற வேலூர்க்கார இளைஞர், 60 நாடுகள் கலந்து கொண்ட 85 டீம்களில் போட்டி போட்டுப் பரிசு வாங்கியிருக்கிறார். இப்படி ஒரு கல்லூரி இருப்பதாக ஒரு நண்பர்தான் அவருக்குச் சொன்னாராம்.

திபேன் சபர்வால் (மூட் கோர்ட் இன்டர்நேஷனல் - மாடல் நீதிமன்றம் - போட்டியில் வென்றவர்) லக்னோவிலிருந்து வந்தாராம். தனுஸ்ரீ அகமதாபாத் இளைஞி. ("ஓ 'கல்கி'? மை மதர் இஸ் எ டமில். ஷி ரீட்ஸ் இட்!").

ஹ்ர்த்திக் ரோஷன்களும் கஜோல்களும் இங்கேயே நிறையக் கிடைப்பார்கள் போல! (வகுப்பு முடிந்து வெளியே வந்து ஹாய் சொன்ன இளசுகளின் சீரியஸ் மற்றும் சல்லாப அரட்டைகள் சான்று). வெங்கடேஷ் சென்னை இளைஞர். பராசரன் மூலம் இக்கல்லூரி பற்றி அறிந்தாராம்.

ஐந்தாம் வருட சீனியர் மாணவர் முதல் வருட மாணவர்கள் வகுப்பில் வெகு சரளமாக, பாடம் நடத்துவதைப் பார்த்த போது பிரமிப்பாக இருந்தது. "இது சர்வ சாதாரணம் இங்கே" என்றார் பெங்களூர் நேஷனல் லா ஸ்கூல் டைரக்டர் மித்ரா.

"மே மாதம், முதல் ஞாயிற்றுக் கிழமை என்ட்ரன்ஸ் எக்ஸாம். மாத இறுதியில் ரிசல்ட். ஜூன் 25 இன்டர்வ்யூ. ஜூன் 29 அட்மிஷன்ஸ் க்ளோஸ்ட். 30ஆம் தேதி

# பேட்டி படுத்திய பாடு!

நடிகை சிம்ரன், கலைஞரைச் சந்தித்து, இலங்கைப் பிரச்னையைப் பற்றி பேட்டி கண்டால், எப்படி இருக்கும்? இப்படித்தான் அமெரிக்காவில் நடந்திருக்கிறது. அது குறித்து டெலி விஷன் சேனல் வட்டாரத்தில் சர்ச்சையும் எழுந் திருக்கிறது. இது என்ன கலாட்டா?

டைட்டானிக் ஹீரோ லியோனார்டோ டிகாப்ரியோதான் சர்ச்சைக்குள்ளாகியிருப்பவர். இவர் பேட்டி கண்டது. அமெரிக்க அதிபர் பில் கிளின்டனை. எதைப் பற்றி? சுற்றுப்புறச் சூழல் பற்றி.

ஏபிசி நெட்ஒர்க் என்பது அமெரிக்காவின் மிகப்பிரபலமான ஒரு சேனல். அதன் சார்பில்தான் லியோனார்டோ டிகாப்ரியோ, அமெரிக்க அதிபரைப் பேட்டி கண்டார். "ஒரு சினிமா நட்சத்திரம், சுற்றுச் சூழல் பற்றி அமெரிக்க அதிபரை பேட்டி காண்பது சிறுபிள்ளைத்தனமானது. செய்தி, பொழுதுபோக்கு என்ற இரண்டு வேறுபட்ட விஷயங்களுக்கிடையிலான எல்லைக் கோடு மீறப்பட்டு விட்டது. இது நிருபர்களுக்கு ஏற்பட்டுள்ள அவமானம்" என்று ஏபிசி டெலிவிஷன் நெட்ஒர்க்கின் செய்திப் பிரிவிலிருந்தே விமர்சனம் எழுந்துள்ளது. இது மாதிரி ஏகப்பட்ட விமர்சனங்கள்!


• கிளின்டன்

ஆனால் இதுபோன்ற விமர்சனங்களுக்குப் பேட்டியின் துவக்கத்திலேயே விடை இருக்கிறது. டைட்டானிக் ஹீரோ, பேட்டியைத் துவக்குவதே இப்படித்தான்.

"மிஸ்டர் பிரசிடென்ட், எனக்கு பேட்டியளிக்க நேரம் ஒதுக்கித் தந்தமைக்கு மிக்க நன்றி. நான் அரசியல்வாதியுமில்லை. ஜர்னலிஸ்டுமில்லை என்பது உங்களுக்குத் தெரியும். ஆனாலும், சுற்றுச் சூழல்மீது அக்கறை கொண்ட இந்நாட்டுக் குடிமகன் என்ற முறையில் உங்களைப் பேட்டி காண விழைகிறேன்."

- சி.எம்.

ஓரியன்டேஷன் கோர்ஸ். ஜூலை முதல் தேதி வகுப்புகள் தொடங்கி விடும். மழை, பிரளயம், பூகம்பம் எது வந்தாலும், இந்த அட்டவணையில் 'நோ' மாற்றம்!" என்று ஒரு குட்டி அறிமுக லெக்சர் கொடுத்தார்.

பெங்களூரிலிருந்து சுமார் 15 கி.மீ. தூரத்தில், நாகர்பாவி ஏரியாவில், யூனிவர்சிடி வளாகமான 'ஞானபாரதி'யில் இருக்கிற நேஷனல் லா ஸ்கூல், படு மாடர்ன் அமைப்பு. மற்ற சட்டக் கல்லூரிகளுக்கும் இதற்கும் மலைக்கும் மடுவுக்குமான வித்தியாசம்!

"1986ல் பார் கவுன்சில் ஆஃப் இந்தியா ஸ்பான்சர் செய்த கல்லூரி இது. சுயேச்சை அந்தஸ்துள்ள 'ஆட்டானமஸ்' கல்லூரி. சுப்ரீம் கோர்ட்டின் சீஃப் ஜஸ்டிஸ்தான் இதன் சான்ஸ்லர். அதாவது விசிட்டர்!" என்று தொடர்ந்தார் டைரக்டர் மித்ரா. துவக்கத்தில் சீனியர் புரொபசராகச் சேர்ந்து, '97ல் இயக்குநர் ஆகப் பதவி உயர்வு பெற்றவர்.

ஒவ்வொரு வருடமும் மொத்தம் 80 மாணவ-மாணவிகளே தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். (IIT, IIM மாதிரியான பயங்கர என்ட்ரன்ஸ் டெஸ்ட்!) இதில் ஐம்பத்தி ஏழு பேர்தான் பொதுப் பிரிவினர். பதினைந்து சதவிகிதம் தாழ்த்தப்பட்ட வகுப்பினர். ஏழரை சதவிகிதம் பழங்குடியினருக்கு. ஐந்து ஸீட்டுகள் சார்க் நாடுகளைச் சேர்ந்த மாணவர்களுக்கும், மங்கோலியா, கென்யா, சூடான் முதலிய நாட்டு மாணவர்களுக்கும்.

"வெளிநாட்டில் இருக்கிற இந்திய மாணவ-மாணவிகளுக்கு அங்கங்கே உள்ள இந்திய தூதரகங்களிலேயே என்ட்ரன்ஸ் டெஸ்ட் நடத்துகிறோம்!" என்ற டைரக்டர் மித்ரா, "யூ நோ, இங்கே ஆரம்பத்திலிருந்தே மாணவர்களைவிட மாணவிகள்தான் அதிகம்!" என்றார் புன்னகையுடன்.

சட்டத் துறையில் சூப்பர் ஸ்டார்கள் எனப்படும் நீதிபதிகள் எ.என். பட்டாச்சார்யா, பாலகிருஷ்ணன், ரமா ஜோய்ஸ், ஜீவன் ரெட்டி, புரொபசர் அஜ்ஜப்பா என்று இந்தியப் பிரபலங்கள் வகுப்புகள் எடுப்பது தவிர, பல வெளிநாட்டுச் சட்ட வல்லுனர்களும்

இங்கே வகுப்புகள் நடத்துகிறார்கள். தடயவியல் நிபுணர் பேராசிரியர் சந்திரசேகரும் வகுப்பெடுக்க வருகிறார் இங்கே!

"அறுபது கோர்ஸ்கள் நடத்துகிறோம். ஒவ்வொன்றும் 75 வேலை நாட்கள். ஒவ்வொரு சப்ஜெக்ட்டும் ஒரு ரீசர்ச் பேப்பர். செயல்முறையாகப் பல பாடங்கள் நடப்பதால் நீதிமன்ற அனுபவத்தையேகூட சட்டக் கல்லூரியில் பெற முடிகிறது.

வருடத்துக்கு பீஸ் இருபத்தைந்தாயிரம் ரூபாய். மெஸ்ஸுக்கு பதினைந்தாயிரம் ரூபாய் ஆகுமாம்.

வருடா வருடம் நடக்கும் உலக 'மூட் கோர்ட்' சாம்பியன்கள் போட்டியில், இந்த வருட சாம்பியன்கள் இந்தக் கல்லூரி மாணவ - மாணவிகள்தாம். 'வேர்ல்ட் கப்பு'க்கு இணையானதாம். சப்னா கஜூரியா, ப்ரியா பிள்ளை என்ற மாணவிகளும் நிபேன் சபர்வால் என்ற மாணவரும் தான் இதை வென்றவர்கள்.

சிகாகோவில் நடந்த வேர்ல்ட் இன்டர்நேஷனல் கிளையண்ட் கவுன்ஸிலிங் போட்டியில், முதல் தடவையாக இந்தக் கல்லூரி மாணவர்கள்தான் முதல் பரிசு வாங்கியிருக்கிறார்கள்.

ரோட்ஸ், இன்லாக் போன்ற அரைடஜன் சர்வதேச ஸ்காலர்ஷிப்களையும் இந்தக் கல்லூரி மாணவர்கள் பெற்றிருக்கிறார்கள்.

லைப்ரரி இப்போதே பிரமாதமாக இருக்கிறது. இதை மேலும் மேம்படுத்த இன்ஃபோஸிஸ் அதிபர் நாராயணமூர்த்தி ஒரு கோடி ரூபாய் கொடுத்திருக்கிறாராம்.



• எஸ்.என்.மித்ரா

கல்லூரியைச் சுற்றிக் காண்பித்த பேராசிரியர் விவேகானந்தன், இருபதுக்கும் மேற்பட்ட கம்ப்யூட்டர்களில் மூழ்கியிருந்த மாணவர்களை அறிமுகப்படுத்தினார். இரவு பன்னிரண்டு மணி வரை இங்கே கம்ப்யூட்டரில் பிஸியாக இருப்பார்களாம் மாணவர்கள்!

ஒரு வகுப்பில் சென்னையைச் சேர்ந்த பிரபல ஹ்யூமன்ரைட்ஸ் வழக்கறிஞர் சுரேஷ் பாடம் நடத்திக் கொண்டிருந்தார். மாணவ-மாணவிகள் படு ஜாலியாகத் தோன்றினாலும் படு சீரியஸாகக் கவனித்துக் கொண்டிருந்தார்கள்.

இன்னொரு வகுப்பில், 'நியூ குளோபல் கல்ச்சர்' என்ற தலைப்பில் அரசாங்க அதிகாரி, வேர்ல்ட் பாங்க் ஆபீசர், பொருளாதார நிபுணர் என்று மாணவர்களே ஒவ்வொரு பாத்திரமாக மாறி வறுமையை விரட்ட சர்வதேசக் கூட்டமைப்பு என்ற தலைப்பில் விவாதம் நடத்திக் கொண்டிருந்தார்கள்.

ஐந்து வருடப் படிப்பு முடிந்ததும், 'காம்பஸ் இன்டர்வ்யூ'வில் மாணவர்களைக் 'கொத்திக் கொண்டு' போய்விடக் காத்திருக்கிறார்கள். நாம் போயிருந்த அன்று மாலை, மத்திய சட்டத்துறை அமைச்சர் ராம்ஜெத்மலானி வந்திருந்தார். சொற்பொழிவு முடிந்ததும், கடைசி வருட மாணவ - மாணவிகளை அவரே இன்டர்வ்யூ செய்து பத்துப் பேரை மத்திய சட்டத் துறைக்குத் தேர்ந்தெடுத்து விட்டார்!

**கட்டுரையும், படங்களும் - சாருகேசி**

# கணேசன் கேட்டால்...

நடந்து முடிந்த நாற்பத்து மூன்றுநாள் பட்ஜெட் கூட்டத் தொடரில், இரண்டாயிரத்து அறுநூற்று அறுபத்திரண்டு கேள்விகளைக் கேட்டு முதலிடத்தைப் பிடித்திருக்கிறார் இடைப்பாடி தொகுதியின் சட்டமன்ற உறுப்பினரும் பா.ம.க. சட்டமன்றக் கட்சித் தலைவருமான ஐ. கணேசன். அதிக வெட்டுத் தீர்மானங்கள் மீது பேசியவரும், பல கவன ஈர்ப்புத் தீர்மானங்களைக் கொண்டு வந்தவரும் இவர்தான் என்கிறது சபைக் குறிப்பு. கடந்த நான்கு , வருடங்களாக, கேள்வி கேட்பதில் இவரது சாதனையை இவரே முறியடித்து முன்னணியில் இருந்து வருகிறார்.

"ஏதாவது கேட்க வேண்டும் என்பதற்காகவே ரெடிமேட் கேள்விகளைக் கேட்கிறீர்களா'' என்றதும் கொஞ்சமும் கோபப்படாமல் பதில் சொல்கிறார் கணேசன். ''மக்களின் அடிப்படை பிரச்னைகளை, அரசிடம் எடுத்துச் சொல்வோம் என்பதற்காகத்தான் மக்கள் நமக்கு ஓட்டுப் போடுகிறார்கள். அவர்களின் நம்பிக்கையை நசுக்க விரும்புகிற யாரும் ஒரு நல்ல மக்கள் பிரதிநிதியாக இருக்க முடியாது. மக்கள் பிரச்னைகள் என்னிடம் வந்து கொண்டே இருக்கின்றன. எனவே கேள்விகளை நான் தயாரிக்க வேண்டிய அவசியம் இல்லை. கேள்விகள் என்னை வந்து அடைகின்றன" என்றவரிடம், "கேள்வி மேல் கேள்வி கேட்டு அப்படி என்னதான் சாதித்திருக்கிறீர்கள்?" என்றோம்.

"சேலம் மாவட்டத்தில் உள்ள எனது தொகுதியில் அடிப் படைத் தேவையான குடிநீர்தான் பெரிய பிரச்னை. அங்கு ஆயிரத்து ஐந்நூறு அடிக்கு கீழேதான் நிலத்தடி நீர் உள்ளது. அதுவும் புளோரைடு உள்ள நீர். இதைக் குடித்துக் குடித்து, சிறுநீரகக் கல் ஏற்பட்டு ஆயிரக்கணக்கான மக்கள் அவதிப்பட்டு வருகிறார்கள். இதை முன்னாள் முதல்வர் எம்.ஜி.ஆரின் கவனத் திற்குக் கொண்டு சென்றோம். இங்கு காவரியிலிருந்து குடிநீர் கொண்டு வர- இடைப்பாடி ராசிபுரம் கூட்டு குடிநீர் திட்டம் ஒன்றைத் தொடங்கி, அதற்கு ரூபாய் பத்தரை கோடியை ஒதுக் கினார்கள். ஆனால் பல்வேறு நடை முறைச் சிக்கல்கள் இருந்ததால் அந்தத் திட்டம் கிடப்பில் போடப்பட்டது. இதற்கிடையில் தி.மு.க. ஆட்சிக்கு வந்த பிறகு, எங்கள் கோரிக்கையை ஏற்று, இடைப்பாடி பகுதியின் நிலத்தடி நீரைப் பரிசோதிக்க கலைஞர் உத்தரவிட்டார். உண்மை நிலையை உடன் புரிந்து கொண்ட அவர், மத்திய அரசுடன் போராடி ரூபாய் அறுபத்தாறு கோடியை 'புளோரைடு நீக்கப்பட்ட' குடிநீர்த் திட்டத்திற்கு வாங்கிக் கொடுத்துள்ளார். குடிநீர்த் திட்ட வேலைகள் தொடங்கி விட்டன. 326 கிராமங்களில் மேல்நிலை குடிநீர்த் தொட்டி கட்டப்பட்டு குடிநீர்ப் பிரச்னையை அடியோடு தீர்க்க இருக்கிறோம். அதுமட்டுமல்ல, இடைப்பாடியில் ஒரே ஒரு சாலைக்காக மட்டும் ரூபாய் எழுபத்தேழு லட்சத்தை முதல்வர் ஒதுக்கித் தந்துள்ளார். அரசு மருத்துவமனையில்

இருபத்துநான்கு படுக்கைகள் கொண்ட புதிய கட்டடம், தாலுகா அலுவலகம், தீயணைப்பு நிலையம், காவல் நிலையம் என தி.மு.க. கூட்டணியில் பா.ம.க அங்கம் வகிக்காத காலத்திலேயே கலைஞர் இதை யெல்லாம் செய்து கொடுத்திருக்கிறார். அவரது இந்த அரசியல் நாகரிகம் என்னை மட்டுமல்ல; எல்லா அரசியல் கட்சிகளை யுமே கவர்ந்த ஒன்று'' என்று கூறும் கணேசன், இட ஒதுக்கீட்டிற்காக பா.ம.க. நடத்திய ஏழுநாள் சாலை மறியல் கலவரத் தில் இறந்த தொண்டர்களின் ஒவ்வொரு குடும்பத்திற்கும் ரூபாய் மூன்று லட்சமும், வீட்டில் ஒருவருக்கு அரசு வேலை யும் வாங்கிக் கொடுத்தது, அதிக மனநிறைவை தருவதாகக் கூறு கிறார்.

"எனது தொகுதி மக்கள் தான் என்றில்லை. மற்றத் தொகுதி மக்களும் என்னிடம் பிரச்னை களை எடுத்து வந்தால் அதை அரசின் கவனத்திற்கு எடுத்துச் செல்லத் தயாராக இருக் கிறேன்" என்று சொல்லும் கணேசன், எம்.ஜி.ஆர். தலைமை யிலான அ.தி.மு.க.வில் 1977ஆம் ஆண்டு முதன்முறையாக இடைப்பாடியிலிருந்து சட்ட மன்றத்திற்குத் தேர்ந்தெடுக்கப் பட்டவர். அதன் பிறகு 1980–லும், தற்போது மூன்றாவது முறையாக 1996–லும் சட்டமன்ற உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்.



''எம்.ஜி.ஆர். மறைவுக்குப் பிறகு அரசியல் வேண்டாம் என முடிவு செய்து ஒதுங்கி இருந்தேன். 1991ம் ஆண்டுத் தேர்தலின்போது, பா.ம.கவின் தேர்தல் அறிக்கை என்னைக் கவர்ந்தது. அதில் இணைந்தேன்" என்கிறார் கணேசன்.

மாதத்தில் பதினைந்து நாட்கள் தொகுதி யிலேயே சுற்றிக் கொண்டிருப்பாராம். எல்லா எம்.எல்.ஏக்களும் ஐ.கணேசன் போலவே இருந்துவிட்டால் எப்படி இருக் கும்!

— ஜெயன்

படங்கள்: வெங்கடேஷ்

# முதல் நூல்!

"...இச்சமூகத்தில் கடந்த முப்பது வருஷ காலத்துக்குள் 5000க்கு ஒருவர் கூட அவர்கள் சமூகத்தைத் தவிர மற்ற சமூகத்தினரிடத்தில் ஊதியம் பெற்று வேலை செய்ததில்லை.

...கடந்த முப்பது வருஷ காலத்துக்குள் பத்தாயிரத்துக்கு ஒருவர்கூட இவர்களில் மதம் மாறினவர்கள் இல்லை... இன்று ஒரு செட்டியார் கிறிஸ்துவரை நாம் காண முடியாது..."

– இப்படியெல்லாம் தகவல்களை அள்ளித் தருகிறது 1970ஆம் ஆண்டில் ஏ.எஸ். சர்மா எழுதி வெளியான 'நாட்டுக்கோட்டை நகரத்தார் வரலாறு' என்கிற நுல். இது வெளியாகிப் பதினாறு ஆண்டுகளுக்குப் பிறகுதான் அறிஞர் சோமலெ எழுதிய 'செட்டிநாடும் செந்தமிழும்' வெளியானது.

சோமலெ, தம்முடைய நூலில் ஒரு பகுதியில், நகரத்தார் வீட்டுத் திருமணங்களுக்கு உகந்தவை என்று ஒரு சீர் வரிசை நூல்களின் பட்டியல் தருகிறார். அதில் இடம் பெறுவது இந்த சர்மாவின் 'நகரத்தார் வரலாறு' என்பதே இதன் சிறப்புக்குச் சான்று. நீண்ட இடைவெளிக்குப் பிறகு இப்போது வானதி பதிப்பகம் இந்த நூலின் இரண்டாம் பதிப்பை வெளியிட்டிருக்கிறது.

இராமாயண, மகாபாரதங்களில் தொடங்கி சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவக சிந்தாமணி என்று அலசி– ஒரு வரலாற்று நாவலுக்கு இணையான காவியச் சுவையோடு நகரத்தார் சமூகத்தின் தோற்றம், வளர்ச்சி பற்றிய விவரங்களை மிகவும் அழகாக எடுத்துச் சொல்கிற ஏ.எஸ். சர்மா. 22 ஆண்டுகள் 'செட்டிநாடு' பத்திரிகையின் ஆசிரியராகப் பணியாற்றியவர். நகரத்தார் சமூகத்தினர் அனைவரின் மதிப்புக்கும் அன்புக்கும் உரியவராக விளங்கியவர் இவர்.

"பல ஏடுகளிலிருந்தும், கல்வெட்டுகளில் இருந்தும் மேற்கோள் காட்டி, நகரத்தார்களைப் பற்றி எழுதப்பட்ட முதல் நூல் இதுமட்டும்தான் என்று நான் கருதுகிறேன்'' என்கிறார் கவியரசு கண்ணதாசன்.

பரம்பரையாய் நகரத்தார் சமூகத்துப் பெண்கள் பாடிவரும் தாலாட்டுக்களையும் 'பிற' பாடல்களையும் கூடத் சுப. திருநெல்லையாச்சி தொகுத்துப் பாடியவற்றைச் சேர்த்திருப்பது; இதன் இலக்கியச் சுவைக்குக் கூடுதல் மெருகு சேர்க்கிறது.

— சுப்ர. பாலன்




நாட்டுக்கோட்டை நகரத்தார் வரலாறு- அ. சேஷாத்ரி சர்மா, பக்-304, விலை ரூ. 60/- வானதி பதிப்பகம், சென்னை - 17.

# பவர்ஃபைனான்ஸ்

## தமிழ்நாடு அரசு நிதி நிறுவனம்

மதுரையில் நடத்தும்

## டெபாசிட் திரட்டும் முகாம்

இடம் : ஒய்.எம்.சி.ஏ., மெயின்கார்டு சதுக்கம்,
மதுரை - 625 001.
தொலைபேசி : 746649 / 740591
நாள் : 15-6-2000 முதல் 17-6-2000 வரை.
(நேரம் : காலை 9.00 மணி முதல்
மாலை 7.00 மணி வரை)

## பாதுகாப்பான முதலீடு
## நிலையான வருமானம்

**12.12%**

36 மாதங்கள் மற்றும் அதற்கு மேற்பட்ட காலத்திற்கு
மாதாந்திர வட்டி 12.00%.
12 மாதங்கள் காலாண்டு வட்டி 10.59%.
24 மாதங்களுக்கு காலாண்டு வட்டி 11.10%

**16.34%**

60 மாதங்களுக்கு
(மாதாந்திர கூட்டுவட்டி
ஆண்டிற்கு 12.00%)

மேலும் விபரங்களுக்கு தொடர்பு கொள்ளவும் :




**தமிழ்நாடு மின்விசை நிதி மற்றும்
அடிப்படை வசதி மேம்பாட்டு நிறுவனம் (பவர்ஃபின்)**
(தமிழ்நாடு அரசு நிதி நிறுவனம்)

பதிவு அலுவலகம் : எண் 84, டி.டி.கே சாலை,
ஆழ்வார்ப்பேட்டை, சென்னை - 600 018.
தொலைபேசி : 4997689, 4995648. ஃபேக்ஸ் : 044-4982894

28-9-99 தேதியிட்ட எகனாமிக் டைம்ஸ் இதழில் வெளியிடப்பட்ட முந்தைய விளம்பரத்தின் தொடர்ச்சியாக இந்த விளம்பரம் வெளியிடப்படுகிறது.

DIPR/815/DISPLAY/2000

"Also available on the Internet" www.tn.gov.in / www.chennaionline.com / www.aaraamthinai.com / www.southindia.com

"மூடப்பட்ட நிதி நிறுவனங்களிடமிருந்து நூற்றி மூன்று கோடி ரூபாயை போலீசார் மீட்டுத் தந்துள்ளார்கள்."

- முதல்வர் கருணாநிதி மே 15-ம் தேதி சட்டமன்றத்தில் இப்படி அறிவித்ததையடுத்து முதலீட்டாளர்கள் அனைவரும் சென்னை மே தினப் பூங்காவில் கூடி ஒருவர் முகத்தை ஒருவர் ஆச்சர்யத்துடன் பார்த்துக் கொண்டனர்.

"உங்களுக்குப் பணத்தைத் திருப்பித் தந்துட்டாங்களா?" என்று ஒருவருக்கொருவர் அவசரமாய் விசாரித்துக் கொள்ள, யாருக்குமே பணம் தரப்படவில்லை என்பது தெரிந்து, நொந்து போயிருக்கிறார்கள். அப்படியென்றால் முதல்வர் சொன்ன நூற்றி மூன்று கோடி?

தமிழ்நாடு முதலீட்டாளர்கள் கூட்டமைப்பின் தலைவர் ஜெகனைச் சந்தித்தோம்.

"மூடப்பட்ட நிதி நிறுவனங்களில் முதலீட்டாளர்கள் டெபாசிட் செய்த மொத்தத் தொகை ரூபாய் ஆயிரத்து நானூற்று எழுபத்தேழு கோடி. எட்டு லட்சம் முதலீட்டாளர்கள் நேரடியாக பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். இதில் புகார் கொடுத்தவர்கள் ஒரு லட்சத்து முப்பத்து இரண்டாயிரம் பேர். மோசடி செய்தவர்களையும், செய்பவர்களையும், கட்டுப்படுத்தவும், நடவடிக்கை எடுக்கவும், முதலீட்டாளர்களின் பணத்தை மீட்டுக் கொடுக்கவும் அரசு தீவிர நடவடிக்கை எடுத்தது என்பதை நாங்கள் மறுக்கவில்லை.

தனி நீதிமன்றம் செயல்படத் தொடங்கி மூன்று ஆண்டுகள் முடியப் போகின்றன. ஆனால் இங்கு நடந்து வரும் அறுபத்து நான்கு வழக்குகளில், ஒருசில வழக்குகளுக்கு மட்டுமே தீர்ப்பு வழங்கப்பட்டுள்ளது. பல



• ஜெகன்



• பால சுப்ரமணியம்

பெரிய நிறுவனங்களின் வழக்குகளுக்குத் தனி நீதிமன்றத்திலேயே ஐம்பது வாய்தா கொடுத்திருக்கிறார்கள். குற்றம்சாட்டப்பட்ட நூற்று அறுபத்தி எட்டு நிதிநிறுவன அதிபர்களுள் தற்போது இருபது பேர் மட்டும் சிறையில் உள்ளனர். எஞ்சியவர்கள் முதலீட்டாளர்கள் பணத்தில், ரொக்க ஜாமீன் கொடுத்து வெளியே வந்து விட்டனர்.

அதிர்ச்சியில் இதுவரை இருநூறு முதலீட்டாளர்கள் இறந்து போய் விட்டார்கள். மனநிலை சரியில்லாமல், வீட்டை விட்டு வெளியேறியவர்களைக் கணக்கெடுத்தால் இதயம் கனக்கும். நின்று போன திருமணங்கள் குறித்து எனக்கு வரும் தகவல்கள் ஒவ்வொன்றுக்கும் என்னிடம் ஆதாரம் உள்ளது. இப்படி வாழ்வா சாவா என போராடிக் கொண்டிருக்கையில், ரூபாய் நூற்று மூன்று கோடி திரும்பத் தரப்பட்டுள்ளது என்று முதல்வர் அறிவித்தது, எங்களை அதிர்ச்சியில் ஆழ்த்தியிருக்கிறது. ஏனென்றால் யார் யாருக்கு, எந்த நிதி நிறுவனத்தின் பணம் எவ்வளவு சதவிகிதம் கொடுக்கப்பட்டுள்ளது என்ற தகவல் எங்களுக்குத் தரப்படவில்லை. ஆர்.பி.எஃப். நிதி நிறுவனம் மட்டுமே ஐந்து சதவீத தொகையைக் காசோலைகள் மூலம் அனுப்பத் தொடங்கி இருக்கிறார்கள். முதலீட்டாளர் கூட்டமைப்பு யாருக்காக செயல்படுகிறது என்பதை அரசு விளங்கிக் கொள்ளவில்லையோ என சந்தேகப்பட வேண்டியிருக்கிறது" என்கிறார் பெருமூச்செறிய!

எதனடிப்படையில் இப்படியொரு கணக்கை அரசு கவனத்தில் எடுத்துக் கொள்கிறது என்பது ஒருபுறம் இருக்க, "பறிமுதல் செய்யப்பட்டதாகக் கூறப்படும் சொத்துக்களின் மதிப்பு ரூபாய் ஆயிரத்து நாற்பத்தெட்டு கோடி என்று அரசு

அறிவித்துள்ளது. ஆனால் இது வேடிக்கையான மதிப்பீடு. உதாரணத்திற்கு ஈஸ்வரி பைனான்ஸ் நிறுவனத்திற்குச் சொந்தமான, செனடாப் சாலை சொத்திற்கு அரசு ரூபாய் இரண்டு கோடியே, எண்பது லட்சம் மதிப்பு கூறுகிறது. ஆனால் அங்கு நிலவும் ரியல் எஸ்டேட் விலை ரூபாய் எண்பத்தெட்டு லட்சம்தான். நிலத்தை வாங்க முன்வருபவர்களோ இருபத்தெட்டு லட்சத்திற்குத்தான் கேட்கிறார்கள்! இப்படித்தான் எல்லாச் சொத்துக்களின் நிலையும் உள்ளது. பறிமுதல் செய்யப்பட்ட சொத்துக்களை வாங்க வருபவர்களுக்கு அரசு தாராள வரிச் சலுகை அறிவிக்காத வரை, அவற்றை நல்ல விலைக்கு விற்க முடிகிறதோ இல்லையோ கலபத்தில் விற்க முடியாது" - இப்படிச் சொல்பவர், சினேகம் முதலீட்டாளர் சங்கத்தின் தலைவர் ராமச்சந்திரன்.


• மீனாட்சி

"சம்பந்தப்பட்ட முதலீட்டாளர்களின் கூட்டமைப்பு நிர்வாகிகளை முதல்வர் இதுவரை ஒருமுறை கூட அழைத்து நேரடியாகப் பேசவில்லை. அவ்வாறு பேசியிருந்தால் பல விஷயங்களைத் தெளிவுபடுத்தியிருப்போம்" என்கிறார் தேவி கோல்டு ஹவுஸ் முதலீட்டாளர் சங்கத் தலைவி மீனாட்சி.


• ராமச்சந்திரன்

"எனது பெண்களின் திருமணத்திற்காகப் போட்ட பணம் இன்று அவர்கள் ஆளாகி நிற்கையில் எங்கே இருக்கிறது என்று தெரியவில்லை. இதனால் கணவரும் நானும் பேசியே பல வருடங்கள் ஆகி விட்டது. ஒவ்வொரு நாளும் குடும்பத்தில் குழப்பமும், கவலையும்தான் மிச்சம்" என்கிறார் இவர்.

இத்தனை சிக்கல்கள் இருக்க, முதலீட்டாளர்களின் பணம் திரும்பக் கிடைக்குமா என்ற நமது சந்தேகத்தை நிதி நிறுவன வழக்குகளுக்கான தனி ஐ.ஜி பாலசுப்ரமணியம் முன்வைத்தோம். குறிப்பாக அந்த நூற்று மூன்று கோடி பற்றிக் கேட்டோம் :

# 103 கோடி எங்கே, எங்கே?

"ஆர்.பி.எஃப். முதல் கட்டமாக ரூபாய் முப்பத்தெட்டு கோடியை காசோலைகள் மூலம் அனுப்பி வருகிறார்கள். இதே போன்று பல நிறுவனங்கள் விரைவில் ஐந்து சதவிகித பணத்தை முதல் தவணையாக வழங்க, ஏற்பாடு செய்து வருகிறோம். பறிமுதல் செய்யப்பட்ட நகை, பணம் இவற்றை வங்கிகளில் முதலீடு செய்திருக்கிறோம். நடப்பாண்டு முடிவுக்குள் பாதி, வழக்குகளை முடித்து விடுவோம். எஞ்சிய வழக்குகளை விரைந்து முடிக்க மேலும் இரண்டு சிறப்பு நீதிமன்றம் அமைக்க அரசை கேட்டுக் கொள்ள இருக்கிறோம். முதல்வர் சட்டமன்றத்தில் அறிவித்த நூற்று மூன்று கோடிக்கு எங்களிடம் கணக்கு உள்ளது. ஆனால் அதை முதலீட்டாளர்கள் சங்க நிர்வாகிகளுக்குக் காட்ட வேண்டிய அவசியமில்லை" என்று கூறுகிறார். அப்படி என்ன ரகசியமோ?

— ஆர்.சி.ஜெ.

படங்கள் : வெங்கடேஷ்

# உற்சாக பலூனில் ஊசி!

ஹரியானாவில் உள்ள கிராமமான பஹு - ஜமல்பூரில் வசிப்பவர்கள் இடிந்து போயிருக்கிறார்கள். வெள்ளம், வறட்சி போன்ற இயற்கை சீற்றங்களோ, தொற்று வியாதி, உணவுப் பொருள் தட்டுப்பாடு போன்றவையோ இதற்குக் காரணமல்ல - தங்கள் ஊரைச் சேர்ந்த ஒருவர் ஒரு நாட்டுக்கே பிரதமரான செய்தியைக் கேள்விப் பட்டு போன வருடம்தான் பெருவிழா எடுத்துக் கொண்டாடினார்கள். ஆனால் சமீபகால செய்திகள் அவர்களது



• குடும்பத்தினருடன் சௌத்ரி

பலூனில் ஊசியைக் குத்தியிருக்கிறது. நம் நாட்டுப் பிரதமரைப் போலவே அங்கும் நாட்டை வழிநடத்திச் செல்லும் முக்கிய பொறுப்பு பிரதமருக்குத் தான். படிப்படியாக உழைப்பால் உயர்ந்து அப்பொறுப்பை அடைந்தவர் மகேந்திர பால் சௌத்ரி.

அதெப்படி வேற்று நாட்டுக்காரர் ஒருவர் பிரதமராக அந்த நாடு அனுமதி அளிக்கிறது என்று கேட்பவர்களுக்கு ஒரு சிறு விளக்கம்: தென் பசிபிக் கடலில், ஆஸ்திரேலியாவுக்கு அருகில் உள்ள ஃபிஜி நாட்டின் சொத்துக்களில் முக்கால்வாசிக்கும் அதிகமாக சொந்தம் கொண்டாடுபவர்கள் அந்த நாட்டினர்தான். என்றாலும் இன்றைய தேதியில் மக்கள் தொகையில் அவர்களுக்குச் சமமாக இருக்கிறார்கள் இந்தியர்கள். அங்குள்ள சர்க்கரை ஆலைகளில் வேலை செய்வதற்காக இங்கிருந்து பல வருடங்களுக்குமுன் சென்றவர்கள். இவர்களின் உழைப்பு ஃபிஜி நாட்டுக்கு மிகவும் தேவைப்பட்டது. என்றாலும் தங்கள் தேசத்தின் தலையெழுத்தையே நிர்ணயிக்கும் வாய்ப்பு இந்தியர்களிடம் சென்றுவிடுமோ என்ற பயமும் உண்டானது. அதை அதிகப்படுத்துவதுபோல், 1987ல் இந்தியர்கள் ஆதரித்த கூட்டணிதான் பாராளுமன்றத்தில் மெஜாரிட்டி பெற்றது. எதிர்க்கட்சித் தலைவராக விளங்கிய மகேந்திர சௌத்ரி காலப்போக்கில் பிரதமரானார். ஆனால் இன்றைய தேதியில் அவரது அரசியல் வருங்காலம் கேள்விக்குறி! ஜார்ஜ் ஸ்பைட் என்ற ஆயுதம் தாங்கிய குழு ஒன்றின் தலைவர், அதிரடியாக பாராளுமன்றத்தை அதிகாரத்துக்குள் கொண்டு வந்திருக்கிறார். அங்கிருந்து மகேந்திர சௌத்ரியை இழுத்துச் சென்று பணயக் கைதியாக வைத்திருக்கிறார்.

பணயக் கைதியாகியுள்ள பிரதமருடன், இந்தியாவில் உள்ள அவரது சகோதரியின் மகன் சமீபத்தில் தொலைபேசியில் தொடர்பு கொண்டார். "மாமா வருத்தப்படுவதாகத் தெரியவில்லை. மாமிதான் மனமொடிந்துபோய், கடவுளிடம் பிரார்த்தனை செய்து கொண்டே இருக்கிறார்" என்கிறார் அவர்.

ஃபிஜி நாட்டில்தான் வசித்தார் என்றாலும் 1994ல் நம் நாட்டுக்கு வந்து சென்றிருக்கிறார் சௌத்ரி. அன்றைய ஹரியானா முதல்வர் பஜன்லாலை சந்தித்து, ஹரியானாவில் உள்ள தமது நிலத்தை ஆக்கிரமித்து உள்ளவர்களை அகற்ற உதவுமாறு கேட்டுக் கொண்டாராம். இன்று அவரே முக்கிய பதவியிலிருந்து பலவந்தமாக அகற்றப்பட்டிருக்கிறார்!

- ஜி.எஸ்.எஸ்.

● கே. என். பாலகிருஷ்ணன்,
கும்பகோணம்.

? கிதை திருக்குறளை விழுங்கி விட்டது என்று அமைச்சர் அன்பழகன் கூறியுள்ளது பற்றி...?

! குறளை கிதையால் கூட விழுங்கிவிட முடியாது என்று பேசியிருக்க வேண்டும்; உல்டா பண்ணிட்டார், விடுங்க!

● அ. ரஹீம் கஸாலி ஷமீம், அரசர்குளம்.

? இலங்கைத் தமிழர் பிரச்னையில் ம.தி.மு.க., பா.ம.க. போன்ற தமிழக கட்சிகள் மேற்கொண்டுள்ள நடவடிக்கைகள், இலங்கைத் தமிழர் மீது கொண்ட அக்கறையினாலா அல்லது அனுதாபத்தாலா? அல்லது இதையும் அரசியலாக்கும் ஆதாயம் கருதியா...?

! அத்தனையையும் விழுங்கி ஏப்பம் விடும் அறியாமையினால்!

● எஸ். ராமலிங்கம், ஆத்தூர்.

? உலக அழகிப் போட்டி நடப்பது போல உலக அழகன் போட்டி நடப்பதில்லையே, ஏன்?

! நடக்கிறது. ஆனால் நெட், நாளிதழ்கள், டீ.வி. போன்ற மீடியா சாதனங்கள் அழகனை விட அழகிக்குத்தான் மவுசு என்று புரிந்து கொண்டு செயல்படுகின்றன. அதனால் அழகன் பிரபலம் அடையவில்லை.


• உல்டா!


• அநேக கோடி...


• வெற்றி மிதப்பு!

● ஆர். பி. ஜெயச்சந்திரன்,
திருவெள்ளறை.

? 'என்னை எப்படித் திட்டினாலும் ஜெயலலிதாவுக்காக உழைப்பேன்' என்கிறாரே நடராஜன்? இந்த விசுவாசம் பற்றித் தங்கள் கருத்து...?

! அநேக கோடி விசுவாசங்கள்!

● க. நா. இராஜேஸ்வரன்,
மொரட்டுப்பாளையம்.

? லாலு - ராப்ரி தேவி ஆகியோர் வருமான வரி செலுத்தாததால் சொத்துக்கள் முடக்கப்பட்டுள்ளதே? இதனாலெல்லாம் இவர்கள் திருந்தி விடுவார்களா?

! அவரைத் திருத்த வேண்டிய மக்களே அபரிமிதமான வோட்டுகள் அளித்து அவரை வெற்றி பெறச் செய்யும் போது அவர் எப்படித் திருந்துவார்? ஜனநாயகத்தில் நீதி பரிபாலனம் என்பது நீதிமன்றங்களில் மட்டுமில்லை; வோட்டுச் சாவடியிலும் இருக்கிறது.

● அஜார், தேனாம்பேட்டை. ❑

? இரண்டரை மணி நேரமேயான சினிமா, தணிக்கைச் செய்யப்படுகிறது. ஆனால் 24 மணி நேர டீ.வி.க்குத் தணிக்கை இல்லை... இது சரியா?

! சினிமா கேளிக்கை சாதனம் என்பதாகவும் தொலைக்காட்சி தகவல் தொடர்பு சாதனம் என்பதாகவும் கொள்ளப்பட்டதால் முதலாவதுக்குத் தோன்றிய தணிக்கை இரண்டாவதுக்கு இல்லை. ஆனால் டீ.வி.யும் கேளிக்கையாகி 24 மணி நேரமும் ஒளிபரப்புகிறது என்னும் போது தணிக்கை எப்படிச் சாத்தியம்? அந்தந்த நாட்டின் விதிகளுக்குட்பட்டு அவை பொறுப்புடன் நிகழ்ச்சிகளை வழங்க வேண்டும். தொலைக்காட்சியாவது ஏதேனும் ஒரு நாட்டின் சட்ட வரையறைக்குட்படும். ஆனால் இன்டர்நெட் அப்படியில்லை; அதன் அபாயகரமான திரிசங்கு சொர்க்கத்தில் எந்த சட்டமும் அமுலில் இல்லையே!

# அக்கறையா?

● ஆர். லட்சுமி, மதுரை – 16.

? டி.கே. பட்டம்மாளுக்குக் கேரள அரசு 'சுவாதி புரஸ்கார்' விருது வழங்கியுள்ளது பற்றி...?

! செய்தி மகிழ்ச்சியூட்டியது. வீடு தேடி வந்து விருது வழங்கிய அந்நிகழ்ச்சியில் டி.கே.பி. தமது சிஷ்யர்களுடன் இசைத்த பொருத்தமான பாடல் நெகிழ்ச்சியூட்டியது. சேது மாதவராவ் இயற்றிய 'சாந்தி நிலவ வேண்டும்' என்ற பாடல்.

● மு. தாமோதரன், கானூர்.

? இனி வரும் காலத்தில் அஹிம்சை என்பது இல்லாமலே போய் விடுமா?

! PETA (People for Ethical Treatment of Animals) என்ற அமைப்பு எடுத்துச் சொன்னதன் பேரில், பல சர்வதேச தோல் பொருள் தயாரிப்பு நிறுவனங்கள் விழித்துக் கொண்டுள்ளன. மாடுகளைக் கொடுமைப்படுத்தி

நீக்கப்படும் தோலை வாங்க மறுத்து விட்டன. இதனால் வியாபாரம் பாதித்தாலும் பரவாயில்லை என்று உறுதியுடன் இயங்குகின்றன. ஆக, அஹிம்சை கடைப்பிடிப்பதில் ஏதோ ஓரளவு முன்னேற்றம் இருக்கத்தான் செய்கிறது.

● கே. வைத்தியநாதேஸ்வரன்,
நெய்வேலி – 3.

*? இலங்கை அரசுடன் யார் வேண்டுமானாலும் பேசலாம், எந்த அறிவுரையும் கூறலாம். புலிகளுடன் பேசுவதற்கு மட்டும் வை.கோ. ஒருவர்தான் திறமையும் தகுதியும் உடையவர் – இது எப்படியிருக்கு?*

! புலிகளின் நாடித் துடிப்பைத் தாம்தான் உணர்ந்தாற்போல பேசுவதும் அறிக்கை விடுவதும் சுலபம்; காரிய சித்தி அடைவது கஷ்டம் என்பதை அவர் எப்போதுதான் உணர்வதாம்! போய் பேசிப் பார்க்கட்டுமே!



• மகிழ்ச்சி • நெகிழ்ச்சி



• அறிக்கையும் நிஜமும்!



• முன்னோடி!



• குப்பை கணக்கு!

# அனுதாபமா? அரசியல் ஆதாயமா?

● ரா. சாலமோன்,
ஆலங்குளம்.

*? தமிழ்நாட்டின் 'வால்டர் ஸ்காட்' என்று நமது கல்கி கிருஷ்ணமூர்த்தியைக் குறிப்பிடுவதாகப் பத்திரிகையில் படித்தேன். வால்டர் ஸ்காட்டைப் பற்றிக் கூறுங்களேன்?*

! ஆங்கிலத்தில் சாகசமும், காதல் சுவையும், வீரமும் நிறைந்த சரித்திர நாவல்களை முதன் முதலில் எழுதியவர் வால்டர் ஸ்காட் தான். அமரர் கல்கி விரும்பிப் படித்த நூலாசிரியர்களுள் ஒருவரும் கூட!

● எஸ். கதிரேசன், பேரணாம்பட்டு. *

*? 'பதவி நீக்கப்பட்டவர்களெல்லாம் குப்பைகள்' என்று தன்னால் பதவி நீக்கப்பட்டவர்களைக் கிண்டலடித்துள்ளார் ஜெயலலிதா. இவர் கூடத்தான் தமிழக முதல்வர் பதவியிலிருந்து மக்களால் நீக்கப்பட்டார்...*

! வாக்களித்த மக்களையே குப்பையாக நினைப்பவர்களுக்குக் கண்ணை மறைக்கத் தானே செய்யும்!

● சுகந்தி நாகராஜன், தேவூர்.

*? 'இந்தியாவின் உதவியின்றி இலங்கைப் பிரச்னையை அமெரிக்கா கூட தீர்த்து வைக்க முடியாது' என்று இலங்கை வெளியுறவுத் துறை அமைச்சர் லக்ஷ்மண் கதிர்காமர் கூறியுள்ளாரே?*

! உண்மைதான். புலிகளுக்கும் பிரிவினைக்கும் இங்கே ஆதரவு இருக்கும் போது, அரசியல் காரணங்களுக்காக அது கட்டுப்படுத்தப்படாதபோது அமெரிக்காவோ நார்வேயோ என்ன செய்ய முடியும்?

● டி. எஸ். பாலு, சென்னை – 42.

*? எண்ணம் உறுதியாக இருந்தால் நினைத்ததைச் சாதிக்கலாம் என்கிறார்களே – இது நடைமுறையில் சாத்தியமாகுமா?*

! உறுதியாக இருந்து பாருங்களேன்!

❑ ரூ. 50 பரிசு பெறுபவர் :
அஜார்,
117, எல்டாம்ஸ் சாலை,
சென்னை - 600 018.

* ரூ. 25 பரிசு பெறுபவர் :
எஸ். கதிரேசன்,
157, எம்.ஜி.ஆர். நகர், வி.கே. சாலை,
பேரணாம்பட்டு - 635 810

# ‘தேவதா உச்சாடனம்’
# (பூஜா உபதேசம்)

ஆழ்ந்தறிந்த சித்தர்கள் ஆண்டவன் அருள் அத்தனையும் பெற்றிடும் மார்க்கம் எது என ராஜயோக வழியாக ஆராய்ந்து அதற்கான தபோ வழிகளில் கண்டுபிடித்த அதிசக்தி வாய்ந்த பூஜை தான் இந்த **‘தேவதா உச்சாடனம்’**. தவறாது எண்ணிய பலனை இடை தடையின்றி கொடுக்கின்ற குபேரத்துவம் கொண்ட பூஜை இது. கோடான கோடி செல்வம் பெற்று குபேரனான குபேரன் செய்து குபேரனான பூஜையிது - அத்தனை செல்வமும் அளவிலா நிலையில் அடைந்தாக வேண்டும் என்பதற்காக இலங்கேஸ்வரன் இராவணனும் செய்து அத்தனை செல்வமும் பெற்று அதனை நிரூபித்த பூஜை இது. பூஜை செய்து பழக்கம் உள்ளவர்களுக்கு இது மிக எளிய பூஜைதான். செய்ய செய்ய சிறப்பான செல்வ மேன்மையை தரும் இந்த பூஜை வழியாக பல சித்துக்களையும் பெறலாம். எவ்வித குறைவும் இல்லாது வாழ்தல் - எண்ணிய செல்வம் பெறுதல், எத்தனை இடையூறுவரினும் - எடுத்தெறிந்து ஒரு சுபிச்ச பாதையை ஏற்படுத்திக் கொள்ளுதல், வளமான வாழ்வு, வற்றாத செல்வம், வாகனம், மாடமாளிகை, கூடகோபுரம், மனதிற்கினிய மனையாட்டி - மாணிலத்தார் புகழுகின்ற பிள்ளைகள் மாபெரும் தொழில் வரவு குபேர செல்வம் அனைத்தும் அட்டியின்றி பெறலாம். இப்போது கற்றவர்களும் இத்தனை இனிய நலங்களையும் மனநிறைவான நிம்மதியும் பெற்றதாக எழுதி எம்மையும் - மகிழ்விக்கின்றனர் - இதனை செய்வதற்கு வேண்டியதெல்லாம் தவறாது பூஜை செய்யும் பழக்கம் ஒன்றுதான் - நிச்சயம் அந்த பழக்கம்வேண்டும். ஆனால் இந்த அருள்நிலையை கெடுக்கும் - மதுபானம் செய்வதோ, புகைபிடிப்பதோ, புகையிலை, பொடி போடுதலோ கூடவே கூடாது. இவை முற்றிலும் இருக்கவே கூடாது. இருந்தால் எவ்வித நலனும் இராது. அவர்கள் விண்ணப்பிக்கவும் வேண்டாம். தவிர இந்த அபூர்வ பூஜை வழியாக பெரிய செல்வந்தராக திகழும் விதி அமைப்பு உடையவருக்கு மட்டுமே இந்த விளம்பரம் கண்ணில்படும். இதனை கற்று இதன் வழியாக பெய்யா மழையை பெய்ய செய்யவும். பெய்யும் மழையை நிறுத்திடவும் கூட முடியும். அத்தனை தெய்வ சக்தியினை தரும். எனவே இதனை உபதேசம் பெற உரிய நல்லியல்பு உடையாரும், பூஜை செய்யும் பழக்கம் உடையவரும் இந்த பூஜா உபதேசம் பெற்றிட விரும்புகின்றேன் என்று எழுதி ஜாதக நகலை தெளிவாக எழுதி 10.07.2000 தேதிக்குள் மனு செய்து கொள்ளுங்கள். அத்தேதி தவறிடில் கடவுள் அனுமதி இல்லை என்று பொருள். இவ்வரிய பூஜையை பெண் இனத்தாரும் செய்து சிறப்பான கணவன், சீரான வாழ்வு, சிங்கார குழந்தைகள் செல்வ செழிப்பு என்று ஏராள நலங்களை பெற்று இருக்கின்றனர். எனவே அந்த விதி அமைப்பு இருப்பவர்கள் காலத்தில் மனு செய்து கொள்ளலாம்.




பிரபல ஜோதிடர், ஜோதிட ஆசிரியர்,

**ஸ்ரீமத் ஜெயவீர தேவா, யோகி**

இராஜயோகப் பயிற்சியாளர்

பிளாட் எண்.204, அண்ணா நகர்

மதுரை - 625 020.

தொலைபேசி : 533412, 650576.

# 'மம்மி'களுக்கு ஒரு வார்த்தை!

தமிழ் வழிக் கல்வியைப் பழிப்போர் யாராக இருந்தாலும் அவர்களைக் கோபிக்காமல் என்னால் இருக்க முடியவில்லை. இந்தத் தமிழ் எதிர்ப்பால் நாம் நம்மையே அழித்துக் கொண்டிருக்கிறோம்.

'தமிழில் படித்தால் பின்னாளில் வேலை வாய்ப்பு குறைந்து போகும். வெளிநாடுகளுக்குப் போகும் வாய்ப்பு பாதிக்கப்படும்' என்றெல்லாம் பூச்சாண்டி காட்டுகிறார்கள்.

நான் சவால் விடுகிறேன்: கடந்த பத்து ஆண்டுகளில் ஆங்கில மீடியத்தில் படித்துச் சிறந்த மாணவர்களில் எத்தனை பேர் அமெரிக்கா போயிருக்கிறார்கள்? புள்ளி விவரம் காட்டட்டும். ஒரு ஐந்து சதவீதம் பேர் போயிருந்தால் அதிகம்!

1990ல் உலகளாவிய வர்த்தகம், தாராளமயமாக்கல் என்ற சில சித்தாந்தங்கள் வெளியான போது நாமும் அதில் வீழ்ந்து, வெளிநாட்டு முதலீட்டை ஊக்குவிக்க வேண்டும் என்று நமது ஜன்னல்களைத் திறந்து விட்டதன் பலன் இன்று குடிதண்ணீரை விட்டர் பதினெட்டு ரூபாய்க்கு வாங்கிக் கொண்டிருக்கிறோம்.

பெப்ஸிக்காரனும், கோககோலாக்காரனும் வந்த புதிதில் 350 மில்லி ஐந்து ரூபாய்க்கு விற்று ஆசை காட்டினான். இன்று அதே 350 மில்லி பத்து ரூபாய் என்கிறான். நமக்கு இன்னும் ஆசை விடவில்லை.

தமிழில் படித்தால், தமிழில் பேசினால் ஏதோ பாவம் செய்துவிட்ட உணர்வு நமக்கு ஏற்றப்பட்டு விட்டது. அதை நாம் பிஞ்சு உள்ளங்களில் ஏற்றிக் கொண்டிருக்கிறோம். நாம் நம் தாயை இழந்து கொண்டிருக்கிறோம் என்கிற உணர்வே இல்லாமல் ஆங்கில மோகத்தில் ஒரு தாற்காலிக சுகத்தை அனுபவித்துக் கொண்டிருக்கிறோம்.

இது எங்கே போய் நிற்கும் என்பதை நினைத்தால் வேதனையாக இருக்கிறது.

'ஐந்தாம் வகுப்பு வரை தமிழ் மொழியில் கல்வி' என்பதைக் கூட எதிர்த்து கோர்ட்டுக்குப் போனவர்களை நினைத்தால் ஆத்திரம் வருகிறது.

ஆங்கில வழிக் கல்வியில் குழந்தையைச் சேர்ப்பதற்காக, தாலியை அடகு வைத்தாவது ஃபீஸ் கட்டத் தயாராக இருக்கும் தாய்மார்களுக்கு நான் சொல்லிக் கொள்வது ஒன்றே ஒன்றுதான்:

"'மம்மி'களே! நீங்கள் அடகு வைப்பது தாலியை அல்ல. உங்கள் தாயை, உங்கள் தாய்மொழியை; தமிழ் மக்களின் எதிர்காலத்தை!"



'நக்கீரன்' கோபால்

– ராணிமைந்தன்

படம்: வெங்கடேஷ்



# வேதனை

கணேசனுக்கு அந்தப் பெண்ணைத் தெரியும். தெருவில் அவள் போகும் போது பலமுறை பார்த்திருக்கிறான். திருமணமானவள். ஒரு குழந்தையும் உண்டு. குண்டான லட்சணமான முகம். நெற்றியில் அகலமான பெரிய பொட்டு. பல நாட்களாக அவள் முகம் அவனுக்கு நன்றாக அறிமுகமானது தான். அதே அடிப்படையில் அவளுக்கும் அவனைத் தெரிந்திருக்கும். அவளுக்கு வயது இருபத்தெட்டு அளவில் இருக்கலாம். எப்போதும் சிரித்த முகமாக இருப்பாள். வேறு விதமாக அவளைப் பார்த்த நினைவு அவனுக்கு இல்லை.

இதுதான் முதல் தடவை... அந்தப் பெண் எதிரில் வேகமாக வந்து கொண்டிருந்தாள். அவள் கண்களில் கண்ணீர் ததும்பியது.

நின்று திரும்பிப் பார்த்தான். அவள் அருகில் இப்போது ஒரு ஆள் வந்தான். அவள் புருஷன்காரன்தான்! அவள் அவனிடம் கெஞ்சுவது போல் ஏதோ சொன்னாள். அவள் கணவன், அவள் கன்னத்தில் பெருத்த சப்தம் கேட்கப் பலமாக அறைந்தான். தெருவில் போய்க் கொண்டிருந்தவர்கள் திரும்பிப் பார்த்தார்கள். அவள் கன்னத்தை ஒரு கையால் பிடித்துக் கொண்டு மறு கையால் அவன் கைகளைப் பிடித்துக் கெஞ்சுவது போல் அவனைப் பார்த்தாள். அவன் பார்வையைப் பொருட்படுத்தாமல் மறுபடியும் அடித்தான். தரதரவென்று அவளை இழுத்துக் கொண்டு போனான். எதற்கு அடிக்கிறான், அவர்களுக்குள் என்ன பிரச்னை என்பது யாருக்கும் புரியவில்லை. கணேசன் பார்த்துக் கொண்டிருக்கும் போதே நடுத் தெருவில் அவளுக்கு அடி உதைகள் கிடைத்தன. அவன் மேலும் அடிக்காதபடி அவன் கைகளை கெட்டியாகப் பிடித்துக் கொண்டாள்.

கணேசனுக்கு நெஞ்சு வலித்தது. அந்தப் பெண்ணின் கெஞ்சுகிற முகம் அவன் மனக்கண்ணில் நின்று வேதனை செய்தது. அவள் புருஷன் மேல் அவனுக்கு ஆத்திரமாக வந்தது. ஆனால் அவன் என்ன செய்ய முடியும்? யார்தான் என்ன செய்ய முடியும்?

ராத்திரி கணேசனுக்குத் தூக்கம் வரவில்லை. அவள் ஞாபகமாகவே இருந்தது. அவள் புருஷனைப் பற்றி நினைத்தபோது என்னமாதிரி மனிதன் அவன் என்று வெறுப்பு வந்தது. பெண் ஜென்மத்தின் தலைவிதி இப்படிப்பட்டதுதான் போலும் என்று துக்கமாக இருந்தது. யோசித்து யோசித்து எப்போது தூக்கம் வந்ததோ...

மறுநாள் பஸ் நிறுத்தத்தில் அவளைப் பார்க்க முடியவில்லை. அடுத்த நாளும், அதற்கு அடுத்த நாளும்.

கொஞ்சம் கொஞ்சமாக அந்தப் பெண்ணின் ஞாபகம் கணேசனை விட்டுப் போய் விட்டது. அவளும் அவன் கண்ணில் படவில்லை. எப்போதாவது அவளுடைய அழும் முகம் ஞாபகம் வரும். நாள்பட நாள்பட வேலை மும்முரத்தில் அந்தச் சம்பவம் அவன் மனத்திலிருந்து கரைந்து போய்க் கொண்டிருந்தது.

அன்று -

கணேசன் தற்செயலாக அவளைப் பார்த்தான். கூடவே அவள் கணவனும்... கணவனுடன் சிரித்துப் பேசிக் கொண்டிருந்தாள். அவள் நெற்றிப் பொட்டில் ஒரு பிளாஸ்திரி ஒட்டியிருந்தது. கையில் குழந்தை கூடச் சிரித்துக் கொண்டிருந்தது. அவள் கணவன் கூட சிரித்த முகமாகத்தான் இருந்தான். எங்கேயோ வெளியே புறப்பட்டுப் போய்க் கொண்டிருக்கிறார்கள் போலும்...

கணேசனுக்கு என்ன நினைப்பது என்று தெரியவில்லை. ○

ஸ்ரீனிவாஸ ராம்

வந்தே மாதரம்

இந்திய கிரிக்கெட்



2000 ஜூன் 11
விக்ரம வைகாசி 29
மலர் : 58
இதழ் : 46

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## மக்கள் மன்றம் தண்டிக்கட்டும்!

கலர் டி.வி வழக்கில் ஜெயலலிதா விடுதலையாகிவிட்டார் என்பதற்காக அ.தி.மு.கவினர் வெற்றி நடனம் ஆடி இனிப்புகள் வினியோகித்துள்ளனர். 'ஆபரேஷன் வெற்றியடைந்தது; நோயாளிதான் இறந்துபோனார்' என்று சொல்லும் கதைதான் இது!

ஏனெனில் இதே வழக்கில் குற்றம் சாட்டப்பட்ட முன்னாள் அ.தி.மு.க. அமைச்சர் செல்வகணபதி, ஐ.ஏ.எஸ் அதிகாரிகள் பாண்டே, ஹரிபாஸ்கர், சத்தியமூர்த்தி போன்ற ஏழு பேர் கோடிக்கணக்கில் முறைகேடாகச் சம்பாதித்ததாக நிரூபிக்கப்பட்டு தண்டனை பெற்றுள்ளனர்.

ஜெயலலிதா ஆட்சிக் காலத்தில்தான் இந்தத் திட்டமிட்ட முறைகேடு அரங்கேறியிருக்கிறது. அவர் ஆட்சியில் நடைபெற்ற அபூர்வமான ஒரு முறைகேடு என்று இதை ஒதுக்கிவிடவும் முடியாது. பல்வேறு ஊழல் வழக்குகளில், ஜெயலலிதாவின் அமைச்சரவை சகாக்களான சேடப்பட்டி முத்தையா, நாகூர் மீரான் போன்றோரும் மேலும் பல அதிகாரிகளும், மல்லிகா போன்ற அ.தி.மு.க பிரமுகர்களும் தண்டனை பெற்றிருக்கின்றனர்.

தனி நீதிமன்றம் அமைத்து விசாரிக்க வேண்டிய அளவுக்கு ஜெயலலிதா ஆட்சிக் காலத்தில் முறைகேடுகள் நடந்துள்ளன என்னும்போதே பொதுவாழ்வில் தொடர அவர்




தகுதியும் தார்மீக உரிமையும் இழந்தவராகிறார். போதும் போதாததற்கு ஒரு வழக்கில் அவருக்கு ஓராண்டு கடுங்காவல் தண்டனையும் விதிக்கப்பட்டு அவ்வழக்கு மேல்முறையீட்டிலிருக்கிறது.

இத்தனைக்குப் பிறகும், 'போதுமான சாட்சியங்கள் இல்லை' என்று அவரை ஒரு வழக்கில் விடுதலை செய்ததற்காக மகிழ்வதும் கொண்டாடுவதும் எவ்வளவு அறியாமை!

''முதல்வர், கடை கடையாகச் சென்று டீ.வி விலையை விசாரிக்க முடியாது. அதிகாரிகள் தரும் சிபாரிசைத்தான் ஏற்க முடியும். ஜெயலலிதா முறைகேடில் ஈடுபட்டதற்கான ஆதாரம் இல்லை'' என்பது நீதிபதி ராதாகிருஷ்ணனின் தீர்ப்பு.

சட்டப்படியும் சாட்சி அடிப்படையிலும்தான் நீதிபதி தீர்ப்பு வழங்க முடியும். வலுவான சாட்சியங்கள் உள்ளன என்று ஏற்று, கொடைக்கானல் ஹோட்டல் கட்டட வழக்கில் ஜெயலலிதாவுக்குக் கடுங்காவல் தண்டனை வழங்கியவரும் இதே நீதிபதிதான்.

கலர் டீ.வி வழக்கில் ஜெயலலிதா பேரிலான குற்றச்சாட்டு நிரூபணமாகாவிட்டாலும் தொலைக்காட்சிப் பெட்டிகள் வாங்கியதில் ஊழல் நடந்திருப்பது நிரூபிக்கப்பட்டுள்ளது. எனவே, அதிகாரிகளும் அமைச்சரும் கோடிக்கணக்கில் ஊழல் செய்ததைக்கூட உணராத ஏமாளி முதல்வராக ஜெ. செயல்பட்டாரா? அல்லது முறைகேடுக்கு உடந்தையாக இருந்து தமக்கு எதிரான சாட்சியங்களைக் கவனமாக மறைத்துச் செயல்பட்டாரா? என்ற கேள்விகள் எழுவதைத் தவிர்க்க முடியாது.

ஒரு நிரபராதி எக்காரணம் கொண்டும் தண்டனை பெற்று விடக் கூடாது என்ற உயர் நோக்குடன் வகுக்கப்பட்டது இந்திய கிரிமினல் சட்டம் என்பதால் பல குற்றவாளிகளும் தப்ப முடிகிறது. சட்டத்தின் உயர்நோக்கை அநியாயமாய்ப் பயன்படுத்திக்கொண்டு பாதுகாப்புடன் ஊழலில் ஈடுபடுவதற்கும் இது




வாய்ப்பளித்திருக்கிறது.

கிரிமினல் சட்டத் திருத்தங்கள் மூலம்தான் இந்த முறைகேடுக்கு முற்றுப்புள்ளி வைக்க முடியும். ஆனால் அது சுலபத்தில் நடந்து விடக் கூடியது அல்ல. சட்டமன்றங்களிலும் நாடாளுமன்றத்திலும் நம்மை ஆளும் மக்கள் பிரதிநிதிகள் மனம் வைத்தால்தான் அந்த நல்லது நடக்கும்.

ஆகவே, அந்த மன்றங்களுக்கு நாம் யாரைத் தேர்ந்தெடுத்து அனுப்புகிறோம் என்பதைப் பொறுத்தே முன்னேற்றத்தை எதிர்பார்க்கலாம்.

கணக்கு வழக்கில்லாத முறைகேடுகளில் ஈடுபட்டு, முறைகேடுகளை ஊக்குவித்து, முறைகேடுகளைக் கண்டு கொள்ளாமலிருந்து, வகை வகையாக மக்கள் பணத்தைச் சுரண்டி சொத்து சேர்த்தவர்களை மீண்டும் அதிகாரத்தில் அமர்த்தினால் என்னாவது? ஏற்கெனவே நடந்த தவறுகளை மூடி மறைக்கவும் நியாயப்படுத்தவும் இனி வரும் காலத்தில் பாதுகாப்புடன் தவறு செய்யவும் தேவையான ஏற்பாடுகளைத்தான் அவர்கள் செய்து கொள்வார்களேயன்றி மக்களையோ அரசியல் சூழலையோ முன்னேற்ற முயற்சி செய்ய மாட்டார்கள்.

உலகின் பரம ஏழை நாடுகளுள் ஒன்று இந்தியா. அடிப்படைத் தேவைகளின்றி வறுமைக்கோட்டுக்குக் கீழே பெரும்பான்மை மக்கள் வாழும் தேசம். அத்தகைய நாட்டில் கோடானு கோடி ரூபாய்க்கு வஞ்சக ஊழலில் ஈடுபடுவது அந்த ஏழைகளின் வயிற்றில் ஓங்கி அடிக்கும் குரூர பாதகம்.

தங்களைப் பாதுகாத்துக் கொள்ள இந்த எளிய மக்களிடமிருக்கும் ஒரே ஆயுதம் வாக்குரிமைதான். அதைச் சரியாகப் பயன்படுத்தினால் நீதிமன்றத்தால் கொடுக்க முடியாமல் போன தண்டனையை மக்கள் மன்றம் கொடுக்கலாம். ○

*நான்கு லட்சத்துப் பதினான்காயிரம் மாணவர்கள் எழுதிய ப்ளஸ்டூ தேர்வில் மாநிலத்திலேயே முதலிடம் பிடிப்பது மிகச் சுலபம் என்று நிரூபித்திருக்கிறார்கள், பல மாணவர்கள். அவர்களில் சில சாதனை மாணவ, மாணவிகளைச் சந்தித்தோம்.*

• ஸ்ரீவித்யா



# கிரிக்கெட், மியூசிக், படிப்பு!

சென்னை கோபாலபுரம் முதல்வர் வீடு அருகேயுள்ள டி.ஏ.வி. பள்ளி மாணவன் வித்யா சாகர். இயற்பியல், வேதியியல், கணிதம் ஆகிய மூன்று பாடங்களில் நூற்றுக்கு நூறு பெற்று, மாநிலத்திலேயே முதலிடத்தைப் பிடித்துள்ளார். இவரது மொத்த மதிப்பெண்கள் ஆயிரத்து நூற்று எண்பத்தொன்று. ஆறாம் வகுப்பில் கணிதப் பாடத்தில் அறுபது மதிப்பெண்கள் பெற்றதே மிகக் குறைந்த மதிப்பெண் என்று சொல்லும் வித்யாசாகர், பத்தாம் வகுப்பிலும் நானூற்று ஐம்பது மதிப்பெண்கள் வாங்கினாராம். குவிஸ் போட்டிகளில் அதிக ஈடுபாடு கொண்ட இவருக்கு மர்மதேசம் டீவி தொடர் என்றால் கொள்ளைப் பிரியம் என்கிறார் தற்போது 'சித்தி' தொடரை ஒரு எபி சோட் விடாமல் பார்த்து வரும் இவருக்கு ஒரு சாஃப்ட்டுவேர் புரொபொஷனல் ஆக வேண்டும் என்பதுதான் லட்சியம். அம்மா அப்பாவின் வழிகாட்டுதல் இருந்தாலும் அவர்கள் 'படி' என்று என்னை வற்புறுத்தியதே கிடையாது. மாறாகப் படிப்பதற்கு நல்ல, அமைதியான சூழ்நிலையை உருவாக்கிக் கொடுத்தார்கள். இப்போது கோர்ஸ் தேர்ந்தெடுப்பதிலும் எனது விருப்பத்திற்கே விட்டு விட்டார்கள் என்கிறார் வித்யா சாகர். கடைசி மூன்று மாதங்கள் தான் சின்ஸியராகப் படித்தாராம். அதற்கு முன் என்ன செய்து கொண்டிருந்தீர்கள் என்றால், டீவி.யில் கிரிக்கெட் பார்த்துக் கொண்டிருந்தேன் என்கிறார் கூலாக. மாநில அளவில் முதலிடம் வந்து விட்ட சந்தோஷத்தில் ரிலீசான எல்லாப் படங்களையும் ஒரே மூச்சில் பார்த்து தீர்க்கப் போகிறேன் என்று சொல்லும் இவர், டைரக்டர் ஷங்கரின் பரம ரசிகராம்.

ரம்யாவின் சாதனை வித்தியாசமானது. "எஸ்எஸ்எல்சியிலும், ப்ளஸ் டூவிலும் ஒவ்வொரு வருடமும் ஏதாவது ஒரு பாடத்தில் முதலிடத்தைப் பிடித்து விடும் டி.ஏ.வி. பள்ளியில்தான் நானும் பத்தாம் வகுப்பு முடித்தேன். அதன் பிறகு மேற்கு மாம்பலத்தில் இருந்து, மௌண்ட்ரோடு சென்று படிப்பது சிரமமாக இருந்தது. வேறு எந்தப் பள்ளியில் படிக்கலாம் என தோழிகளிடம் விசாரித்தேன். அசோக் நகர் அரசு பெண்கள் மேல்நிலைப் பள்ளியில் 'கோச்சிங்' அருமையாக உள்ளது அங்கே சேரலாம் என்றார்கள். எனது பெற்றோர்களுக்கு நம்பிக்கை

வரவில்லை. ஒரு அரசுப் பள்ளியில் போதனை தர மாக இருப்பதாவது என்று சப்தம் போட்டார்கள். நானே பள்ளிக்கு நேரில் சென்று பள்ளியின் தேர்ச்சி நிலவரம் குறித்துக் கேட்ட போது நம்பவில்லை. காரணம் 99.5 சதவீதம் மாணவிகள் கடந்த பத்து வருடமாக தேர்ச்சி பெறுவதோடு, ஒவ்வொரு வருடமும் பல



• அரவிந்த்



• ரம்யா

பாடங்களில் முதலிடத்தைப் பிடித்து விடுகிறார்கள். அதற்குக் காரணம் பள்ளி நிர்வாகமும், ஆசிரியர்களும்தான். அதே பள்ளியில் படித்துத்தான் நான் கணிதம், வேதியியல், ஆகியவற்றில் முதலிடத்தையும், கம்ப்யூட்டர் சயின்சில் இரண்டாவது இடத்தையும் பிடித்தேன்" என்கிறார். செளம்யாவின் கிளாசிக்கல் இசையைக் கொஞ்ச நேரம் வாக்மேனில் கேட்டு விட்டு பிறகு படிப்பேன். எனது மூளையைப் புத்துணர்ச்சியோடு வைத்துக் கொள்ள இசைதான் எனக்கு ஒரே துணை என்று சொல்லும் ரம்யா இதுவரை வாங்கிய மிகக் குறைந்த மதிப்பெண் தொண்ணூறு! இவருக்கும் சாஃப்ட்டுவேர் என்ஜினியர் ஆவதில்தான் விருப்பம்.

ஸ்ரீவித்யா வீட்டிற்குப் போன போது மனசு கனத்துக் கொண்டது. பத்தடி அகலத்தில் ஒரு சிறு கூடம், நாலடி அகலத்தில் ஒரு சமையல் அறை. இப்படியொரு ஜன்னல் இல்லாத சின்ன வாடகை வீட்டில் வசிக்கும் ஏழை பெற்றோரின் மகளாக சாதிக்க முடிந்திருக்கும் ஸ்ரீவித்யா, மேற்கு மாம்பலம் ஸ்ரீ அகோபிலம் பள்ளி மாணவி. ஆயுர்வேதம் பாடத்தில் மாநிலத்திலேயே முதலிடம் பிடித்த இவர் கணக்கியலில் 199 மதிப்பெண்களும், நிர்வாகக் கணிதத்தில் 199 மதிப்பெண்களும், காமர்சில் 192 மதிப்பெண்களும் பெற்றுள்ளார். சார்டட் அக்கௌண்ட்டென்ட் ஆவதுதான் லட்சியம் என்று சொல்லும் வித்யாவுக்குக் கம்ப்யூட்டர் கற்றுக் கொள்ள ஆசை... ஆனால் வசதி?

அதே அகோபிலம் பள்ளி மாணவரான அரவிந்த் புள்ளியியல் பாடத்தில் மாநிலத்திலேயே முதலிடம் பிடித்துள்ளார். கணக்கியலில் செண்டமும், கணிதம், வணிகவியல் ஆகியவற்றில் தலா 199 மதிப்பெண்களும் பெற்று சாதனை படைத்திருக்கும் இவருக்கு இருபத்து நான்கு மணி நேரமும் கிரிக்கெட் ஜுரம் தான். மேட்ச் பிக்ஸிங் மாதிரி ஆயிரம் தாக்குதல்கள் வந்தாலும் கிரிக்கெட்டை ஒன்றும் செய்ய முடியாது என்ற அரவிந்த், இந்தியா இலங்கை இடையேயான மேட்சை சுவாரஸ்யமாகப் பார்த்துக் கொண்டே நம்மிடம் பேசிக் கொண்டிருந்தார். "பரீட்சைக்கு ஒரு மாதத்திற்கு முன்புதான் சீரியஸாகப் படித்தேன். நான் வாங்கிய மிகக் குறைந்த மதிப்பெண் தொண்ணூறு" என்ற அரவிந்த், கணக்குத் தணிக்கையாளராக ஆகியே தீருவேன் என்கிறார்.

• வித்யாசாகர்



— லியோ

படங்கள்: வெங்கடேஷ்



கானவர்களை அ.தி.மு.க.வில் கொண்டு சேர்த்தவர் இவர்தான்.

சுடுகாட்டில் கொட்டகை போட்டதில் ஊழல், ஹவுஸிங்போர்டு வீடுகளுக்கு இரும்பு கிரில்கள் வாங்கியதில் ஊழல் என்று இவர் மீது வழக்குகள் விசாரணை நிலையில் உள்ளன. முக்கியமாக சி.பி.ஐ. விசாரிக்கும் சுடுகாட்டுக் கொட்டகை வழக்கில், "லெட்டர் பேட்" கூட்டுறவுச் சங்கங்களை உருவாக்கி அவற்றுக்குக் கொட்டகை கட்ட ஆர்டர் கொடுத்து, பல லட்சம் ரூபாய் ஸ்வாஹா செய்யப்பட்டதுதாம். இதில் குறிப்பிடத்தக்க விஷயம் என்னவென்றால், போலி சங்கங்களுக்குக் கொடுக்கப்பட்ட செக்குகள், அம்மாவைச் சுற்றியிருந்தோர்களால்தான் காசாக்கப்பட்டு பங்களாக்களில் முதலீடு செய்யப்பட்டதாம்.

# செல்வகணபதி வாய் திறந்தால்...?

தனி நீதிமன்றங்களில் வழக்குகளைச் சந்திக்கும் அ.தி.மு.க. மாஜி அமைச்சர்களில் செல்வகணபதிக்கு ஒரு சிறப்பு(!) உண்டு. ஜெயலலிதாவுக்கு அடுத்தபடியாக இவர் மீதுதான் அதிக வழக்குகள் போடப்பட்டிருக்கின்றன. குற்றச்சாட்டுக்கள் பதிவுசெய்யப்பட்ட நான்கு வழக்குகளில் கொடைக்கானல் ஓட்டல் வழக்கில் இரண்டு வருடமும், கலர் தொலைக்காட்சி வழக்கில் ஐந்து வருடமும் தண்டனை பெற்றிருக்கும் செல்வகணபதியின் எம்.பி. பதவிக்கு, உச்சநீதிமன்றத்தின் முடிவான தீர்ப்பு வரும் வரை ஆபத்தில்லை என்கிறார்கள். இந்த நான்கு வழக்குகளைத் தவிர இவர் மீது இன்னமும் இரண்டு வழக்குகளை பதிவுசெய்ய சி.பி.சி.ஐ.டி. பூர்வாங்க விசாரணை நடத்தியிருக்கிறது.

டில்லி ஜவஹர்லால் நேரு பல்கலைக் கழகத்தின் பட்ட மேற்படிப்பு முடித்தவர் திருச்செங்கோட்டுக்காரரான செ. கணபதி. இவரது ஆங்கிலப் புலமைதான் ஜெயலலிதாவிடம் நெருக்கத்தை ஏற்படுத்தியது. அ.தி.மு.க. ஆட்சியில் கடைசி ஒரு வருட காலத்தில் தி.மு.க., பாட்டாளி மக்கள் கட்சிகளிலிருந்து நூற்றுக்கணக்

ஆட்சி போன பிறகும் இவரிடமிருந்து வசூல் செய்வதை கட்சித் தலைமை விடவில்லை என்கிறார்கள். குறிப்பாக தனி நீதிமன்றங்களில் ஜெயலலிதாவுக்காக ஆஜரான 'படா', 'படா' தில்லி வழக்கறிஞர்களுக்கு இவர்தான் பணப் பட்டுவாடா செய்து வந்தாராம்.

செல்வகணபதி வாய் திறந்தால் ஜெயலலிதா மற்றும் அவர் சுற்று வட்டாரம் வழக்குகளிலிருந்து தப்பிக்க முடியாது என்கிறார்கள். "ஆனால் கட்சித் தலைமைக்கு அண்ணன் கடைசி வரை விசுவாசமாக இருக்க நினைக்கிறார்" என்கிறார் அவரது நண்பர் ஒருவர்.

— கௌசி



நீங்கள் பாட வேண்டிய பாடலுக்குரிய முதல் எழுத்து 'எ' அல்லது 'ஏ'. தமது இனிய குரலில் அப்துல் ஹமீது சொன்னதும் அடுத்த நொடியில் ஆரம்பித்தார் வேலூரைச் சேர்ந்த கணபதிகுமார் என்ற இளைஞர்.

"என்னவளே... அடி... என்னவளே..." என்று பாடியதும், அரங்கம் ரசித்துக் கைதட்டியது.

அடுத்து சென்னையைச் சேர்ந்த கிருத்திகா பாட வேண்டிய வாய்ப்பு. முதலெழுத்து மறுபடி எ அல்லது ஏ. 'ஏதோ ஒரு பாட்டு என் காதில் கேட்டு' என்று பாடினார். இரண்டு பேருக்கும் சரியான போட்டிதான்!

இருவரும் பாட்டுக்குப் பாட்டெடுத்துப் பாடிக் கொண்டே இருக்க, சட்டென்று கணபதிகுமாரின் பாட்டில் வார்த்தைத் தடுமாற்றம்!

''நம்பிக்கையோடு பாடிக் கொண்டிருந்த உங்கள் பாட்டிலே, பாதியில் தடுமாற்றம். மேலும் தொடர்ந்து

# சோகத்தில் [illegible]!

அற்புதமான குரல்வளம் படைத்த அப்துல் ஹமீது 'எனக்குப் பாட்டு பாட வராது' என்கிறார். கடந்த முப்பத்திரண்டு ஆண்டுகளாக இலங்கை வானொலியில் தொடங்கி, பாட்டுக்குப் பாட்டு நடத்தி வரும் அவருடன் ஒரு மினி பேட்டி!

''வானொலியில் பாட்டுக்குப் பாட்டு நடத்துவதற்கும், டெலிவிஷனுக்காக நடத்துவதற்கும் என்ன வித்தியாசம்?''

''டெலிவிஷனில், பாடகர்களை, நேரடியாகப் பார்க்க முடிவதால், திறமையானவர்கள், எளிதில் பாபுலராகி விடுகிறார்கள். டி.வி.யில் தோன்றுவோர் உடை விஷயத்தில் கொஞ்சம் அதிக கவனம் செலுத்த வேண்டியுள்ளது. மற்றபடி பெரிய வித்தியாசமில்லை.''

''இலங்கையில் நடத்தியதற்கும், இந்தியாவில் நடத்துவதற்கும் என்ன மாற்றம் உணர்கிறீர்கள்?''

''இலங்கை ஒரு சிறு பிரதேசம். நேயர்கள் பலர் என்றாலும், பங்கேற்பவர்கள் குறைவுதான். ஒரு நேயர், பல தடவை பங்கேற்றதும் உண்டு. ஆனால் இங்கே ரெஸ்பான்ஸ் அதிகம். அகில இந்திய அளவில், அந்தமானிலிருந்து கூட வந்து கலந்து கொண்டவர்கள் உண்டு. அங்கே நாலு மணி நேரம் ஒலிப்பதிவு நடக்கும். இங்கே தொடர்ந்து நாலு நாள் ஒளிப்பதிவு.

''பாடல்களின் வரிகளில் ஒரு வார்த்தை பிழை என்றால் கூட சட்டென்று கண்டு பிடித்து விடுகிறீர்களே! இதன் சூட்சமம்

பாட்டுக்குப் பாட்டு நிகழ்ச்சியில் பங்கேற்கும் வாய்ப்பை நீங்கள் இழக்கிறீர்கள்'' என்று ஹமீது



பாடிக் கொண்டேயிருந்த போது 'மை'னா என்றதும் மணி ஓசை! ராம் மகேஷ் 'மைனா, மைனா மாமன் புடிச்ச மைனா...' பாடினார். மறுபடியும் 'மை'யில் மணி ஓசை! கிருத்திகா 'மைனாவே மைனாவே' என்று ஆரம்பிக்க, சீட் நுனியில் அமர்ந்து விறுவிறுப்பாக நிகழ்ச்சியை ரசித்தனர் பார்வையாளர்கள்.



• ரமேஷ் பிரபா

சில நிமிடங்களில் அழைக்கப்பட்டவரைக் கண்டதும் அரங்கம் ஆச்சரியத்தில் மூழ்கியது. ஒரு முதிய பெண்மணி. (இவர் மேடையேறிய கதை சுவையானது. நிகழ்ச்சியன்று காலையில்

# பாட்டி பாடிய பாட்டு!

பாட்டுக்குப் பாட்டு நிகழ்ச்சியை வழங்கும் லலிதா ஜுவல்லரிக்குச் சென்று, 'நான் கண்டிப்பாக ஒரு பாட்டா

சொல்ல, கணபதிகுமார் ஏமாற்றத்துடன் நடையைக் கட்டினார்.

பிறகு வந்தவர் ராம் மகேஷ்.

'கொஞ்சும் மைனாக்களே' என்று ஆரம்பித்து

---

என்ன?''

''ரேடியோ அறிவிப்புக்காக பாடல், அதன் படம், பாடியவர் பாடலாசிரியர் உட்பட பல தகவல்களையும் பதிவுசெய்த அனுபவம் கைகொடுக்கிறது. அது மட்டுமில்லாமல், முப்பத்து இரண்டு வருடங்களாக இதிலே மூழ்கி விட்டதும் ஒரு காரணம். இன்னொன்று, உங்களுக்குக் கூடப் பாடத் தெரியாமல் இருக்கலாம். ஆனால் பாடல் வரிகளைக் கேட்டுக் கேட்டு மனத்தில் பதிந்து விடும். எனவே தப்பு என்றால் சட்டெனக் கண்டுகொள்ளலாம். இதுவும் தவிர, போட்டியில் பங்கேற்பவர்கள் பெரும்பாலும், ஒவ்வொரு காலகட்டத்திலும் மிகப் பிரபலமான பாடல்களைத்தானே பாடுகிறார்கள்!''

''மறக்க முடியாத அனுபவங்கள்?''

''திரிகோணமலையில் ஒரு ஆணும், பெண்ணும் நிகழ்ச்சியில் கலந்து கொண்டு பாட்டுக்குப் பாட்டு பாடினார்கள். அனைத்தும் காதல் தோல்விப் பாடல்கள். அப்புறம்தான் தெரிந்தது அந்த இருவரும் முன்னாள் காதலர்கள். இந்தியாவில் இந்த நிகழ்ச்சியில் கலந்து கொண்டு, அற்புதமாய்ப் பாடிய ஒருவர், நிகழ்ச்சி முடிந்து வீடு திரும்புகையில் சாலை விபத்தில் மரணமடைந்து விட்டார். அந்தப் பகுதி ஒளிபரப்பான போது குடும்பத்தினருக்கு அனுதாபம் தெரிவித்தது மனத்தைப் பிழிந்த சோகம். இலங்கையில் ஒரு தடவை ஓர் இளைஞர், பாட்டுக்குப் பாட்டு நிகழ்ச்சியில் கலந்து கொண்டதை வாழ்க்கையின் உச்சகட்ட சந்தோஷமாய்க் கருதி, நிகழ்ச்சியில் கலந்து கொண்டு, தன் விருப்பப் பாடலைப் பாடிவிட்டு, அன்றே தற்கொலை செய்து கொண்டது சோகத்தின் கிளைமாக்ஸ்!



* ஹமீது



## கலக்கல்! கழக ஸ்டைல்!!

சென்னை ராயபுரம் சுழல்மெத்தை அருகில் பா.ஜ.க.வின் தமிழகத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள டாக்டர் கிருபாநிதிக்குப் பாராட்டுக் கூட்டம் சமீபத்தில் நடைபெற்றது. மேடையை சினிமா செட் போல அட்டகாசமாக அமைத்திருந்தார்கள். இதற்காக காலையிலிருந்தே அந்தப் பகுதியில் போக்குவரத்து நிறுத்தப்பட்டது. பாராட்டு விழா புதிய தலைவருக்கு என்றாலும் மேடையில் நடுநாயகமாக பொதுச் செயலாளர் இல. கணேசனின் படம் பெரிதாக வைக்கப்பட்டிருந்தது. வாஜ்பாயும், அத்வானியும் அவரின் இருபுறமும் காட்சியளித்தார்கள். ''யார் தலைவராக வந்தாலும், எங்களைப் பொறுத்தமட்டில் தமிழக பா.ஜ.க.வுக்கு வழிகாட்டி எல்.ஜி.தாங்க'' என்றார் தொண்டர் சந்தானம். புதிய தலைவருக்கு மலர்க் கிரீடம், மலர் செங்கோல் என்று கழகப் பாணியில் கலக்கி விட்டார்கள். மேடையமைப்பதில் எடுத்துக் கொண்ட அக்கறையில் சிறிதளவு எடுத்துக் கொண்டிருந்தால் நல்ல கூட்டத்தைக் கூட்டியிருக்கலாம்!

– கௌசி

படம் : ராஜன்

---

வது பாட வேண்டும்' என்று கேட்டிருக்கிறார். அவர்கள், ஹமீதைப் போய்ப் பாருங்கள். அவர் அனுமதித்தால் பாடலாம். இல்லையெனில் ஒன்றும் செய்ய முடியாது' என்று அப்துல் ஹமீது பக்கம் கைகாட்டி விட்டனர். அம்மையார், ஹமீதைப் பார்க்க வாய்ப்புக் கேட்டு பேச ஆரம்பிக்கும் முன்பு, 'அமுதும் தேனும் எதற்கு' என்று ஒரு பாட்டை எடுத்து விட்டிருக்கிறார். அப்படி ஒரு அசத்தல் குரல். ''நீங்கள் கண்டிப்பாய் மேடை ஏற வாய்ப்பு தருகிறேன்'' என்று கூறி விட்டார் ஹமீது. ஒரு பாட்டு பாடுவதற்குப் பதிலாக, போட்டியில் பங்கேற்கவே வாய்ப்பு கிடைத்து விட்டது. கடைசியில் ஒரு தங்க நாணயமும் அடித்துச் சென்றார் அந்தப் பாட்டி!

சன் டி.வி.யில் வாரா வாரம் ஒளிபரப்பாகும் இந்தப் பாட்டுக்குப் பாட்டு நிகழ்ச்சி, ஐந்து வருடமாக நடந்து கொண்டிருக்கிறது. முதல் நிகழ்ச்சியை பி. சுசீலா குத்து விளக்கேற்றி துவக்கி வைத்தார். அண்மையில் இருநூற்றைம்பதாவது நிகழ்ச்சி ஒளிப் பதிவான போது, டி.எம். சௌந்தரராஜன் வந்து சிறப்பித்தார்.

இதற்கு முன் ஈரோட்டில் பதிவுசெய்யப் பட்டதுதான் இப்போது ஒளிபரப்பாகிக் கொண்டிருக்கிறது. சென்னையில் அண்ணா ஆடிடோரியத்தில் இரண்டு லட்சம் செலவில் செட் போட்டு, நாலு நாட்கள் அரங்கம் நிறைந்த ரசிகர்களுடன் ஜாம் ஜாம் என்று ஒளிப்பதிவானது. கமல் முதல் பாப் ஷாலினி வரை பலர் சிறப்பு அழைப்பாளர்களாய் பங்கேற்றுச் சிறப்பித்தனர்.

''சுமார் ஆறாயிரம் பேர்களை, அப்துல் ஹமீது நேரடியாக வர வழைத்து, பாடச் சொல்லிக் கேட்டு A+, A, B+, B, C+, C, தவிர தேறாத கேஸ்கள் என்று தரம் பிரித்தார். தேறியவர்கள் சுமார் நானூறுதான். இதிலும் 'B' வரைதான் நிகழ்ச்சியில் பங்கேற்க அழைக்கப்பட்டனர். விண்ணப்பித்தவர்கள் எவரையும் ஏமாற்றாமல், நேர்முகத் தேர்வுக்கு அழைத்ததே பெரிய விஷயம். பலர், அப்துல் ஹமீதின் பல்லாண்டு ரசிகர்கள் என்பதால், தேர்வாகிறார்களோ இல்லையோ ஹமீது சாரை சந்திப்பதையே பெரும் வாய்ப்பாக நினைத்து மகிழ்ச்சியடைவார்கள்'' என்கிறார் நிகழ்ச்சியைத் தயாரிக்கும் ரமேஷ் பிரபா.

''இந்த 'பாட்டுக்குப் பாட்டு' நிகழ்ச்சி மூலம் அறிமுகமான பலர் இன்று தமிழ் நாட்டில் சிறு நகரங்களில் இருக்கும் இசைக் குழுக்களில் முக்கியப் பாடகர், பாடகிகளாக இடம் பெற்று இருப்பது எங்களுக்குப் பெருமை'' என்று 'பிளவுஸ்' காலரைத் தூக்கி விட்டுக் கொள்கிறார் விஜயலட்சுமி ரமேஷ் (பிரபா).

ஸ்கிரிப்ட் : எஸ். சந்திரமௌலி

# ஒரு சிறிய முதலீடுதான். ஆனாலும் மதிப்புமிக்க வீட்டுமனை

# ஸ்ரீ ரங்கா நகர்

# SRI RANGA NAGAR

(ஹிந்துஸ்தான் மோட்டார் அருகில்)

DTCP APPROVED HOUSING PLOTS (904/90)

## திருவள்ளூர்



**சிறப்பு அம்சங்கள்**

• மாவட்ட தலைநகர் • தாராளமான பஸ் மற்றும் ரயில் வசதிகள் • அகலமான, வசதியான தார் ரோடு • உடனடியாக வீடு கட்டலாம், அருகிலேயே வீடுகள் • சுவையான மிகுதியான நிலத்தடிநீர் • வேகமாக வளர்ச்சியடையும் இடம் • திருவள்ளூர்-ஸ்ரீபெரும்புதூர் நெடுஞ்சாலையில் உள்ளது • சுத்தமான பத்திரம் • நம்பகமான நிறுவனம் • 5 வருட மனை பாதுகாப்பு சேவை.

**FREE TRIPS FOR SITE DAILY AT 6.00 A.M., 11.00 A.M. & 3.00 P.M.**

**Tel : 435 7721 / 31 / 61 / 81. Telefax : 4353183 Cell : 98400 44018**




## BLB Estates (P) Ltd.

S-3, "RAMANA FLATS", No.27, RATHNA NAGAR,
Off : ANNA SALAI, TEYNAMPET, CHENNAI - 600 018.
(Behind APOLLO CANCER HOSPITAL & PETROL BUNK)

**வர்த்தகத்தில் நேர்மை; பணியில் பொறுப்பு**

# ஜிகினா



ஏதோ நாற்பத்தியேழு நாள் விரதமிருந்து கோவிலுக்கு வருவது போல அசோக்கும், அன்புச் செல்வியும் பார்க்குக்கு வருகிறார்களே தவிர, காதல் என்னவோ திருவிளையாடல் சினிமாவில் சிவாஜிகணேசனின் பாட்டுக்குக் கட்டுப்பட்டு, காற்று-கடலலை எல்லாம் நின்று போனது போல நின்றே போய் விட்டது...

'காதலாவது கடாரங்காயாவது...'

அசோக்கின் காதுக்குள்-வார்டனின் கோரச் சிரிப்பு.. மறுபடியும் மறுபடியும் இந்தச் சதிவேலையை யார் செய்திருப்பார்கள் என்பதில்தான் இருவரின் ஆராய்ச்சியும்.

''ஏன் அன்பு... இந்த வார்டனின் மொட்டைத் தலைக்கும் நம்மைப் பெத்த புண்ணியவான்களுக்குப் போன மொட்டைக் கடுதாசுக்கும் சம்பந்தம் இருக்குமோன்னு தோணுது?''

அன்புச் செல்வி- சமீபத்தில்தான் முப்பது ரூபாய் கொடுத்து 'ட்ரிம்' செய்த, தனது வில் புருவத்தை உயர்த்தினாள்...'

வேறொரு கணமாக இருந்திருந்தால்- அசோக் தான் இருக்கும் சுற்றுப்புறச் சூழ்நிலையை மறந்து, கால்குலேட்டரைத் தொலைத்த அம்பிகாபதி போல நூறாவது பாடலாக இவளது புருவத்தைப் பற்றிப் பாடியிருப்பான்.

என்ன செய்வது- காலத்தின் கோளாறு. இருபத்தியோராம் நூற்றாண்டின் அம்பிகாபதி-அமராவதிகளுக்கு வாட்ச் மேனிலிருந்து வார்டன் வரையில் அத்தனை பேரும் சத்ருக்கள்தான்.

''நீ எப்படி வார்டன்தான் எழுதியிருப்பார்னு சொல்லலாம்? மொட்டைத் தலைக்காரங்கதான் மொட்டைக் கடுதாசு எழுதணும்னா, நம்ம வாட்ச்மேன் சிங்காரத்துக்கு கூடத்தான் தலை வழுக்கை... ஆனா ஒண்ணு.. இந்த லவ் மேட்டர் உன் ஃபிரண்டு கோவிந்து, என் தோழி மங்களா தவிர வார்டனுக்கும் வாட்ச்மேனுக்கும்தான் தெரியும்.''

**பத்மா ரவிசங்கர்**

''கோவிந்து கிராப் மன்னன்... மங்களாவுக்குத்தான் மேட்டு நெத்தி... உச்சந்தலையில் இருந்துதான் வகிடே ஆரம்பிக்கும்... அதாவது இளம் வழுக்கை...''

அசோக் கடித்துத் துப்பிய நகங்களைப் பொறுக்கிப் போட எக்ஸ்னோராவிலிருந்து குப்பை வண்டிதான் வர வேண்டும். இன்னமும் கடித்தால் லவ் லெட்டர் எழுத விரலே மிச்சமிருக்காது போல.

''சரி... மொட்டைக் கடுதாசிய விட்ருவோம்... அந்த பாத்ரூம் டயலாக். அதை யார் எழுதியிருப்பாங்க. எனக்கென்னவோ, வார்டன் அந்த அளவுக்குப் போக மாட்டாருன்னு தோணுது...''

''எப்படிச் சொல்றே...''

''பாத்ரூம் உள்ளே- மனுஷன் ரெண்டு நிமிஷம் நிக்கறதுக்குள்ளயே மூர்ச்சை போட்டு விழுந்துடுவான்- அத்தனை 'கப்'பு.... இதுல ஸ்டோரி, டயலாக் எல்லாம் எவனால முடியும்? அப்படிப் பார்க்கப் போனா இந்த 'ஸ்மெல்' பழக்கப்பட்ட ஒரே ஆத்மா வாட்ச்மேன் சிங்காரமாத்தான் இருக்கும்னு தோணுது. எனக்குத் தெரிஞ்சு நம்ம வார்டன் மத்தியான டீயிலே கூட, 'ரூம் ஸ்ப்ரே' அடிச்சிட்டுத்தான் குடிப்பாரு.''

அன்பு- தாவணியை இழுத்துச் செருகிக் கொண்டு 'விருட்'டென எழுந்தான்.

''எங்கே போறே?''

''உம்... அந்த சிங்காரத்தை உண்டு இல்லைன்னு ஒரு கை பார்க்கலே... என் பேரு அன்புச் செல்வி இல்லே... அசட்டுச் செல்வின்னு மாத்தி வச்சுக்கறேன்....''

அசோக், கண்களை இறுக்க மூடிக் கொண்டான். அப்படியும் வாட்ச்மேன் சிங்காரம், காக்கிச் சட்டையெல்லாம் டார்டாராகக் கிழிய பைத்தியம் பிடித்துத் தெருவில் அலைவது போல ஒரு ஃபிரேம்.

மூடிய இமைக்குள் வந்து நின்றது.

''....ப்பா... இந்தப் பொம்பளைங்களே ஹாரிபிள்....''

''அவன், அன்புச் செல்வி போய் விட்டாளா என்பதை உறுதிப் படுத்திக் கொண்டு- மெள்ள

## தங்கச் சங்கிலி பரிசு!

இத் தொடர்கதையை வாரம் ஒரு எழுத்தாளர் என்று பத்து எழுத்தாளர்கள் எழுதுகிறார்கள். கவனமாகப் படித்து வாருங்கள். அடுத்த வாரத்தில் ஒரு கேள்வி உங்களுக்காகவே தயாராக இருக்கிறது. சரியாக பதிலளிப்பவர்களுக்குப் பரிசாகக் காத்திருக்கிறது தங்கச் சங்கிலி! பலர் சரியாக எழுதியிருந்தால் குலுக்கலில் ஒருவர்! பரிசளிப்பு விஷயத்தில் ஆசிரியர் தீர்ப்பே இறுதி.



முணுமுணுத்தான்.

வழக்கமாய் குடிக்கும் ஒரு 'கோக்' இரண்டு ஸ்டிராலைக் கூட மறந்து விட்டது நினைவுக்கு வந்தது.

"காதலாவது... கடாரங்காயாவது."

மறுபடியும் வார்டனின் இடிச் சிரிப்பு...

தன்னெதிரில் விரிந்து கட்டிக் கொண்டு, சண்டைச் சேவல் போலச் சிலுப்பிக் கொண்டு நின்ற அன்புச் செல்வியை என்னவோ செல்லாத ஐந்நூறு ரூபாய் நோட்டைப் பார்ப்பது போலப் பார்த்தான் சிங்காரம். உதட்டில் பொருத்தியிருந்த பீடியை கடைசி 'தம்' இழுத்து விட்டு, கீழே போட்டு செருப்புக் காலால் தேய்த்து 'என்னிடம் ராங் காட்டினால் உன் நிலையும் இந்தத் துண்டு பீடியின் கதிதான்'-என 'ஸிம்பாலிக்'காகக் காட்டினான்.

"என்னாம்மே... பாத்ரும்லே நான் எழுதினேனா...? எவன் சொன்னது அப்படி. இங்கே இட்டாந்து விடு... அப்படியே அவனைத் தோலை உரிச்சு மசாலா அரைச்சுப் பூசறேன்."

"சிங்காரம்... இதை நீ செய்யலேன்னு அங்காளப் பரமேஸ்வரி அம்மன் மேல சத்தியம் செய் பார்க்கலாம்."

சிங்காரம் பழைய எம்.ஆர்.ராதா, நம்பியார், அசோகன் இவர்கள் அத்தனைப் பேர் குரலையும் மிக்ஸியில் போட்டு அரைத்தாற் போல- அபூர்வ கலவையாய்ச் சிரித்தான்.

"எந்த அங்காளப் பரமேஸ்வரி? தினமும் சாயந்திரம் நீ போய் டாவடிச்சிட்டு வருவியே... அந்த அம்மானா.... இதப் பாரு குளந்தை... ஒண்ணு தெரிஞ்சுக்கு... எது மேல வேணுமானாலும் சத்தியம் செய்யலாம். சாமி பேருல மட்டும் சத்தியம் செய்யக் கூடாது... காதல் என்ன காதல்... அதுவும் தம்மாத்தூண்டு வயசுல... எனக்கென்னா வயசு தெரியுமா... நாப்பத்தி அஞ்சு. என் வயசுக்கு நானே இருபத்தியெட்டு வயசு வரைக்கும் எவளையும் ஏறெடுத்துப் பார்க்கலே... ஏன்? 'வூடு'ன்னு இருந்தா- நிதமும் கறி, சோறு, குழம்பு, வாரத்துக்கு ஒரு ரஜினி படம். முடியுமா என்னாலே... சுபிதே. அது எதனாச்சும் குத்தறாப்பல சொல்லும். நான் எட்டி உதைப்பேன். எதுக்கு ரப்சர். உனக்கென்னா வயசு?"

அன்புச் செல்வி தயங்கினாள். இருந்தாலும் மென்னு விழுங்கியபடி சொன்னாள்.

"பதினெட்டு..."

"ஆங்..."

சிங்காரம் அவளை, மழையில் நனைந்த நாய்க்குடையைப் பார்ப்பது போல குனிந்துப் பார்த்தான்.

"காபி போடத் தெரியுமா?"

"தெரியாது..."

"அடுப்பு பத்த வைக்கத்தான் தெரியுமா?"

அன்பு சிலிர்த்துக் கொண்டாள்.

பின்னே என்ன... அடுப்பு பற்ற வைக்கவும், காபி கலக்கவும் வீட்டில் கே.ஆர். விஜயாவும், ஸ்ரீ வித்யாவும் சேர்ந்து வந்த மாதிரி கன பரிமாணமாக அம்மா இருக்கையில்...

"நான் எதுக்கு அதையெல்லாம் தெரிஞ்சு வச்சுக்கணும்?"

அவள் சீற- சிங்காரம் மறுபடியும் எம்.ஆர்.ஆர் + நம்பியார் + அசோகனை மிக்ஸியில் போட்டு அரைத்துச் சிரித்தான்.

"மண்டு... இதெல்லாம் ஒரு மண்ணும் தெரியாது... லவ்வுக்காக சாமி பேருல பொய்

## ஆடுகளுக்கு ராஜமரியாதை!



பஞ்சாப் மாநில முதலமைச்சர் பிரகாஷ் சிங் பாதலுக்கு, பாதல் கிராமத்தில் ஒரு பண்ணை வீடு இருக்கிறது. அங்கே பாகிஸ்தானிலிருந்து பரிசாக அளிக்கப்பட்ட ஐந்து ஆடுகளுக்கு ராஜ மரியாதைதான் எப்போதும்! அந்த ஆடுகளும், பாதலின் பண்ணையில் உள்ள இந்திய ஆடுகளும் சேர்ந்து, விரைவில் குட்டி போடப் போகின்றன. அது சரி! பாக். ஆடுகள், இந்தியா வந்தது எப்படி? பிரதமர் வாஜ்பாய், லாகூருக்குப் பஸ் பயணம் மேற்கொண்டாரல்லவா? அப்போது பிரதமருடன் சென்றிருந்த பஞ்சாப் முதல்வருக்கு, பாக். முன்னாள் பிரதமர் நவாஸ் ஷெரீப் அளித்த பரிசுதான் பாகிஸ்தானின் ஐந்து தும்பா இன ஆடுகள்!

- எஸ்.எம்.

மட்டும் சொல்லத் தெரியுமாக்கும். இதப் பாரு... நான் சுத்த வீரன். அஞ்சா நெஞ்சன். வீர பாண்டிய கட்ட பொம்மன் வமிசத்துல வந்தவன். உங்க காதலைப் பத்தி எழுதணும்னா கரித் துண்டை எடுத்திட்டு பாத்ரூமுக்குப் போவ மாட்டேன். காம்பவுண்டு சுவத்துல கலர் பெயிண்டுல எழுதுவேன். ஆமா..."

அவன், கடைவாய் தங்கப்பல் உடைந்து விடாதபடி சற்று ஜாக்கிரதையாய் பற்களைக் கடித்தான். (ஆறு மாதங்களுக்கு முன்தான் ஒரு ஸ்டூடண்ட்டுக்கு காலேஜில், தனக்குரிய 'வாய்ஸ்'ஸை பயன்படுத்தி-ஸீட் வாங்கிக் கொடுத்து, அதற்கு அன்பளிப்பாய் கிடைத்த தொகையை சமீபத்திய சிட் பண்ட் எதிலும் போட்டு முதலிழக்க விரும்பாமல், நாலு தங்கப் பற்களாய்க் கட்டி மாட்டிக் கொண்டிருந்தான். இதற்காக நன்றாக இருந்த பற்களை அனாவசியமாய்ப் பிடுங்கியது தனிக் கதை).

"இதப் பாரு அன்பு— அண்ணான்னு சொல்லி என்னை செண்டிமெண்ட்டா டச் பண்ணிட்டே. இருந்தாலும் சொல்றேன் கேட்டுக்க... ஒரு மண்டலத்துக்கு நான் கொடுத்த எலுமிச்சம் பழமெல்லாம் யார் வயித்துக்கு சர்பத்தாப் போச்சோ... அவங்களுக்கெல்லாம் இந்த ஹாஸ்டல் சோத்தைச் சாப்பிடாமலேயே வயித்தைக் கலக்கி, பேதியாகும் பாரு... நீயும்— யாரு அந்த பிரபு தேவா... விஜய்... பிரசாந்த்... அட, இப்ப வந்த மாதவனாத்தான் இருக்கட்டுமே... அவனுக்கும் உனக்கும் கல்யாணம் நடக்காது... அம்மன் மேல சத்தியம்..."

சிங்காரம் சாமியாட— அன்பு விதிர் விதிர்த்துப் போய் அங்கிருந்து நகர்ந்தாள்.

'ச்சீ... இவன் சொல்றாப்பல காபி கூடப் போடத் தெரியாம என்ன காதல் வேண்டிக் கிடக்கு?'

மனசுக்குள் இன்னொரு அன்புச் செல்வி கை கொட்டிச் சிரித்தாள்.

அதே சமயம் வார்டனும் இல்லை; வாட்ச்மேனும் இல்லை என்றால் அந்தக் கரித்துண்டு 'ஸ்கிரிப்ட் ரைட்டர்' யார் என்கிற கேள்வி-அன்பு-அசோக் இருவரது மனத்திலும் தட்டாமாலை ஆடாமல் இல்லை...

இருவருமே அடுத்தாற் போலப் பாய்ந்தது-தங்களது அறைவாசிகளான கோவிந்து- மங்களாவின் மேல்தான்.

"Who is the black sheep..."

அவர்களது அலறலில் ஹாஸ்டலே ஒரு முறை காலிப் பெருங்காய டப்பாவைத் தட்டினாற் போல 'டமடம' என்றது.

(தொடரும்)

## நம்பர் டூ?

**கா**ங்கிரஸ் கட்சியில் சோனியாவுக்கு அடுத்த இடம் யாருக்கு? அர்ஜுன் சிங், பிரணாப் முகர்ஜி, மன்மோகன்சிங் என்று சில பெயர்கள் அடிபட்டாலும், உண்மையான நெம்பர் டூ, மாதவராவ் சிந்தியாதானாம்! லோக்



சபாவில், சோனியாவை அடுத்து இவர்தான். அண்மையில் வறட்சியால் பாதிக்கப்பட்ட குஜராத் மாநிலத்துக்கு சோனியா போக முடியாமல் போனபோது, அவர் சார்பில் சென்று வந்தவர் சிந்தியாதான்! மே. வங்காளத்திலும், புது டெல்லியிலும் கட்சியில் உள்ள கோஷ்டிப் பூசல்களைச் சமாளிக்கும் பொறுப்பும் இவரிடமே விடப்பட்டுள்ளது.

தவிர, சிந்தியாவின் சிபாரிசின்படி, அண்மையில் காங். கட்சியின் செய்தித் தொடர்பாளர்களாக பிரிதிவிராஜ் சவான், ஆனந்த் சர்மா ஆகியோரை சோனியா நியமித்தார். இத்தனைக்கும் காங்கிரஸ் கட்சியின் பொதுச் செயலாளர்களில் ஒருவராக சிந்தியா இல்லை என்பது கவனிக்கத் தக்கது.

— எம்.



கவர்ந்து, வந்த வேலை முடிந்ததும் பிரிய முடியாமல் தவித்து, ஐயகோ! இந்த ஜென்மத்தில், இதே திரைக்கதையில் உன்னை இன்னும் எத்தனை தடவைகள் பார்த்து ரசித்து சலித்துப் போக வேண்டுமோ? போதும் அப்பனே போதும்!

இரண்டு பேர் ஒருவனைக் காதலிக்கும்போது ஒரு பெண் சாக வேண்டும் என்கிறது சினிமா தர்மம். ஓ.கே ஒத்துக் கொள்கிறோம். கார்த்திக் தன்னை காதலிக்கவில்லை என்று கவுண்டமணி மூலம் தெரிந்து கொண்ட மந்த்ரா, அவரைக் காப்பாற்றும் முயற்சியில் உயிரை விடுவது தான் பொருத்தமே தவிர, இப்படி தொபுகடீர் என்று திவ்யா உண்ணியைச் சாகடிக்கலாமா சுந்தர் ஸார்? லாஜிக்கை விட்டுத் தள்ளுங்கள். ஏதோ ஸ்ரீதேவியையே திரும்பப் பார்ப்பதுபோல் சப்புக் கொட்டிக் கொண்டிருந்தோம், அந்த திருப்தியிலும் மண்!

மாவிலை தோரணத்தைத் தூக்கிக் கட்டுங்கள், வாழை மரத்தை இன்னும் சாய்த்துக் கட்டுங்கள் என்று பந்தல் சூப்பர்வைஸர் கணக்கில் வில்லன் ராதாரவி ஸ்பாட்டிற்கு வந்து காரில் ஸ்டைலாக உட்கார்ந்து கொண்டு கலாட்டா ஏற்பாடுகளைக் கவனிப்பது வேடிக்கையோ வேடிக்கை!

# கண்ணன் வருவான்

கார்த்திகேயா! நவரச நாயகா! முத்துராம புதல்வா! – சினிமா ரசிக கோடிகளின் வேண்டுகோள் ஒன்றிற்குச் செவி சாய்ப்பாயா? ஆள் மாறாட்டம் செய்ய நேர்ந்து, புதிய சூழ்நிலையில் கொஞ்சம் கொஞ்சமாக லயித்து, எல்லோரையும் சிற்பியின் உபயத்தில் 'காற்றுக்குப் பூக்கள் சொந்தம்' இனிக்கிறது.

எல்லாமே ரொம்ப பிரடிக்டபிள் ஆக இருந்துவிட்டதாலோ என்னவோ கவுண்டமணியின் காமெடி டிராக்கில் ஸ்பைஸ் ஜாஸ்தி இருப்பது போல் தோன்றுகிறது.

— கிருஷ்ணா
சிதம்பரம்



# ஒரு ஸ்பூன் ஜெர்மனி; அரை ஸ்பூன் ஸ்விட்சர்லாந்து!

ஸ்ரீஜா ருனி எழுதும்

மினி பயணத் தொடர்

# "மேட்ச் ஃபிக்ஸிங்காரர்களைக் குற்றம் சாட்டமுடியாது!"

"கிரிக்கெட் பெட்டிங் என்பது இந்தியாவில் சட்டத்துக்குப் புறம்பானது இல்லை. கிரிக்கெட் பெட்டிங், மேட்ச்ஃபிக்ஸிங்காரர்களை, இந்திய தண்டனை சட்டத்தின்படி, குற்றம்சாட்ட முடியாது" என்கிறார் சி.வி. நரசிம்மன்- ஓய்வுபெற்ற சி.பி.ஐ. இயக்குனர்.

"ஆனால், இது இந்தியாவின் மானம், தார்மீகப் பொறுப்பு சம்பந்தமான விஷயம் என்பதால், சீரியஸான விஷயம். இது பலகோடி ரூபாய் சம்பந்தப்பட்ட விஷயம். எனவே, இது குறித்து சி.பி.ஐ. விசாரிப்பது பொருத்தமானது" என்கிறார் அவர்.



"ஏற்கெனவே இந்த விஷயத்தைப் பற்றிக் கண்டறிய நீதிபதி சந்திரசூட் தலைமையில் ஒரு கமிஷன் நியமிக்கப்பட்டு, அவர் தனது அறிக்கையைக் கூட அரசுக்கு சமர்ப்பித்து விட்டார். அதில் பெரிதாக ஒன்றும் கண்டு பிடிக்கப் படவில்லையே!"

"வாஸ்தவம்தான்! நீதிபதி சந்திரசூட்டுக்கு இது குறித்து விசாரித்து, அறிக்கை கொடுக்கப் பணிக்கப்பட்டதே தவிர, புலனாய்வு செய்யும்படிக் கூறவில்லை. ஆனால் சி.பி.ஐ. ஒரு முழுமையான, திறமையான புலனாய்வு அமைப்பு. இது குறித்து மறைக்கப்பட்ட பல விஷயங்களை சி.பி.ஐ. வெளியில் கொண்டு வரும் என்று நம்பலாம்."

"ஆடியோ டேப், வீடியோ கேஸட்டையெல்லாம் முழுமையான, நம்புவதற்குரிய ஆதாரங்களாக கோர்ட் ஏற்றுக் கொள்ளாதல்லவா?"

"இவற்றை ஒதுக்கித் தள்ளிவிடவும் முடியாது; முழுமை யான ஆதாரங்களாக ஏற்றுக் கொள்ளவும் இயலாது. இவற்றின் அடிப்படையில் புலன் விசாரணையைத் தொடரும்போது, மேலும் பல புதிய திடுக்கிட வைக்கும் விஷயங்கள் வெளி வரக் கூடும் இல்லையா?"

"இந்த கிரிக்கெட் ஊழலில் ஈடுபட்டவர்கள் யார் யார் என்று கண்டுபிடிக்கப்பட்டாலும், அவர்கள் மீது நேரடியாக வழக்குத் தொடர சட்டத்தில் வழியில்லை என்கிறீர்களே! அப்படியானால், லஞ்சம் கொடுத்த, வாங்கின ஊழல் பேர்வழிகள் எல்லாம் தண்டனையில்லாமல் தப்பித்து விடுவார்களா? இது அநியாயமில்லையா? கிரிக்கெட்டையே ஒரு கேலிக் கூத்து ஆக்கி விடாதா இது?"

"ஒன்றை நீங்கள் கவனிக்க வேண்டும். கிரிக்கெட் பெட்டிங், மேட்ச் ஃபிக்ஸிங் ஆகியவற்றில் ஈடுபட்டவர்கள் மீது நேரடியாகக் குற்றப்பத்திரிகை தாக்கல் செய்ய இந்திய பீனல் கோடில் வழியில்லை என்றுதான் நான் குறிப்பிட்டேன். லட்சக் கணக்கில், ஆட்டக்காரர்களுக்குப் பணம் கொடுக்கப்பட்டால் அந்தப் பணம், கணக்கில் வராத கருப்புப் பணமாகவே இருக்க முடியும். லஞ்சம் பெற்ற கிரிக்கெட் வீரர்கள் அதை கணக்கில் காட்டியிருக்க மாட்டார்கள். எனவே, வருமானவரிச் சட்டங்களின் பேரில் அவர்கள் மீது நடவடிக்கை எடுக்கலாம். இந்த தண்டனைகள் சிறை வாசமாக இல்லாமல், அபராதமாகக் கூட இருக்கலாம்.

அதே சமயம், வெளிப்படும் உண்மைகளின் அடிப்படையில் கிரிக்கெட்டர்கள் மேல் கிரிக்கெட் போர்டு நடவடிக்கை எடுக்க முடியுமே!"

"இந்தப் புலனாய்வு மூலம் உண்மைகள் வெளிப்பட எவ்வளவு காலம் ஆகும்?"

"உண்மைகள் வெளிவர இவ்வளவுகாலம் ஆகும் என்று இப்போது குறிப்பிட்டுச் சொல்ல முடியாது. இதில் இன்னொரு விஷயத்தை சி.பி.ஐ. கவனத்தில் கொள்ள வேண்டும் என்றும் விரும்புகிறேன். வருமான வரித்துறை, என்ஃபோர்ஸ்மென்ட் டைரக்டரேட் ஆகியவற்றுடன் சி.பி.ஐ. ஒருங்கிணைந்து செயல்பட்டால் புலனாய்வு சுறுசுறுப்பாய் இருக்கும். உண்மைகள் சீக்கிரம் வெளிச்சத்துக்கு வரும்!"

**— எஸ். சந்திரமௌலி**



## தமிழ்நாடு அரசு பரிசுச் சீட்டுத்துறை வழங்கும்

# தினம் தினம் லட்சாதிபதி
# தினம் தினம் மகிழ்ச்சி

வரிசைகள் 5

# ரூ. 5 லட்சம்

பரிசுச்சீட்டின் விலை ரூ. 2/- (MRP)

குலுக்கல் நேரம்
மாலை 3.00 மணி

தமிழ்நாடு அரசு பரிசுச் சீட்டுக்களையே வாங்குங்கள்!

| | | |
|---|---|---|
| திங்கள் **கர்ணன்** | புதன் **காவேரி** | வியாழன் **தமிழ் மகள்** |
| வெள்ளி **வைகை** | சனி **பணத்தோட்டம்** | |



ஆணையர், தமிழ்நாடு பரிசுச் சீட்டுத்துறை
சயர் மேன்ஷன், 2வது மாடி, 621, அண்ணாசாலை,
சென்னை–600 006. தொலைபேசி : 8212512

விழுந்தால் வீட்டிற்கு! விழாவிட்டால் நாட்டிற்கு!!

தமிழ்நாடு அரசு பரிசுச் சீட்டையே வாங்கிடுவீர்! தமிழ்நாட்டின் வளர்ச்சிப் பணியில் பங்கு பெறுவீர்!!

ALSO AVAILABLE ON THE INTERNET
www.tn.gov.in / www.chennaionline.com / www.aaraamthinai.com/www. southindia.com.

"ஒரு கொரியர்ல வேலைக்கு ஆள் தேவைப்படுது. போறியா?" என்று கண்ணனிடம் பாஸ்கர் கேட்டான்.

"இல்ல... இப்ப பார்க்கிற வேலையே தற்சமயத்துக்கு போதும் பாஸ்கர்."

''போயும் போயும் மீன் கடையிலயா வேலை பார்க்கிறது? இங்கெல்லாம் மூணு நாள் கூட வேலை பார்க்க முடியாதுன்னு சொன்னே. மூணு மாசமா வேலைக்குப் போறே'' என்று கேட்டான் பாஸ்கர்.

''மீன்கள் என்னை மாத்திடுச்சு...'' என்றான் கண்ணன்.



கண்ணனின் நெருங்கிய சினேகிதன் பாஸ்கர். ப்ளஸ் டூவில் எப்படியாவது பாஸ் பண்ணி விட வேண்டும் என்று இருவரும் முயற்சித்தார்கள். முடியவில்லை. ஊர் சுற்றினார்கள். கண்ணனுக்கு வசதி இருந்தது. வேலைக்குப் போய் சம்பாதித்தாக வேண்டும் என்கிற அவசியம் இல்லை.

இருந்தாலும் - எங்கேயாவது வேலைக்குப் போய் - ஏதாவது ஒரு தொழிலைக் கற்றுக் கொண்டால், நாளை சுயமாய்த் தொழில் செய்யும் போது அது பிரயோஜனமாய் இருக்கும் என்று எண்ணி வீட்டில், ஒவ்வொரு இடமாக வேலைக்குச் சேர்த்து விட்டார்கள். எங்கும் உருப்படியாக இல்லை.

கடைசியாய் - ''வண்ண வண்ண அலங்கார மீன்கள் விற்கும் ஒரு கடைக்கு அனுப்பப்பட்டான். கண்ணனின் அப்பா வட்டிக்குப் பணம் கொடுக்கிறவர். இந்த மீன் கடை உரிமையாளரின் கணவரும் அப்பாவிடம் பணம் வாங்கியிருந்தார். கடையை

நடத்துவது அவரின் மனைவி. ஆள் தேவைப்படுவதாய் சொல்ல, இவனை அனுப்பினார். "என்னப்பா மீன் கடைக்குப் போய் வேலைக்கு அனுப்பறே..." என்று முணுமுணுத்தான்.

"எந்த வேலையாயிருந்தா என்ன... ரெண்டே நாளில் பிடிக்கலேன்னு வரப்போறே. அதான்..." என்றார். வேலைக்குச் சேர்ந்தான்.

# மீன்கள்

**யோகி**

வரிசையாய்க் கண்ணாடித் தொட்டிகள். உள்ளே மீன்கள் நீந்தி விளையாடின. இந்த மீனுக்கும் தனக்கும் பெரிய வித்தியாசம் இல்லை என்று அவனுக்குத் தோன்றியது. இதைத் தொட்டியில் அடைத்து வைத்து இருக்கிறார்கள். தன்னைக் கடைக்குள் அடைத்து வைத்து இருக்கிறார்கள் என்று பட்டது.

அவனுக்கென்று ஒரு ஸ்டூல் இருந்தது. அதில் அமர்ந்தான். ஓனரம்மா தொட்டியைப் பார்ப்பதும், சில சமயம் தொட்டியைக் கழுவி விடுவதுமாகவும், மீன்களை வேறு தொட்டியில் போடுவதுமாகவும், மீன்களுக்கு ஏதேனும் கேடு வந்துள்ளதா என்று பார்ப்பதுமாகவும் இருந்தாள். "தம்பி... உன் பேரு என்னன்னு சொன்னே?" என்று கேட்டாள்.

"கண்ணன் மேடம்."

"இங்க வா. நா என்ன பண்றேன்னு பாரு. நாளை நீதான் கழுவி சுத்தப்படுத்தணும். "எந்தெந்த மீனுக்கு என்னென்ன பேருன்னு சொல்றேன் கேளு."

வாய் நமநமவென்று இருந்தது. பொது கழிப்பறைக்கு வந்து ஒரு சிகரெட்டை பற்றவைத்தான். பிறகு கடைக்கு வந்தான். "வா... இந்தத் தொட்டியில உள்ள மீனை அந்தத் தொட்டியில போடு. அந்த மீன் வலைய எடு" என்றாள். இவனிடத்தில் இருந்து சிகரெட் நாற்றம் வர முகம் சுளித்தாள்.

"சிகரெட் பிடிச்சியா... இதான் பசங்களை வேலைக்கு வைக்கிறது இல்ல. இனி கடைக்கு காலையில் வந்தா வீட்டுக்குப் போற வரை சிகரெட் பிடிக்கக் கூடாது. எனக்குப் பிடிக்காது. மீன்களுக்கும் பிடிக்காது. நா சகிச்சுப்பேன். அதுக சகிச்சுக்குமா?" என்றாள்.

தொட்டியைக் கழுவி விடச் சொன்னாள். அப்பா மீது எரிச்சலாய் வந்தது. ஒரு யமஹா வண்டி கேட்டுக் கொண்டிருந்தவனை இந்தச் சிறையில் தள்ளி விட்டு விட்டாரே? தொட்டி பிசுபிசுவென்று இருந்தது. வழுக்கியது. "பார்த்துப்பா" என்றாள்.

இரண்டே நாளில் அவனுக்குள் ஒரு மாற்றம். மீன்களின் உலகத்தையும், அதன் வாழ்க்கையையும் இவன் விரும்பிப் பார்க்க ஆரம்பித்தான். நேசிக்கத் துவங்கினான். இதற்கு காலை, மாலை, பகல், இரவு என்பது பற்றி ஏதேனும் தெரியுமா... இந்தத் தொட்டியே இதற்கு உலகம். மனிதனை போன்று எவ்வித சிக்கல்களும் இல்லை.

சின்ன மீனைப் பெரிய மீன் வேலைக்குச் சேர்த்து விடாது. சம்பாதிக்கச் சொல்லாது. பிரச்னைகள் இல்லை. உயிர் என்றால் என்ன...? நாம் ஏன் வாழ்கிறோம்...? நாம் எப்படி வந்தோம்...? நேற்று நம்மோடு நீந்திய மீன் இன்று எங்கே...? எது பற்றிய சிந்தனையும் இராது.

சிகரெட் பிடிப்பதை நிறுத்தியே விட்டான். மேடம் சொன்னதற்காக இல்லை. மேடம் சொன்ன பிற்பாடும் சிகரெட் பிடித்து விட்டுத்தான் கடைக்கு வந்தான். ஒருநாள் மீன் தொட்டியின் மேலே இருந்து வாயை ஊதினான். சிகரெட் நாற்றம் தொட்டிக்குள் போய் மீன்களை ஏதோ செய்திருக்க வேண்டும் போலும். அந்தத் தொட்டியில் இருந்த ஒரு மீன் செத்துப் போனது கொஞ்ச நேரத்தில். அந்த மீன் தானாகக் கூட இறந்திருக்கலாம். தான் ஊதியதால்தான் இறந்ததாய்த் தோன்றியது. இவனுக்கு மனசுக்குக் கஷ்டமாய் இருந்தது. மீனின் வாழ்க்கையே சில வாரங்கள்தான். அதனால் அதன் சாவு பற்றிக் கவலைப்படத் தேவையில்லைதான். இருந்தாலும் கவலையாய் இருந்தது.

"ஆபீஸ் கம்ப்யூட்டர்ல யாரோ சில்மிஷம் செய்து வெச்சிருக்காங்க!"

"என்ன அது?"

"கம்ப்யூட்டர் ஆன் செய்ததும், 'வெல்கம், ஹேவ் எ குட் ஸ்லீப்; ஸ்வீட் ட்ரீம்ஸ்'னு திரையில வருது!"

- மிஸ்டர் எக்ஸ்

கையில் எண்ணெய்ப் பிசுக்கு இருக்கக் கூடாது என்பாள் மேடம். மெல்ல மெல்ல அவனுக்கு இந்த வேலை பிடித்துப் போனது. பல சமயம் கற்பனை செய்வான். இந்த மீன்களோடு மீனாய் தானும் நீந்துவது மாதிரி. எவ்வளவு நேரம் மீன் தொட்டி முன் நின்றாலும் சலிப்பதில்லை. அப்பா ஆச்சர்யப்பட்டார். "என்னப்பா... பத்து நாளா வேலைக்குப் போறே. இன்னும் விலகல. வேலைக்குப் போறேன்னு எங்கேயாவது சுத்திட்டு வர்றியா... ஒரு பர்னிச்சர் கடையில ஆள் கேட்டு இருக்காங்க. போறியா?" என்று கிண்டலடித்தார்.

அப்பாவைப் பார்த்துச் சிரித்தான்.

அவன் எல்லா வேலைகளையும் ஆர்வமுடன் செய்தான். அவனது கடைக்குப் பக்கத்தில் ஒரு காதிகிராஃப்ட் கடை இருந்தது. அங்கு ஒரு பெண் வேலை பார்க்கிறாள். அந்தக் கடை சற்று தாமதமாகத்தான் திறப்பார்கள். அவள் தன் கடை திறக்கும் வரை இங்கு இருப்பாள். அவனும் இவனோடு மீன்களை ரசிப்பாள். அம்மாவிடம் சொன்னான். "அம்மா இனி மீன் குழம்பு வைக்காதே. இனி மீன்களை என்னால் சாப்பிட முடியாது" என்று.

**தா**ன் நிறைய மாறிவிட்டதாய் அவனுக்குத் தோன்றியது. எங்கும் சுற்றப் பிடிக்கவில்லை. கடையே கதியென்று இருக்கவே விரும்பினான். மீன்கள் தன்னை வெகுவாய் மாற்றி விட்டன. மனத்தை மென்மைப்படுத்தி விட்டன. முரட்டுத்தனத்தை அகற்றி விட்டன.

கடையை, "இவனை நம்பி ஒப்படைக்கலாம்" என்று மேடம் நம்பினாள். ஒருநாள் ஒரு மீன் இறந்து விட்டது. "அத எடுத்து அந்தப் பெரிய மீன் உள்ள தொட்டியில் போடு" என்றாள். அந்த மீன்கள் இதைச் சாப்பிட்டுவிடும். அதற்குத்தான் போடச் சொன்னாள். இவனுக்கு மனசு கேட்கவில்லை. அந்த மீன் இறக்கவில்லை. இறக்கும் தருவாயில் இருந்தது. "வேணாம் மேடம்... தூக்கி வெளியே போட்டுடலாம். பாவம்" என்றவனை அவள் ஆச்சர்யமாய்ப் பார்த்தாள்.

**க**ண்ணனை பாஸ்கர் கேலி செய்தான். "என்னடா... மீன் மாதிரியே ஆயிட்டே. தொட்டிக்குள்ள உன்னையும் அடைச்சுப் போட்டாச்சா? முன்ன மாதிரி இல்ல. என்ன தான் பண்ணிச்சு அந்த மீன்கள் உன்னை?" என்று பாஸ்கர் கேட்டபோது, பக்கத்துக் கடையில் வேலை பார்க்கும் பெண் - அவனைக் கடந்து போனாள். அன்று ஞாயிற்றுக்கிழமை. அவள் கடைத் தெருவுக்கு சாமான் வாங்க வந்திருக்கலாம். இவனைப் பார்த்துச் சிரித்தாள். சமீப காலமாய் ஒருவரையொருவர் பார்த்து அடிக்கடி சிரிப்பதாய்த் தோன்றியது அவனுக்கு.

காதல் வயப்பட்டுக் கொண்டு இருப்பதாய் நினைத்தான். இந்த மீன்கள்தான் - தனக்குக் காதலிக்கவும் கற்றுக் கொடுத்ததாய்த் தோன்றியது. ○

## வி.ஐ.பி விருப்பம்

# பாராளுமன்றத்தில் என் குரல்...!

அ.ஐ. ரவி ஆறுமுகம்,
ஐ.பி.எஸ்

பள்ளியில் படிக்கும் போதே அப்பா எனக்குச் சொன்னது "டேய்... நீ இன்ஜினியருக்குப் படி; உன் தம்பி டாக்டருக்குப் படிக்கட்டும்" என்பதுதான். அப்பாவின் அன்புக் கட்டளையை கருத்தில் கொண்டு கோவையில் இன்ஜினியரிங் படித்தேன். இருந்தாலும் அந்தப் படிப்பில் திருப்தி ஏற்படவில்லை. சட்டம் படித்து வழக்கறிஞராகி சுப்ரீம் கோர்ட்டில் ஆஜராக வேண்டுமென்பது ஆசை. அந்த ஆசையில் உறுதியாக இருந்த என்னை சட்டம் படிக்க அனுமதித்தார் அப்பா. "என்ஜினியரிங் படித்த பின் சட்டமா?" என்று ஊரே சிரித்தது. ஆனால் நல் சட்டக் கல்லூரியில் சேர்ந்து தேர்ச்சி பெற்றேன். இதற்கிடையில் விளையாட்டாய் சிவில் சர்விஸ் எழுதி காவல் பணிக்கும் ஆர்டர் வந்தது. வழக்கறிஞர் ஆசையில் அந்தப் பணியில் சேரவில்லை. பின்னர் இரண்டு வருடம் கழித்து மீண்டும் சிவில் சர்விஸ் எழுதினேன். அதே காவல் பணி ஆர்டர் தேடி வந்தது. காவல் பணியிலும் சமூக சேவை செய்ய முடியுமென்பதாலும், குடும்பச் சூழல் காரணமாகவும் சேர்ந்து விட்டேன்.

சுப்ரீம் கோர்ட்டில் ஆஜராகும் வாய்ப்பு தள்ளிப் போன நிலையில் மற்றொரு ஆசையும் அடி மனதில் புகைந்து கொண்டிருக்கிறது. ஆம்! ஏழை எளிய பாதிக்கப்பட்ட மக்களின் குரலாக பாராளுமன்றத்தில் என் குரல் ஒலிக்க வேண்டும்! 'அரசாங்கப் பணியில் இருக்கிறேனே என்கிறீர்களா? ஓய்வு பெற்றதும், கடவுளின் ஆசி இருந்தால் அந்த விருப்பத்தை நிறைவேற்ற முயற்சி செய்வேன். ஏதாவது கட்சியில் சேர்வேனா; சுயேட்சையா என்பதெல்லாம் இப்போதே சொல்லி விட முடியுமா?

— ரமா
படம்: ராஜன்

# பொன்னியின் செல்வன்



ஐந்தாம் அத்தியாயம்

## தாயைப் பிரிந்த கன்று



இளவரசர் புத்த பிக்ஷுவையும் தூக்கிக் கொண்டு முருகய்யன் கொண்டு வந்து நிறுத்திய படகிலே குதித்தார். அவர் குதித்த வேகத்தில் அந்தச் சிறிய படகு பேயாட்டம் ஆடியது. ஒருகணம் கவிழ்ந்துவிடும் போலவும் இருந்தது. முருகய்யன் மிகப் பிரயத்தனப்பட்டுப் படகு கவிழாமல் காப்பாற்றினான்.

"முருகய்யா! இனிமேல் படகை விடு! ஆனைமங்கலம் அரண்மனைக்கு விடு!" என்று பொன்னியின் செல்வர் உரத்த குரலில் கூவினார். அச்சமயம் உச்ச நிலையை அடைந்திருந்த புயற் காற்றும் புயலினால் பொங்கி வந்த கடலும் போட்ட இரைச்சலினால் அவர் கூறியது முருகய்யன் காதில் விழவில்லை. ஆயினும் இளவரசரின் முகத் தோற்றத்திலிருந்து அவருடைய விருப்பத்தை அறிந்துகொண்ட முருகய்யன் படகைச் செலுத்தத் தொடங்கினான். சூடாமணி விஹாரத்தின் முழுகிக் கொண்டிருந்த மண்டபச் சிகரங்களின் மீதும் புத்தர் சிலைகளின் மீதும் மோதாமல் படகைச் செலுத்துவது மிகவும் கடினமாயிருந்தது. முருகய்யன் பெரும் புயலிலும் சுழிக் காற்றிலும் நடுக் கடலில் படகு செலுத்திப் பழக்கப்பட்டவனாதலால் வெகு லாகவமாகச் செலுத்திக்கொண்டு போனான். அதைப் பார்த்து இளவரசர் வியந்தார். அவனுக்குச் சற்று உதவி செய்யலாம் என்று அவருக்குத் தோன்றியது. ஆனால் புத்த பிக்ஷுவைப் பிடித்திருந்த

**அமரர் கல்கி**

பிடியை விட்டு விடத் தயங்கினார். அதற்கு ஏற்றாற்போல், திடீரென்று பிக்ஷு இளவரசருடைய பிடியிலிருந்து விடுவித்துக் கொள்ளப் பிரயத்தனம் செய்தார். அச்சமயம் படகு புத்த பகவானின் சிலையின் அருகே போய்க் கொண்டிருந்தது. இப்போது கடல் வெள்ளம் அச்சிலையின் கண்கள் வரையில் ஏறியிருந்தது. இன்னும் சில நிமிடத்தில் சிலையே முழுகிவிடும் என்பதில் ஐயமில்லை.

இளவரசர் பிக்ஷுவை இறுகப் பிடித்துக்கொண்டார். பார்ப்பதற்கு மிக மென்மையான தேகம் உடையவராகக் காணப்பட்ட இளவரசரின் கரங்களில் எவ்வளவு வலிமை இருந்தது என்பதை அறிந்து பிக்ஷு வியந்தார் என்பதை அவருடைய முகத்தோற்றம் காட்டியது. நெஞ்சிலே உரம் இருந்தால், உடலிலும் வலிமை உண்டாகும் போலும்! இத்தனைக்கும் பல நாள் சுரத்தினால் மெலிந்திருந்த உடம்பு!

புத்தரின் சிலையைத் தாண்டிப் படகு போயிற்று. முழுகிக்கொண்டிருந்த அச் சிலையைப் பிக்ஷு பார்த்துக் கொண்டேயிருந்தார். சிலை விரைவில் மறைந்தது. பிக்ஷுவின் கண்களில் தாரை தாரையாகக் கண்ணீர் பெருகியது.

"இளவரசே! என்ன காரியம் செய்தீர்?'' என்றார் பிக்ஷு. அவருடைய உதடுகளின் அசைவிலிருந்து என்ன சொல்கிறார் என்பதைத் தெரிந்து கொண்ட இளவரசர், பிக்ஷுவின் காதின் அருகில் குனிந்து ''சுவாமி! அந்தக் கேள்வியை நான் அல்லவா கேட்க வேண்டும்? என்ன காரியம் செய்யத் துணிந்தீர்கள்?'' என்றார்.

''இளவரசே! இந்த விஹாரம் ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்னாலிருந்து இங்கே இருந்து வருகிறது. மகானாகிய தர்ம பாத முனிவரின் காலத்திலேகூட இருந்தது. வீர சைவர்களான பல்லவ சக்கரவர்த்திகள் இதை அழிக்காமல் விட்டு வைத்தார்கள். அப்படிப்பட்ட புராதன விஹாரம் என் காலத்தில், என் கண் முன்னால், முழுகி விட்டது. செங்கல் திருப்பணியினாலான இந்த விஹாரம் இந்தக் கடல் வெள்ளத்துக்குத் தப்ப முடியாது. வெள்ளம் வடிந்த பிறகு சில குட்டிச் சுவர்களே மிச்சமிருக்கும்! விஹாரம் போன பிறகு நான் மட்டும் எதற்காக உயிரோடு இருக்க வேண்டும்?'' என்றார் பிக்ஷு.



''விஹாரம் இடிந்து அழிந்தால் மறுபடியும் திருப்பணி செய்து கட்டிக் கொள்ளலாம். புத்த பகவானுடைய சித்தமிருந்தால் நானே திரும்பவும் கட்டிக் கொடுப்பேன். தாங்கள் போய்விட்டால் என்னால் தங்களைத் திருப்பிக்கொண்டு வர முடியாதே?'' என்றார் இளவரசர் அருள்மொழிவர்மர்.

கடலும் புயலும் சேர்ந்து போட்ட இரைச்சலினால் அவர்களால் மேலும் தொடர்ந்து விவாதம் செய்ய முடிய வில்லை. மற்றும், சுற்றுப்புறங்களில் நாலாபுறத்திலும் அவர்கள் கண்ட கோரக் காட்சிகள் அவர்களைப் பேச முடியாதபடி செய்துவிட்



டன.

முறிந்த பாய்மரங்களுடனே பெரிய பெரிய நாவாய்களும் சின்னஞ்சிறு மீன் பிடிக்கும் படகுகளும் கடற் பக்கத்திலிருந்து கரையை நோக்கி வந்து கொண்டிருந்தன. அவற்றில் பல கரை தட்டியும், கட்டடங்களின் மேல் மோதியும், பேயாட்டம் ஆடிய மரங்களின் மீது இடித்துக்கொண்டும், சுக்கு நூறாக நொறுங்கி விழுந்தன.

பெருங் காற்றில் வீடுகளின் கூரைகள் அப்படியே பிய்த்துக்கொண்டு பறந்து சென்று வெள்ளத்தில் விழுந்தன.

வேறு சில கூரைகள் மிதந்து கொண்டிருந்தன. அவற்றில் சிலவற்றில் மனிதர்கள் மிகுந்த சிரமத்துடன் தொத்திக் கொண்டிருந்தார்கள். ஓவென்று அவர்கள் ஓலமிட்டுக்கொண்டிருந்தார்கள்.

பெரிய பெரிய மரங்கள் காற்றில் முறிந்து விழுந்தன. முறிந்த மரங்களில் சில மிதந்து மிதந்து சென்றன. மிதந்த மரங்களைப் பிடித்துக்கொண்டு சில மனிதர்கள் உயிர் தப்ப முயன்றார்கள்.

ஆடுமாடுகள் வெள்ளத்தில் அலறிக்கொண்டு மிதந்து சென்றன.

இத்தகைய கோரமான காட்சிகளைப் பார்த்துப் பார்த்து இளவரசரும் பிக்ஷுவும் மனங் கசிந்தார்கள். அந்த நிலைமையில் தங்களால் ஒன்றும் உதவி செய்ய முடியவில்லையே என்ற எண்ணம் அவர்களுடைய வேதனையை அதிகப்படுத்தியது.

முருகய்யன் அப்பால் இப்பால் பார்க்காமல் படகைச் சர்வ ஜாக்கிரதையாகச் செலுத்திக்கொண்டு சென்றான்.

சூடாமணி விஹாரம் நாகைப்பட்டினத்தில் கடற்கரையோரமாக இருந்தது. அங்கிருந்து கால்வாய் சிறிது தூரம் வரையில் தெற்குத் திசையை நோக்கிச் சென்றது. பிறகு தென் மேற்காக அரைக் காதம் வரையில் சென்று, அங்கிருந்து மீண்டும் திரும்பித் தென் திசையில் நேராகச் சென்றது. இந்த இரண்டாவது திருப்பத்தின் முனையிலேதான் ஆனை மங்கலம் அரண்மனை இருந்தது.

வழி நடுவில் இருந்த நந்தி மண்டபத்தின் அருகில் படகு வந்தபோது, நந்தி முழுதும் முழுகியிருந்தது மட்டுமல்லாமல் மேல் மண்டபத்தின் விளிம்பைத் தொட்டுக்கொண்டு வெள்ளம் சென்றது. மண்டபத்துக்கு அப்பால் நாலாபுறமும் பரவி இருந்த தென்னந் தோப்புகளில் முக்கால்வாசி மரங்கள் காற்றினால் முறிந்து விழுந்துவிட்டன. மிஞ்சியிருந்த மரங்களின் உச்சியில் மட்டைகள் ஆடியது தலைவிரி கோலமாகப் பேய்கள் ஆடுவது போலவே இருந்தது. அவற்றில் சில மட்டைகள் காற்றினால் பிய்க்கப்பட்டு வெகு தூரத்துக்கு அப்பால் சென்று விழுந்தன.

நந்தி மண்டபத்தின் உச்சியில் தாயைப் பிரிந்த கன்றுக்குட்டி ஒன்று எப்படியோ வந்து தொத்திக்கொண்டிருந்தது. அது நாலா புறமும் பார்த்துப் பார்த்து மிரண்டு விழித்தது. உடம்பை அடிக்கடி சிலிர்த்துக்கொண்டது. அதன் கால்கள் நடுங்கிக்கொண்டிருந்தன. அந்தக் கன்று 'அம்மா' என்று எழுப்பிய ஈனக் குரல் படகில் சென்றுகொண்டிருந்தவர்களின் காதில் இலேசாக விழுந்தது. "ஐயோ பாவம்! தாயைப் பிரிந்த இந்தக் கன்றின் கதி என்ன ஆகுமோ!" என்று இளவரசர் எண்ணிய அதே சமயத்தில், ஒரு பெரிய தென்னை மரம் திடீரென்று முறிந்து மண்டபத்தின் பின்புறத்தில் விழுந்தது. சிறிது முன் பக்கமாக விழுந்திருந்தால் கன்றுக்குட்டியின் மேலேயே அது விழுந்திருக்கும்.

மரம் விழுந்த வேகத்தினால் தண்ணீரில் ஒரு பெரிய அலை கிளம்பி மண்டபத்தின் மேலே தாவி வந்தது. முன்னமே நடுங்கிக் கொண்டிருந்த கன்றுக்குட்டி அந்த அலையைச் சமாளிக்க முடியாமல் தடுமாறி விழுந்தது. மண்டபத்தின் உச்சியிலிருந்து அலையினால் அது வெள்ளத்தில் உந்தித் தள்ளப்பட்டுத் தத்தளித்தது.

இளவரசர் இதுவரையில் புத்த

பிக்ஷுவைத் தம் கரங்களினால் பிடித்துக் கொண்டிருந்தார். கன்றுக்குட்டி மண்டபத்தின் உச்சியிலிருந்து உந்தித் தள்ளப் பட்டதைப் பார்த்ததும், 'ஆகா' என்று சத்தமிட்டுப் பிக்ஷுவைப் பிடித்துக்கொண்டிருந்த பிடியை விட்டார். பிக்ஷு அக்கணமே வெள்ளத்தில் குதித்தார்.

படகோட்டி முருகய்யன் துடுப்பைப் படகில் போட்டு விட்டு இளவரசரைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டான். அவனை இளவரசர் கடுங்கோபத்துடன் பார்த்து விட்டு "விடு!" என்று கையை உதறினார். அதற்குள் பிக்ஷு இரண்டு எட்டில் நீந்திச் சென்று கன்றுக்குட்டியின் முன்னங்கால்கள் இரண்டையும் கெட்டியாகப் பிடித்துக்கொண்டார். கன்றுக்குட்டியும் உயிர் மீதுள்ள இயற்கையான ஆசையினால் தலையை மட்டும் தண்ணீருக்கு மேலே வைத்துக் கொண்டிருக்கப் பிரயத்தனப்பட்டது. பிக்ஷு கன்றுக்குட்டியைப் பிடித்து இழுத்துக்கொண்டு படகை நோக்கி வந்தார். இளவரசர் அவருக்குக் கை கொடுத்து உதவினார். இருவருமாகச் சேர்ந்து முதலில் கன்றுக்குட்டியைப் படகில் ஏற்றினார்கள். பின்னர், இளவரசரின் உதவியினால் ஆச்சாரிய பிக்ஷுவும் படகில் ஏறிக்கொண்டார்.

இத்தனை நேரம் எப்படியோ சமாளித்துக்கொண்டிருந்த கன்றுக்குட்டி, படகு ஒரு ஆட்டம் ஆடியதும், கால் தடுமாறித் தொப்பென்று விழுந்தது. நல்லவேளையாக, படகின் உட்புறத்திலேதான் விழுந்தது. பிக்ஷு அதன் அருகில் உட்கார்ந்தார். கன்றின் தலையைத் தன் மடி மீது எடுத்து வைத்துக் கொண்டு அதைத் தடவிக் கொடுக்கத் தொடங்கினார்.

"குருதேவரே! சற்று முன்னால் சூடாமணி விஹாரத்தில் புத்த பகவானின் சரணங்களைப் பிடித்துக்கொண்டு பிராணத் தியாகம் செய்யப் பார்த்தீர்களே? அப்படித் தாங்கள் செய்திருந்தால், இந்த வாயில்லா ஜீவனை இப்போது காப்பாற்றியிருக்க முடியுமா?" என்று இளவரசர் கேட்டார்.

"ஐயா! நான் செய்ய இருந்த குற்றத்தைச் செய்யாமல் தடுத்தீர்கள். அதற்காக நன்றி உடையேன்! ஆம்; இந்தக் கன்றின் உயிரைக் காப்பாற்றியது என் மனத்துக்கு நிம்மதி அளிக்கிறது. சூடாமணி விஹாரம் இடிந்து தகர்ந்து போய் விட்டால்கூட இனி அவ்வளவு கவலைப்பட மாட்டேன்" என்றார் பிக்ஷு.

"ஆச்சாரியரே! ஒரு கன்றின் உயிரைக் காப்பாற்றியதனாலே எப்படி மன நிம்மதி பெறுகிறீர்கள்? இன்று இந்தப் புயலினால் எவ்வளவு ஜீவன்கள் எவ்வளவு கஷ்டப்படுகின்றன? எவ்வளவு ஆயிரக்கணக்கான மக்கள், - ஆண்கள், பெண்கள், குழந்தைகள், வயோதிகர்கள் - கஷ்டப்படுவார்கள்? எத்தனை வாயில்லா ஜீவன்கள், ஆடு மாடுகள், குதிரைகள், பறவைகள் - உயிரை இழக்க நேரிடும்? இந்தத் துன்பங்களுக்கெல்லாம் பரிகாரம் என்ன?" என்று கேட்டார் இளவரசர்.

"ஐயா! நம்மால் இயன்றதைத்தான் நாம் செய்யலாம். அதற்கு மேல் நாம் செய்யக் கூடியது ஒன்றுமில்லை. இயற்கை உற்பாதங்களைத் தடுக்கும் சக்தி நமக்கு இல்லை. புயற்காற்றை நாம் கட்டுப்படுத்த முடியுமா? பெரு மழையைத் தடுக்க முடியுமா? அல்லது மழை பெய்யும்படி செய்யத்தான் முடியுமா? கடல் பொங்கி வரும்போது அதை நாம் தடுத்து நிறுத்தி விட முடியுமா? ஆகா! கடல்களுக்கு அப்பால் உள்ள கீழைத் தேசங்களில் எரிமலை நெருப்பைக் கக்குவதையும் பூகம்பம் நேர்ந்து பூமி பிளப்பதையும் நான் பார்த்திருக்கிறேன். அவற்றுக்கெல்லாம் நாம் என்ன செய்யலாம்? நம் கண் முன்னால் கஷ்டப்பட்டுத் தவிக்கும் ஜீவனுக்கு உதவி செய்யத்தான் நம்மால் முடியும்!"

"குருதேவரே! இயற்கை உற்பாதங்கள் ஏன் உண்டாகின்றன? புயற் காற்றும் பூகம்பமும் ஏன் நிகழ்கின்றன? கொள்ளை நோய்கள் ஏன் வருகின்றன? அவற்றினால் மக்களும் மற்றப் பிராணி

களும் அடையும் துன்பங்களுக்குப் பொறுப்பாளி யார்? நம்மால் இயற்கையின் உற்பாதங்களைத் தடுக்க முடியாது. ஆனால் கடவுளால்கூட முடியாதா? கடவுள் ஏன் இத்தகைய இயற்கை உற்பாதங்களைத் தடுக்காமல் ஜீவராசிகள் இவற்றினால் கஷ்டப்படுவதைப் பார்த்துக்கொண்டிருக்கிறார்?'' என்று இளவரசர் கேட்டார்.

''பொன்னியின் செல்வ! தாங்கள்



இப்போது கேட்ட கேள்விக்கு ஆதி காலம் முதல் மகான்களும் முனிவர்களும் விடை சொல்ல முயன்றிருக்கிறார்கள். ஆனால் அவை எல்லாருக்கும் திருப்தி அளிப்பதாக இல்லை. ஆகையினாலேயே புத்த பகவான் கடவுளைப் பற்றி ஏதும் சொல்லவில்லை. கடவுளைப் பற்றிய ஆராய்ச்சியிலேயே இறங்கவில்லை. 'பிறருக்கு உதவி செய்யுங்கள். பிறருடைய கஷ்டங்களைப் போக்க முயலுங்கள். அந்த முயற்சியிலேதான் உண்மையான ஆனந்தம் அடைவீர்கள். அதிலிருந்து சுக துக்கங்களைக் கடந்த நிர்வாண நிலையை அடைவீர்கள்!' என்று புத்த பகவான் போதித்தார்'' என்று பிக்ஷு கூறினார்.



பட்கு நந்தி மண்டபத்திலிருந்து மேற்குத் திசையில் திரும்பி ஆனைமங்கலத்தை நோக்கிப் போய்க்கொண்டிருந்தது.

பொன்னியின் செல்வரின் உள்ளம் சிந்தனையில் ஆழ்ந்திருந்தது. சற்று முன் பிக்ஷு வெளியிட்ட புத்த சமயக் கொள்கையோடு தமது முன்னோர்களின் சமயக் கொள்கையை அவர் மனத்துக்குள்ளே ஒப்பிட்டுப் பார்த்தார். பிறருக்கு உதவி செய்யும் கடமையைச் சைவ வைஷ்ணவ சமயங்களும் வற்புறுத்துகின்றன. 'பரோபகாரம் இதம் சரீரம்' என்ற மகா வாக்கியமும் இருக்கிறது. ஆனால் அதே சமயத்தில் கடவுளிடம் நம்பிக்கை வைத்துப் பக்தி செய்யும் கடமையையும் நம் முன்னோர் வற்புறுத்தியிருக்கிறார்கள். கடவுளைச் சம்ஹார மூர்த்தியான ருத்திரனாகவும் கருணாமூர்த்தியான மகாவிஷ்ணுவாகவும் உருவங் கொடுத்துப் போற்றியிருக்கிறார்கள். கடவுளுக்கு ஜகன்மாதா உருவம் கொடுத்து, ஒரே சமயத்தில் அன்பே வடிவான உமாதேவியாகவும் கோர பயங்கர துர்க்கா பரமேசுவரியாகவும் வர்ணித்துத் தோத்திரம் செய்திருக்கிறார்கள். இந்தக் கொள்கைகளில் எது உண்மை? உலகத்தின் அன்னை கோர பயங்கர ரண பத்திரகாளியாக இருக்க முடியுமா? ஏன் இருக்க முடியாது? பெற்ற குழந்தையை ஒரு சமயம் தாயார் அன்புடன் கட்டித் தழுவிக் கொஞ்சுகிறாள். இன்னொரு சமயம் கோபித்துக் கொண்டு அடிக்கவும் செய்கிறாள். ஏன் அடிக்கிறாள் என்பது சில சமயம் குழந்தைக்குப் புரிவதில்லை. ஆனால் அடிக்கும் தாயாருக்குத் தான் பெற்ற குழந்தையிடம் அன்பு இல்லை என்று சொல்ல முடியுமா...?

இருட்டுகிற சமயத்தில் படகு ஆனைமங்கலத்திலிருந்த சோழ ம்ாளிகையை அணுகியது. பொங்கி வந்த கடல் அந்த மாளிகையை எட்டவில்லையென்பதைப் படகில் வந்தவர்கள் கண்டார்கள். அரண்மனைக் கருகில் அமைத்திருந்த அலங்காரப் படித்துறையில் கொண்டு போய் முருகய்யன் படகை நிறுத்தினான்.

அதுவரைக்கும் இயற்கையும் படகில் சென்றவர்களிடம் ஓரளவு கருணை செய்தது. பெரும் புயல் அடித்துக் கடல் பொங்கி வந்தாலும் பெருமழை மட்டும் பெய்யத் தொடங்கவில்லை.



சிறு தூற்றலோடு நின்றிருந்தது.

படகு அரண்மனை ஓரத்தில் வந்து நின்ற பிறகுதான் பெருமழை பிடித்துக் கொண்டு பெய்ய ஆரம்பித்தது.

இ

னைமங்கலத்து அரண்மனைக் காவலன் அரண்மனையின் முன் வாசலில் கையில் ஒரு தீவர்த்தியைப் பிடித்துக்கொண்டு நின்றான். சுற்றுப் புறங்களிலிருந்து அன்றிரவு அடைக்கலம் புகுவதற்காக ஓடி வந்திருந்த ஜனங்களோடு அவன் பேசிக்கொண்டிருந்தான்.

படகு ஒன்று வந்து படித்துறையில் நின்றதைக் கண்டதும் காவலன் தீவர்த்தியைத் தூக்கிப் பிடித்தான். பொன்னியின் செல்வரின் திருமுகம் அவன் கண்ணில் பட்டது. உடனே மற்றதையெல்லாம் மறந்து விட்டுப் படித்துறையை நோக்கி ஓட்டமாக ஓடினான்.

இதற்குள் படகிலிருந்து இளவரசரும் ஆச்சாரிய பிக்ஷுவும் படிக்கட்டில் இறங்கினார்கள். கன்றை மெள்ளப் பிடித்துக் கரையில் இறக்கி விட்டார்கள்.

காவலன் இளவரசரின் காலில் விழப் போனான். அவர் அவனைப் பிடித்துத் தடுத்தார். காவலன் கையிலிருந்து தீவர்த்தி கால்வாயில் விழுந்து ஒருகணம் சுடர் விட்டு எரிந்து விட்டு மறைந்தது.

''இளவரசே! சூடாமணி விஹாரத்தைப் பற்றி நானே கவலைப்பட்டுக் கொண்டிருந்தேன். தாங்கள் இங்கே வந்துவிட்டது மிகவும் நல்லதாய்ப் போயிற்று'' என்றான் காவலன்.

''நான் சூடாமணி விஹாரத்தில் இருப்பது உனக்குத் தெரியுமா?''

''தெரியும், ஐயா! இளைய பிராட்டியும் கொடும்பாளூர் இளவரசியும் வந்திருந்தபோது தெரிந்துகொண்டேன். யாரிடமும் சொல்ல வேண்டாம் என்று இளையபிராட்டி பணித்து விட்டுச் சென்றார்...''

''அதை இன்னமும் நீ நிறைவேற்றத்தான் வேண்டும். மாளிகை வாசலில் கூடியிருப்பவர்கள் யார்?''

கடற்கரையோரத்துக் கிராமங்களில் கடல் புகுந்து விட்டதால் ஓடி வந்தவர்கள். இரவு தங்குவதற்கு இடங் கேட்டுக் கொண்டிருந்தார்கள். அவர்களை விரட்டி விடுகிறேன்...''

''வேண்டாம்! வேண்டாம்! அவர்கள் எல்லாருக்கும் இருக்கவும் படுக்கவும் இடங் கொடு. ஆனால் என்னைப் பற்றி அவர்களிடம் சொல்ல வேண்டாம்! உன் தீவர்த்தி கால்வாயில் விழுந்து அணைந்ததும் நல்லதாய்ப் போயிற்று. எங்களை வேறு வழியாக அரண்மனை மேன்மாடத்துக்கு அழைத்துக்கொண்டு போ!'' என்றார் இளவரசர்.

அவர்கள் அரண்மனைக்குள் பிரவேசித்ததும் புயற் காற்றோடு பெருமழையும் சேர்ந்து 'சோ' என்று கொட்டத் தொடங்கியதும் சரியாயிருந்தன.

## ஆறாம் அத்தியாயம்

# முருகய்யன் அழுதான்!

த

ஞ்சை நகருக்கு அருகில், மந்தாகினி ஏறியிருந்த பல்லக்கின் பின்னால் மரம் முறிந்து விழுந்த அதே தினத்தில், வீர நாராயண ஏரியில் காற்று அடித்துக் கரையோரமிருந்த படகு நகர்ந்துபோன அதே நேரத்தில், நாகைப்பட்டினத்தில் நிகழ்ந்த சம்பவங்களையே சென்ற அத்தியாயங்களில் கூறினோம் என்பதை நேயர்கள் அறிந்திருப்பார்கள்.

அன்றிரவு முழுதும் நாகைப்பட்டினமும் அதன் சுற்றுப் புறங்களும் ஒரே அல்லோலகல்லோலமாக இருந்தன. அவரவர்களும் உயிர் பிழைத்திருந்தால் போதும் என்ற நிலைமையில்

ஒருவருக்கொருவர் உதவி செய்து கொள்வதும் இயலாத காரியமாயிருந்தது. ஆயினும் புத்த பிக்ஷுக்கள் நாகைப்பட்டினத்தின் வீதிகளில் அலைந்து ஜனங்களுக்கு இயன்றவரை உதவி புரிந்து வந்தார்கள்.

அதே இரவில் ஆச்சாரிய பிக்ஷுவும் பொன்னியின் செல்வரும் ஆனைமங்கலம் சோழ மாளிகைக்குள் வெகு நேரம் கண் விழித்திருந்து பேசிக்கொண்டிருந்தார்கள். இந்தக் கடும் புயலினால் கடல் பொங்கியதால் கடற்கரையோரத்து மக்கள்



எவ்வளவு கஷ்ட நஷ்டங்களுக்கு உள்ளாவார்கள் என்பதைப் பற்றிப் பேசிக் கவலைப்பட்டார்கள்.



அரண்மனை மணியக்காரனை இளவரசர் அழைத்து அரண்மனைக் களஞ்சியங்களில் தானியம் எவ்வளவு இருக்கிறது என்றும், பொக்கிஷத்தில் பணம் எவ்வளவு இருக்கிறது என்றும் விசாரித்தார். களஞ்சியங்கள் நிறையத் தானியம் இருந்தது என்று தெரிந்தது. திருநாகைக் காரோணத்தில், நீலாயதாட்சி அம்மனின் ஆலயத்தைப் புதுப்பித்துக் கருங்கல் திருப்பணி செய்வதற்காகச் செம்பியன்மாதேவி அனுப்பி வைத்த பொற்காசுகள் பன்னிரண்டு செப்புக் குடங்கள் நிறைய இருப்பதாகவும் தெரிந்தது.

''குருதேவரே! புத்த பகவானுடைய சித்தத்துக்கு உகந்த கைங்கரியத்தைத் தாங்கள் செய்வதற்கு வேண்டிய வசதிகள் இருக்கின்றன. அரண்மனைக் களஞ்சியங்களில் உள்ள தானியம் முழுவதையும் ஏழைகளுக்கு உணவளிப்பதில் செலவிடுங்கள். செப்புக் குடங்களில் உள்ள பொற்காசுகள் அவ்வளவையும் வீடு இழந்தவர்களுக்கு விநியோகம் செய்யுங்கள்!'' என்றார் இளவரசர் பொன்னியின் செல்வர்.

''அது எப்படி நியாயம் ஆகும்? தானியத்தையாவது விநியோகிக்கலாம். தங்கள் பெரிய பாட்டியார், செம்பியன் மாதேவியார், ஆலயத் திருப்பணிக்காக அனுப்பியுள்ள பணத்தை வேறு காரியத்துக்காகச் செலவு செய்யலாமா? அந்த மூதாட்டி வருத்தப்பட மாட்டாரா?'' என்றார் ஆச்சாரிய பிக்ஷு.

''ஆச்சாரியரே! என் பெரிய பாட்டியாருக்கு நான் சமாதானம் சொல்லிக் கொள்ளுவேன். இப்பொழுது இந்தப் பணத்தை ஏழை எளியவர்களின் துயரத்தைத் துடைப்பதற்காகச் செலவு செய்வேன். வருங்காலத்தில் என் பாட்டியாரின் உள்ளம் மகிழ்ந்து பூரிக்கும்படி இந்தச் சோழ நாடெங்கும் நூறு நூறு சிவாலயங்களை எழுப்பிக் கொடுப்பேன். பெரிய பெரிய கோபுரங்களை அமைப்பேன். இந்த மாதிரி கடல் பொங்கி வந்தாலும் முழுக அடிக்க முடியாத உயரமுள்ள ஸ்தூபிகளை எழுப்புவேன். தஞ்சைமா நகரில் தக்ஷிண மேரு என்று சொல்லும்படி விண்ணை அளாவும் உயரம் பொருந்திய கோபுரத்துடன் பெரியதொரு கோயிலைக் கட்டுவேன். ஐயா! இன்று முழுகிப் போன சூடாமணி விஹாரம் மண்ணோடு மண்ணாய்ப் போனாலும் கவலைப்பட வேண்டாம். அதற்கு அருகாமையில் கருங் கல்லினால் திருப்பணி செய்து பிரளயம் வந்தாலும் அசைக்க முடியாத மற்றொரு பெரிய சூடாமணி விஹாரத்தை எழுப்பிக் கொடுப்பேன்!'' என்று இளவரசர் ஆவேசம் ததும்பக் கூறினார்.

''பொன்னியின் செல்வ! வருங்காலத்தைப் பற்றித் தாங்கள் இத்தனை உற்சாகத்துடன் பேசுவது எனக்கு மிக்க மகிழ்ச்சி தருகிறது!'' என்றார் பிக்ஷு.

''ஆம், ஆம்! இந்த உலகில் நான்



ஜீவித்திருந்து ஏதோ பெரிய காரியங்கள் செய்ய வேண்டுமென்பது இறைவனுடைய சித்தம். ஆகையினாலேயே என் உயிருக்கு நேர்ந்த எத்தனையோ அபாயங்களிலிருந்து என்னைக் காப்பாற்றியிருக்கிறார். இன்றைக்குக் கூடப் பாருங்கள். இந்த முருகய்யன் எப்படியோ நல்ல சமயத்தில் வந்து சேர்ந்தான். இல்லாவிடில் தாங்களும் நானும் சூடாமணி விஹாரத்துக்குள்ளேயே இருந்திருப்போம். கடல் பொங்கி வந்து இவ்வளவு சீக்கிரத்தில் விஹாரத்தை முழுக அடித்து விடும் என்று எண்ணியிருக்க மாட்டோம்..."

''அது உண்மைதான். ஐந்நூறு ஆண்டுகளாக நடவாத சம்பவம் இன்று பிற்பகலில் ஒரே முகூர்த்த நேரத்தில் நடந்து விடும் என்று யார் எதிர்பார்த்திருக்க முடியும்? கருணைக் கடலாகிய புத்த பகவான் பொங்கி வந்த கடலின் கோபத்திலிருந்து தங்களைக் காப்பாற்றினார். தங்கள் மூலம் என் அற்பமான உயிரையும் காத்தருளினார். தாங்கள் செய்ய உத்தேசிக்கும் காரியத்தை நான் பூரணமாக ஒத்துக் கொள்கிறேன். அரசாங்கப் பொக்கிஷத்திலிருந்து எடுத்துச் செலவு செய்தால் தனாதிகாரி பெரிய பழுவேட்டரையர் கோபங் கொள்வார். ஆலயத் திருப்பணிக்காக வைத்திருக்கும் பணத்தை வீடு வாசலிழந்த ஏழைகளுக்கு விநியோகிப்பதைக் குறித்துத் தங்கள் திருப் பாட்டியார் கோபித்துக் கொள்ள மாட்டார். அவ்விதம் தாங்கள் செய்வது உசிதமானது. ஆனால், இந்த மகத்தான புண்ணிய காரியத்தைத் தாங்களே முன்னின்று நடத்துவது அல்லவோ பொருத்தமாயிருக்கும்? இந்த ஏழைச் சந்நியாசி அவ்வளவு பெரிய பொறுப்பை ஏற்க முடியாது....!"

''குருதேவரே! நான் முன்னின்று நடத்தினால் என்னை வெளிப்படுத்திக் கொள்ள வேண்டிய அவசியம் ஏற்படும். பாண்டவர்களின் அஞ்ஞாத வாசத்தைப் பற்றித் தாங்கள் கூறியது என் நெஞ்சில் பதிந்திருக்கிறது. நமது செந்தமிழ் நாட்டுப் பொய்யாமொழிப் புலவரின் வாக்கும் நினைவுக்கு வந்தது.

**''வாய்மை எனப்படுவது**
**யாதெனின் யாதொன்றுந்**
**தீமை இலாத சொலல்''**

என்றும்,

**''பொய்ம்மையும் வாய்மைஇடத்து**
**புரைதீர்ந்த**
**நன்மை பயக்கு மெனின்''**

என்றும் தமிழ் மறை கூறுகிறதல்லவா? என்னை நான் இச்சமயம் ஜனங்களுக்கு வெளிப்படுத்திக் கொள்வதால் நாட்டில் குழப்பமும் கலகமும் விளையலாம் என்று அறிவிற் சிறந்த என் தமக்கை யார் கருதுகிறார். நான் மறைந்திருப்பதனால் யாருக்கும் எத்தகைய தீமையும் இல்லை. ஆகையால் புயலின் கொடுமையினால் கஷ்டப்பட்டுத் தவிக்கும் மக்களுக்குத் தாங்கள்தான் அரண்மனையில் உள்ள பொருளைக் கொண்டு உதவி புரிய வேண்டும்'' என்றார் இளவரசர்.

''பொன்னியின் செல்வ! என் மனம் எதனாலோ மாறிவிட்டது! தங்களை வெளியிட்டுக் கொண்டு மக்களுக்கு உதவி செய்ய இதுவே சரியான தருணம் என்று என் மனத்தில் உதித்திருக்கிறது. அதுவே புத்த பகவானுடைய சித்தம் என்று கருதுகிறேன்'' என்றார் பிக்ஷு.

ச் சமயம் யாரோ விம்மும் குரல் கேட்டு இருவரும் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தார்கள். முருகய்யன் ஒரு மூலையில் உட்கார்ந்து முகத்தைக் கைகளால் மூடிக்கொண்டு விம்மி விம்மி அழுது கொண்டிருந்தான். இளவரசர் அவனிடம் சென்று கையைப் பிடித்து அழைத்துக்கொண்டு வந்தார்.

''முருகய்யா! இது என்ன? ஏன் அழுகிறாய்?'' என்று கேட்டார்.

''என் மனையாள்... என் மனையாள்...'' என்று தடுமாற்றத்துடன் கூறி முருகய்யன் மேலும் விம்மினான்.

''ஆமாம், ஆமாம்! உன் மனைவியை நாங்கள் அடியோடு மறந்து விட்டோம். அவள் இன்றிரவு புயலிலும் மழையிலும் என்ன ஆனாளோ என்று உனக்குக் கவலை இருப்பது இயல்புதான். ஆயினும் இந்த நள்ளிரவு நேரத்தில் செய்யக் கூடியது ஒன்றுமில்லை. பொழுது விடிந்ததும் உன் மனையாளைத் தேடிக் கண்டுபிடிக்கலாம்'' என்றார் இளவரசர்.

''ஐயா! அதற்காக நான் வருந்தவில்லை. அவளுக்கு ஆபத்து ஒன்றும் நேர்ந்திராது. இதைப் போல எத்தனையோ பயங்கரமான புயலையும் வெள்ளத்தையும் அவள் சமாளித்திருக்கிறாள்!'' என்றான் முருகய்யன்.

''பின் எதற்காக அழுகிறாய்?'' என்று இளவரசர் கேட்டார்.

படகோட்டி தட்டுத் தடுமாறிப் பின்வரும் விவரங்களைக் கூறினான்:-

''அவளைப் பற்றி நான் என்னென்னமோ சந்தேகப்பட்டதை நினைத்து வருத்தப்படுகிறேன். அவள்தான் என்னை வற்புறுத்திக் கோடிக்கரையிலிருந்து இங்கே அழைத்துக்கொண்டு வந்தாள். தாங்கள் சூடாமணி விஹாரத்தில் இருக்கக்கூடும் என்று அவள்தான் சொன்னாள். அவளுடைய கட்டாயத்துக்காகவே நான் வந்தேன். தங்களுக்கு ஏதோ தீங்கு செய்ய நினைக்கிறாளோ என்றுகூடப் பயந்தேன். அது எவ்வளவு பிசகு என்று இப்போது தெரிந்தது. சற்று முன்னால் தாங்கள் இந்தப் படகோட்டி ஏழையைக் குறித்துப் பாராட்டிப் பேசினீர்கள். கடவுள் என் மூலம் தங்கள் உயிரைக் காப்பாற்றியதாகக் கூறினீர்கள். ஆனால் என்னை இந்தக் காரியத்துக்குத் தூண்டியவள் என் மனையாள். அவளைப் பற்றிச் சந்தேகித்தோமே என்று நினைத்தபோது என்னை மீறி அழுகை வந்து விட்டது!''

இதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த இளவரசர் பொன்னியின் செல்வரின் உள்ளத்தில் வேறொரு ஐயம் இப்போது உதித்தது.

''அப்பனே! உன் மனையாள் மிக்க உத்தமி. அவளைப் பற்றி நீ சந்தேகித்தது தவறுதான். ஆனால் அவளுக்கு நான் இங்கே இருப்பது எப்படித் தெரிந்தது?'' என்று கேட்டார்.

''என் அத்தையும் என் தங்கை பூங்குழலியும் நாகைப்பட்டினத்துக்குப் படகில் புறப்பட்டார்கள். அதிலிருந்து என் மனையாள் ஒருவாறு ஊகித்துத் தெரிந்துகொண்டாள்.''

''எந்த அத்தை?'' என்று இளவரசர் பரபரப்புடன் கேட்டார்.

''ஐயா! ஈழத் தீவில் தங்களைப் பல முறை அபாயங்களிலிருந்து காப்பாற்றிய ஊமை அத்தைதான்...''

''ஆகா! அவர்கள் இப்போது எங்கே? உன் அத்தையும் பூங்குழலியும் என்ன ஆனார்கள்? இங்கே புறப்பட்டு வந்தார்கள் என்று கூறினாயே?''

''ஆம்; புறப்பட்டு வந்தார்கள். ஆனால் அவர்கள் பிரயாணம் தடைபட்டு விட்டது!'' என்று சொல்லிவிட்டு மேலும் முருகய்யன் விம்மி விம்மி அழத் தொடங்கினான்.

பொன்னியின் செல்வர் மிக்க கவலை அடைந்து அவனைச் சமாதானப் படுத்தி விவரங்களைக் கேட்டுத் தெரிந்துகொண்டார். ஈழத்து அரசியை யாரோ மூர்க்கர்கள் பலவந்தமாகப் பிடித்துக்கொண்டு போனதை அறிந்ததும் இளவரசருக்கு வந்த கோபத்துக்கு அளவில்லை. அவர்களை ராக்கம்மாள் தடுக்கப் பார்த்தான் என்றும்,

அதற்காக அவளை அடித்து மரத்தில் சேர்த்து வைத்துக் கட்டி விட்டுப் போனார்கள் என்றும் அறிந்தபோது ராக்கம்மாளின் பேரில் ஏற்பட்டிருந்த ஐயம் நீங்கிவிட்டது. இளவரசருக்கு அவள் பேரில் இப்பொழுது மதிப்பும் அபிமானமும் வளர்ந்தன.

"குருதேவரே! கேட்டீர்களா! இந்த உலகத்தில் நான் போற்றும் தெய்வம் ஒன்று உண்டு என்றால், ஈழத்தரசியாகிய மந்தாகினி தேவிதான். அந்த ஊமை மாதரசிக்கு எந்தவிதமான தீங்கும் செய்தவர்களை நான் மன்னிக்க முடியாது. பழுவேட்டரையர்கள் என்னைச் சிறைப்படுத்தக் கட்டளை பிறப்பித்தது குறித்து நான் சிறிதும் கோபம் கொள்ளவில்லை. ஆனால் ஊமை ராணிக்கு ஏதேனும் அவர்கள் தீங்கு செய்திருந்தால் ஒருநாளும் என்னால் பொறுக்க முடியாது. பழுவேட்டரையர் குலத்தை அடியோடு அழித்துவிட்டு மறு காரியம் பார்ப்பேன். என்னைப் பெற்ற அன்னையும் என் சொந்தத் தந்தையும் ஈழத்து அரசிக்குத் தீங்கு செய்திருந்தாலும் அவர்களை என்னால் மன்னிக்க முடியாது. குருதேவரே! நாளைக்கே நான் தஞ்சாவூருக்குப் பிரயாணப்படப் போகிறேன். வியாபாரியைப் போல் வேடம் பூண்டு இந்தப் படகோட்டி முருகய்யனைத் துணைக்கு அழைத்துக் கொண்டு கிளம்பப் போகிறேன். ஈழத்தரசியைப் பற்றி அறிந்து கொண்டாலன்றி என் மனம் இனி நிம்மதி அடையாது. ஆச்சாரியரே! புயலினால் கஷ்டப்பட்டவர்களுக்கு உதவி செய்யும் கைங்கரியத்தைத் தாங்கள்தான் நடத்த வேண்டும். தங்கள் பெயரால் நடத்தப் பிரியப்படாவிட்டால் 'ஈழத்து நாச்சியார் அறச்சாலை' என்று வைத்து நடத்துங்கள்! ஈழத்தரசி புத்த மதத்தில் பற்றுக்கொண்டவர் என்பது தங்களுக்குத் தெரியுமோ, என்னமோ? 'பூதத் தீவு' என்று மக்கள் அழைக்கும் போதத் தீவில் உள்ள புத்த பிக்ஷுணிகளின் மடத்திலே தான் அவர் சாதாரணமாக வசிப்பது வழக்கம்!" என்றார் இளவரசர்.

புத்த பிக்ஷுவும் இதற்கு மாறு சொல்லாமல் ஒப்புக்கொண்டார்.

மறுநாள் புயலின் உக்கிரம் தணிந்தது. பொங்கி வந்த கடலும் பின் வாங்கிச் சென்றது. ஆனால் அவற்றினால் ஏற்பட்ட நாச வேலைகள் வர்ணனைக்கு அப்பாற்பட்டிருந்தன. நாகைப்பட்டினம் நகரில் பாதி வீடுகளுக்கு மேல் கூரைகளை இழந்து குட்டிச் சுவர்களாக நின்றன. அந்த வீதிகளில் ஒன்றில் இளவரசர் அருள்மொழிவர்மர் மூட்டையைச் சுமந்து நடந்துகொண்டிருந்தார். அவர் பின்னால் முருகய்யன் இன்னும் ஒரு பெரிய மூட்டையைச் சுமந்து தொடர்ந்து போய்க் கொண்டிருந்தான். புயலினாலும் வெள்ளத்தினாலும் நேர்ந்திருந்த அல்லோலகல்லோலங்களைப் பார்த்துக்கொண்டு அவர்கள் போனார்கள்.

இடிந்த வீடு ஒன்றின் சுவரின் மறைவிலிருந்து ஒரு பெண் அவர்கள் வருவதைப் பார்த்துக்கொண்டேயிருந்தாள். அவள் வேறு யாரும் இல்லை. முருகய்யனின் மனையாள் ராக்கம்மாள்தான். இளவரசரும் முருகய்யனும் அவள் நின்ற இடத்துக்கு அருகில் வரும் வரையில் அவள் பொறுமையோடு காத்திருந்தாள். திடீரென்று வெளிப் புறப்பட்டு ஓடி வந்து இளவரசரின் முன்னால் வந்து காலில் விழுந்தாள். முருகய்யன் அவளுடைய கவனத்தைக் கவர முயன்றான். உதட்டில் விரலை வைத்துச் சமிக்ஞை செய்தான். 'உஷ்' உஷ்' என்று எச்சரித்தான். ஒன்றும் பயன்படவில்லை.

"சக்கரவர்த்தித் திருமகனே! வீராதி வீரனே! பொன்னியின் செல்வா! சோழ நாட்டின் தவப் புதல்வா! சூடாமணி விஹாரத்தில் முழுகிப் போய் விடாமல் தாங்கள் பிழைத்து வந்தீர்களா? என் கண்கள் என்ன பாக்கியம் செய்தன?" என்று கூச்சலிட்டாள்.

வீதியில் அச்சமயம் அங்குமிங்கும் போய்க்கொண்டிருந்தவர்கள் அத்தனை பேருடைய கவனமும் இப்பொழுது இளவரசரின்பால் திரும்பின.

(தொடரும்)

# இது புதுசு!

கழுத்து நரம்பு வலி என அல்லல்படுபவர்களுக்கு - இது சர்வரோக நோய் நிவாரணி எனச் சொல்லலாம். இன்றைய ஜப்பானியர்களின் கை கண்ட மருந்து



**புதிது புதிதாகப் பொருட்களை உருவாக்க ஜப்பானியர்களை விட்டால் ஆளேது. ஜப்பான் பஜார்களில் 'இது புதுசு' என்ற ஸ்டைலில் சமீபத்தில் வந்துள்ள சமாசாரங்கள்தான் இவை.**

## டிமாய் - கி

**பீ**ட்சா பற்றி உங்களுக்குத் தெரியும்! போனில் ஆர்டர் செய்தால் அடுத்த ஒரு மணி நேரத்தில் வீட்டில் வந்து இறங்கும். இது போன்ற ஃபாஸ்ட் புட்கள் சூடாகக் கிடைத்து விட்டால் சுவைத்து ரசிக்கலாம்; கொஞ்சம் ஆறிப் போனால் அதனுடன் நடக்கும் போராட்டம் கற்பனையிலேயே கூட அலுத்துப் போகும். இது போன்ற சமாசாரங்களை டெலிவரி செய்ய வந்த சாதனம்தான் டிமாய்-கி.

டூ வீலரின் பின்னால் உள்ள கேரியரில் கூடச்சுட அடுக்கிக் கொண்டு, கரடுமுரடான பாதையில் வேகமாகச் செல்லும்போது, அந்த அதிர்வில் பாதி உணவுப் பொருள் சிதறி, தரைக்குப் பசியாற்ற, மீதி சின்னாபின்னமான நிலையில் சம்பந்தப்பட்ட ஆர்டரை சென்றடையும் வேலைக்கு விடிவு காண வந்ததுதான் இந்த உணவு கேரியர். படத்தில் காட்டியுள்ளது போல இரண்டு சக்கர வாகனத்தில் பின் கேரியரில் பொருத்திவிட்டு அதில் உணவு வகைகளை அடுக்கி, அதன்மேல் பச்சை நிற பிளாஸ்டிக் ஷீட்டால் மூடி சுடச்சுட டெலிவரி செய்ய உதவும் சாதனம். ஏர் குஷன் ஒன்றும் இதில் உண்டு.



## மசாஜ் கிட்

**அ**வசர கதியான வாழ்க்கை வேகத்தில் அன்றாடம் நடப்பது கூட மறந்த நிலையில், உடலில் தசைப்பிடிப்பு, முதுகுப் பிடிப்பு,

இது தானாம். அலுவலகம் நுழைந்தது முதல் வெளியேறும் வரை தனக்கான நாற்காலியில் அட்டை போல ஒட்டிக் கொண்டிருந்தபடி பணியாற்றும் நபர்களுக்கு முதுகுப் பகுதியில் ரத்த ஓட்டம் குறைகிறதாம். அதை அதிகரிக்கவும் இது உதவுகிறது. சுருக்கமாகச் சொல்வதானால் மசாஜ் பார்லர்களின் மென்மையான கைகள் செய்யும் மாயாஜால வித்தைகளைச் செய்து, மனுஷன் உணர்ச்சிவசப்படாமல் நார்மல் நிலைமைக்குத் திரும்ப உதவும் சாதனங்கள் இவை.

இதில் உள்ள சாதனம் ஒன்றில் மஞ்சள் குமிழ் உள்ள பகுதியை வலியுள்ள சந்தியில்

மீது வைத்து அழுத்தம் கொடுத்து மறு முனையை அனசத்தால் போதும். அல்லது மற்றொரு சாதனத்தைப் முதுகின் தசைகள் மீது உருட்டி விளையாடச் செய்ய வேண்டும். இதற்கு ஏற்ப மேலும் கீழும் இழுக்க கைப் பிடிகளும் இதில் தரப்பட்டுள்ளன.

## செல்ஃபோன் ஸ்ட்ராப்!

நம்ம ஊரு இளம் பெண்கள் ஃபேஷன் என்ற பெயரில் எதையாவது எடுத்து எதாவது அலங்காரம் செய்து கொண்டு போவது






போல கையில் கிடைத்த சமாசாரங்களை பயன்படுத்த எண்ணிய ஜப்பானிய வாலிபி கள் தங்களது செல்ஃபோனை ஸ்டைலாக மாட்டிக் கொள்ள, இடுப்பில் தொங்க விட்டுக் கொள்ள(!) சில சாதனங்களைப் பயன்படுத்த அவையே செல்ஃபோன் ஸ்ட்ராப்கள் என உருமாறி... ஃபேஷனாகி விட்டன.

தொழில் நுட்பத்தில் முன்னேறிய ஜப் பானில் மற்ற நாடுகள் போல இல்லாமல் செல்ஃபோன் பயன்பாடு எக்கச்சக்கத்துக்கு கூடிப் போக (1999லேயே 51.2 மில்லியன் என ஒரு புள்ளி விவரம் சொல்கிறது. அதன்படி இரண்டு ஜப்பானியரில் ஒருவரிடம் செல்ஃபோன் இருக்குமாம்) செல்ஃபோன் ஸ்ட்ராப் ஒரு விளம்பர சாதனமாகவே மாறி விட்டது.

எல்லா கம்பெனிகளும் செல்ஃபோன் ஸ்ட்ராப் மூலம் தங்கள் விளம்பரத்தை வெளி யிட தொடங்கி விட்டன. இதனால் புதிதாக ஒரு பொருள் சந்தைக்கு அறிமுகமானால் அதை விலாவரியாக விளக்கும் அம்சத்துடன் ஸ்ட்ராப் டிசைன் செய்வது எளிதான, சிக்கன மான விளம்பரம் எனக் கருதப்படுகிறதாம். இதனால் இப்போது ஜப்பானிய விளம்பர நிறுவனங்கள் பொருட்களுக்கான டிசைன், விளம்பரம் போன்றவற்றை வடிவமைப்ப துடன் ஸ்ட்ராப் பற்றி யும் யோசிக்க வேண்டி யுள்ளதாம்.





படத்தில் நீங்கள் பார்ப்பது வெவ்வேறு விதமான லேட்டஸ்ட் செல்போன் ஸ்ட்ராப் டிசைன்கள் தான்.

— ரூமன்

நன்றி: நிப்போனியா

**மேஷம்:** *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

பல கிரகங்கள் உங்களுக்கு ஆதரவு தர்றதால இந்த வாரம் சாதகமானதுதான். குறிப்பா பிஸினஸ், வர்த்தகத் துறைல இருக்கறவங்களுக்குப் பல சிக்கல்கள் இருந்த இடம் தெரியாம போயி, வளர்ச்சிப் பாதை தட்டுப்படும். பணம் புரளும். வீட்டுல விசேஷங்கள் நடக்கும். ஆபீஸ்ல பதவி உயர்வோ, சம்பள உயர்வோ கிடைக்கும். சிலருக்கு வெளி நாட்டிலேருந்து ஏதாவது அழைப்பு வரலாம். பெண்களுக்குப் புதிய ஆடைகள் யோகம் கண்டிப்பா இருக்கும்.

**ரிஷபம்:** *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*

ஒண்ணும் சரிப்படலைங்க. போன வாரத்துப் பிரச்னைகள் அப்படியே தொடருது. என்ன ஒரே ஒரு ஆறுதல்னா, இப்ப உங்க மனநிலை சிரமங்களைத் தாங்கிக்கப் பக்குவப்பட்டுடும். பல விஷயத்துல அசால்டா இருக்காதீங்க. போனாபோவுதுன்னு கேக்கறவங்களுக்கெல்லாம் கடன் குடுக்கறது வேணாம்.

**மிதுனம்:** *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

தொட்டதெல்லாம் துலங்கற நேரம்ங்கறதால பலர் பார்த்து வியந்து போற்றும் சந்தோஷ நேரம் இது. எழுத்தாளர்களுக்கு அதிர்ஷ்ட வாய்ப்புகளும் புகழும் ஓஹோன்னு உயரும். அடுத்த ரெண்டு வாரத்துல உங்க அந்தஸ்து எக்கச்சக்கமா உயரும். எலக்ட்ரானிக்ஸ், கம்ப்யூட்டர் துறைக்காரங்களும் தொழில்ல அமோக வளர்ச்சி காண்பாங்க. பெண்களுக்குப் பதவி உயர்வோ ஊதிய உயர்வோ இருக்கும். விளையாட்டுத் துறையினருக்கு போட்டிகள்ல வெற்றி உறுதி. சில வெளியூர் பயணங்கள் இருக்கும்.

**கடகம்:** *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

அரசு ஊழியர்களுக்கு ஆதாயமான காலகட்டம். புதிய பொறுப்புகள் வந்து சேரும். ரொம்ப நாளா இழுத்தடிச்ச கேஸ்கள் இப்ப சுமுகமா தீர்ந்துடும். கலைத் துறையினருக்கு வெற்றி வாய்ப்புகள் வந்து சேரும். சமூக சேவகர்களுக்குப் புகழ் உறுதி. சிலருக்கு, ஆன்மிக நாட்டம் மேலோங்கி, புண்ணிய யாத்திரை போலாமான்னு பிளான் போடுவாங்க. அரசியல்வாதிகளுக்குத் தேர்தல் வெற்றி உற்சாகம் கொடுக்கும்.

**சிம்மம்:** *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

மனசுல துணிச்சலும் தன்னம்பிக்கையும் பொங்கும். பேச்சாற்றலால் பல காரியங்களை சாதிக்கப் போறீங்க. வீர சாகசங்கள்ல நாட்டமுள்ளவங்களுக்கு அல்வா மாதிரி சான்ஸ் கிடைக்கும். சிலர் புது வாகனம் வாங்குவாங்க. வயசுப் பசங்களுக்குக் கல்யாண ஏற்பாடு நடக்கும். நண்பர்கள் தக்க சமயத்துல உதவுவாங்க. போட்டி பந்தயங்கள்ல வெற்றி உறுதி. அரசுப் பணியாளர்கள், ராணுவ வீரர்களுக்கு நல்ல அதிர்ஷ்டங்களும் லாபமும் கிடைக்கும். பணப் பிரச்னை இல்லாத வாரம் இது. உபயோகமான இன்வெஸ்ட்மெண்ட்ஸ் ஏதாவது செய்யுங்க. நண்பர்களுக்குக் கடன் கொடுக்கற விஷயத்துல மட்டும் கவனமா இருங்க.

**கன்னி:** *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

வீட்டு நிலவரம் அவ்ளோ பிரமாதமா இருக்கும்னு சொல்ல முடியாது. மனஸ்தாபங்களைத் தவிர்க்க முடியாம அவஸ்தைப் படுவீங்க. பெரியவங்களை மரியாதைக் குறைவா பேசாம இருங்க. நாலு பேர் அபிப்பிராயம் கேட்காம எந்த முக்கியக் காரியத்துலயும் இறங்காதீங்க. மாணவர்களுக்குப் படிப்புல நாட்டம் குறையற நேரம் இது. மனசை அலைபாய விடாம

## நடக்குமென்பார்

கட்டிப் பிடிக்க வேண்டியது அவசியம். மின்சாரப் பணியாளர்கள் வெள்ளி, சனில ஆபீஸுக்கு லீவு போட்டாக்கூட நல்லது. விபத்துத் தவிர்ப்புங்கறது ஒரு பக்கம் இருக்க, வீட்டுல விருந்தாளிகள் வேற வரப் போறாங்களே!

**துலாம்:** *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம், 3-ம் பாதம் வரை)*

பிரச்னை இல்லாத வாரம்: துணிஞ்சி எந்தப் புது முயற்சியையும் தொடங்கலாம். பெரியோர் ஆதரவு, பேங்க் உதவி, நண்பர்கள் சப்போர்ட் எல்லாம் கிடைக்கும்.

ஏற்றுமதி வியாபாரிகளுக்கு நல்ல லாபம் வரும். ஆசிரியர்கள், எழுத்தாளர்கள் வளர்ச்சி பெறுவாங்க. பெண்களுக்கு மன உற்சாகம் கிடைக்கறாப்ல வீட்டுல சில விசேஷங்கள் நடக்கும். வராத கடன் பாக்கிகள் வந்து சேரும். விஞ்ஞானிகளும் விவசாயிகளும் நிலை உயரப் பெறுவாங்க. சினிமாக்காரங்களுக்கு மட்டும் சில பிரச்னைகள் இருக்கும். யாருக்கும் எதுக்கும் இப்ப வாக்குக் கொடுக்காதீங்க.



**விருச்சிகம்:** *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

உங்களுக்கென்னங்க! ஹாயா இருப்பீங்க! உல்லாசமான நேரம் வேற. விருதுகள், விருந்துகள், நண்பர்கள் வருகைனு இந்த வாரம் ரொம்ப உற்சாகமாவே இருக்கும். வீட்டுல நல்ல காரியங்கள் நடக்க சந்தர்ப்பம் கூடி வரும். கலைத்துறையினரும் இஞ்சினியர்களும் நல்ல வளர்ச்சி காண்பாங்க. உத்தியோகஸ்தர்களுக்கு மேலதிகாரிகள் எதிர்பாராத இன்ப அதிர்ச்சி அளிப்பாங்க. பெண்களுக்கு

# நடக்கும்!

அலுவலக ரீதில சில எதிர்ப்புகள் இருந்தாலும், சாதுர்யமா சமாளிச்சிடுவாங்க.



**தனுசு:** *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

வேக வேகமா திட்டங்கள் போடுவீங்க. ஆனா செயல் படுத்துறதுல சில தடங்கல்கள் வரலாம். பொருளாதார ரீதில பெரிய பிரச்னைகள் இருக்காதுன்னாலும் வரவும் செலவும் சமமாத்தான் இருக்கும். உத்யோக மாறுதல் ஏதும் எதிர்பார்த்திட்டிருந்தீங்கனா அது இப்ப சாத்தியமாகாது. வெளிநாடு பயணக் கனவையெல்லாம் மூட்டை கட்டி வைச்சிட்டு, வீட்டுல கல்யாணம் பேச ஆரம்பிச்சிருந்தாங்கன்னா, பண்ணிக்கிட்டு செட்டிலாகற வழியைப் பாருங்க.



சிம்ம ராசிக்காரரான ஜெயலலிதாவுக்கு பல காரியங்களில் வெற்றி கிடைக்குமாம்!



**மகரம்:** *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

சுமாரான வாரம். எதிர்காலம் பற்றிய கவலை- பயம் சிலருக்கு அளவுக்கதிகமாவே இருக்கும். கவலைப்படறதை விட்டுட்டு உபயோகமா யோசிக்க ஆரம்பிச்சீங்கன்னா பல திட்டங்கள் தோன்றும். எந்த முக்கிய முடிவுன்னாலும் பெரியவங்களைக் கேட்காம எடுக்காதீங்க. கடல் வாணிபம் செய்யறவங்களுக்கு நல்ல லாபம் கிடைக்கிற வாரம். அதே சமயம் சிலருக்கு எதிர்பாராத நஷ்டமும் வரலாம்.



**கும்பம்:** *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

ஊர் விவகாரங்கள்ல தலையிடறது வேணாம். ஆபீஸ்ல யாரையும் எடுத்தெறிஞ்சி பேசாதீங்க. குடும்பத்தை அக்கறையா கவனிங்க. பொறுப்புகளைப் பகிர்ந்து கொடுத்துட்டு, சும்மா சூப்பர்வைஸ் பண்ணுங்க; போதும். இதெல்லாம் எதிர்மாறா நடந்தா பிரச்னைகள் கண்டிப்பா வரும். வழக்குகள் ஏதாவது இருந்தா, அது இப்ப சுமுகமா தீரும். பெண்களுக்குப் பிதுரார்ஜித சொத்து ஏதாவது கிடைக்கலாம்.



**மீனம்:** *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

எடுத்த காரியத்துல வெற்றி உறுதி. குடும்பத்துல மகிழ்ச்சி நிலவும். சிலருக்குத் திருமணப் பேச்சு வார்த்தைத் தொடங்கலாம். பணப்பிரச்னை இருக்காதுன்னாலும் செலவைக் கட்டுக்குள்ள வைக்க வேண்டியது அவசியம். நண்பர்கள் தக்க சமயத்துல உதவுவாங்க. வெளி இடங்கள்ல தங்கறபோது எச்சரிக்கையா இருங்க. திருட்டு போற சான்ஸ் இருக்கு. இளைஞர்களுக்கு வேலை வாய்ப்புகள், திருமணம் கைகூடும்.

# பழி

**மா**ணவர் பைலட் லைசன்ஸ் பெறுவதற்கான பயிற்சி தொடங்கியது.

"விமானத்தில் பயன்படும் எரிபொருள் எது தெரியுமா?" என்ற கேள்வியைக் கேட்ட பயிற்சியாளர், "கெரஸின்" என்ற பதிலைச் சொன்னதும் சுவாதிக்கு ஆச்சரியம் ஏற்பட்டது.

வகுப்புகளில்தான் என்றில்லை. வெளியிலும் பல விஷயங்களை அறிந்துகொண்டாள். ஒருநாள் விமானதளத்தை அருகில் சென்று பார்த்தபோது ராட்சத வாக்குவம் கிளீனர்களால் அது எவ்வளவு சுத்தமாகப் பராமரிக்கப்படுகிறது என்பதை அறிந்து கொண்ட போது அவளுக்கு ஏற்பட்ட ஆச்சரியம், 'தூசி ஏதாவது விமானத்துக்குள் சென்று விட்டால் அதனால் எவ்வளவு ஆபத்துகள் ஏற்படக் கூடும்' என்பதை அறிந்து கொண்டதும் பலமடங்காகப் பெருகியது.

பயிற்சியை அவள் வெகுவாக ரசிக்கத் தொடங்கினாள். சுவாரசியமான இன்னொரு விஷயமும் அவளுக்கு இருந்தது. அவளது குழுவில் இன்னொரு பெண்மணியும் சேர்ந்திருந்தாள். பார்க்கும் போதே ஒரு ஆடம்பரமும், அந்நியத்தனமும் தெரிந்தது. தேநீர் இடைவேளையில் அவளருகே சென்று சுவாதி தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டாள்.

அவள் பதிலுக்குத் தன் பெயரை ஏதோ ஒப்புக்குச் சொன்ன மாதிரிதான் இருந்தது. என்றாலும் அதைப் பெரிதாக எடுத்துக் கொள்ளாமல் சுவாதி, "நாம ரெண்டு பேரும் ஒரே லட்சியத்தோடு இங்கே வந்திருக்கிறோம். நாம் ஒருவருக்கொருவர் உதவியாக இந்தப் பயிற்சிக்காலம் முடியும் வரை இருப்போம்கிற நம்பிக்கை எனக்கு இருக்கு' என்று பேச்சைத் தொடர, எதிர்பாராத விதத்தில் பேசினாள் அந்தப் பெண்மணி–

"இதோ பாருங்க, இப்படிப் பேசிட்டு, நாளைக்கே என்கிட்டே வந்து 'பயிற்சி வகுப்புகளுக்குக் கட்டப் பணம் இல்லே. உதவி செய்யுங்க'ன்னு கேட்கக்கூடாது, சொல்லிட்டேன்" என்றபடி அவள் நகர, முகத்தில் அறையப்பட்டது போல உணர்ந்தாள் சுவாதி. அருகில் ஒரு கம்பீரமான ஆணின் குரல் கேட்டது. "கவலைப்படா



தேம்மா. ஒரு பெரிய தொழிலதிபரின் பெண் என்பதால்தான் அவளுக்கு கர்வம். இவங்க அப்பாவுக்குச் சொந்தமாக ஒரு விமானம் இருக்கு தெரியுமா?''

''அப்படியா?'' என்று பிரமித்த சுவாதி ''பின்னே ஏன் விமானம் சம்பந்தப்பட்ட எளிமையான கேள்விகளைப் பயிற்சியாளர் கேட்டபோது கூட இவங்க பதில் சொல்லலே?'' என்றாள்.

''ஒண்ணு சொந்தமாகவே ஒரு பிரம்மாண்ட அலுமினியப் பறவை இருந்தும், அதைப் பற்றி அறிந்து கொள்ளாத முட்டாள்தனம். அல்லது பதில் தெரிந்திருந்தும் அதை எதற்கு வெளிப்படுத்த வேண்டும் என்கிற கர்வம்'' என்றவர் தம்மை அறிமுகப்படுத்திக் கொண்டார். அவர் பெயர் விஷ்ணுராம். சீப் பைலட்டாகப் பணி புரிகிறார்.

''நானும் நடுத்தரவர்க்கத்தைச் சேர்ந்தவன்தான். உன் பெயரென்ன. உன் அப்பா அம்மா என்ன செய்யறாங்க?''

''என் பெயர் சுவாதி. என் அம்மா

அருணா சரண்யா

20

'தின நண்பர்'ன்ற நாளிதழிலே உதவி ஆசிரியராக இருக்காங்க."

"அப்படின்னா மிஸஸ் சத்யாவின் பெண்ணா நீ?"

ஆனந்த அதிர்ச்சியாக இருந்தது சுவாதிக்கு. அம்மா இவ்வளவு பிரபலமானவளா? ஒவ்வொரு மூலையிலும் அவளுக்கு அறிமுகமானவர்களைத் தான் சந்திக்கும்படி நேர்கிறதே!

"உங்களுக்கு என் அம்மாவைத் தெரியுமா?"

"எனக்கு எப்படித் தெரியாமல் இருக்க முடியும்? என் உடம்பிலே ஓடுகிற ரத்தத்தில் அவங்களுடைய பங்கும் உண்டே. ஒருமுறை ஸ்கூட்டரில் போனபோது ஏற்பட்ட விபத்தில் தலையில் அடிபட்டு நிறைய ரத்தம் வெளியேறிடுச்சு. ரொம்ப அரிதான ஏ-1-பி நெகடிவ் வகை ரத்தம் எனக்கு. உடனடியாக ரத்தம் கிடைக்காததால் தொலைக்காட்சியில் அறிவிச்சாங்க. அதைப் பார்த்து விட்டு வந்து, எந்த அறிமுகமும் இல்லாத எனக்கு ரத்த தானம் செய்தாங்க உங்கம்மா. மறக்கக் கூடிய உதவியா அது?"

அம்மாவின் ரத்தப் பிரிவு மட்டுமல்ல, அவளே அரிதானவள்தான் என்று பட்டது.

"நீ பைலட் ஆகணும்கிறது யாருடைய விருப்பம்? உங்க அப்பாவுடையதா? அம்மாவுடையதா?"

"ஏன் என்னுடையதாக இருக்கக் கூடாதா அங்கிள்... சாரி, சார்" என்றான்.

விஷ்ணுராம் அவளது தடுமாற்றத்தைப் பார்த்து சிரித்தார்.

"அங்கிள்னே கூப்பிடும்மா. அது கொஞ்சம் நெருக்கத்தைக் காட்டுது" என்றார் கள்ளமில்லாத சிரிப்புடன்.

தன் அம்மாவின் ரத்தம் இவர் உடலிலும் ஓடுகிறது என்ற காரணத்தைத் தாண்டியும் கூட அவரை அவளுக்குப் பிடித்துப் போனது. ஒருவித நம்பகத்தன்மையும், உதவி செய்யும் குணமும் அவரிடமிருந்து பிரிக்க முடியாத கர்ணனின் கவசத்தைப் போல ஒட்டிக் கொண்டிருந்ததைப் போன்ற ஓர் உணர்வு எழுந்தது.

"எனக்கென்னவோ பைலட்கள் சாம்ராஜ்ஜியத்தில் நீ ஒரு சாதனை படைப்பேன்னு தோணுது" என்று அவர் கூறிய போது உற்சாகமூட்டத்தான் அவர் சொல்கிறார் என்றாலும் அதை உண்மையென்றே நினைத்து நம்பிக்கையை வளர்த்துக் கொள்வதில் என்ன தவறு? என்று அவள் மனம் கேட்டது.

"சுவாதி, என்னடா அந்த கர்வக்காரி கேட்ட கேள்வியையே இவனும் கேட்டுப் புண்படுத்தறானேன்னு நினைக்காதே. பைலட் ஆவது காஸ்ட்லியான சமாசாரமாச்சே. அந்தப் பொருளாதார பலம் உனக்கு இருக்குது இல்லையா?" என்று கேட்கவும், "ஏன் அங்கிள் என் முகத்திலேயே ஏதாவது தரித்திரக் களை தென்படுதா என்ன, ஆளாளுக்கு இந்த சந்தேகம் வருதே... சாரி, தப்பா நினைச்சுக்காதீங்க. இந்தப் பயிற்சிக்குத் தேவையான பணபலம் எனக்கு இருக்கு" என்று பதிலளித்தாள்.

விஷ்ணுராம் எதையோ யோசிப்பது தெரிந்தது. பிறகு "எனக்கு ஒரு உள்ளுணர்வு தோணுதும்மா. அது உண்மையாகும் பட்சத்தில், அதற்கு நீ இப்போதே தயாராக வேண்டும். அதற்காக சில காரியங்களைச் செய்ய வேண்டும்" என்று அவர் விவரித்துக் கொண்டே போக, சுவாதியின் பிரமிப்பு எல்லை கடந்தது. மறுக்கும் விதமாக அவள் எதையோ சொல்லத் தொடங்க, "நான் உன் நலம் விரும்பின்னு நினைத்தால் நான் சொல்வதைக் கேள்" என்றார்.

அடுத்த சில நாட்களுக்கு அவர் கூறிய சிலவற்றையெல்லாம் செயல்படுத்தினாள் சுவாதி. அதேசமயம் 'இதையெல்லாம் நாம் ஏன் செய்கிறோம்?' என்ற உறுத்தலும் அவளுக்கு அவ்வப்போது தோன்றாமல் இல்லை.

இப்போது மோட்டார் பைக்கை ஏனி

## அந்தக் கடிதம்!

**ஔரங்கசீப்பின் மகன் ஒருவன் தந்தையிடம் கோபித்துக்கொண்டு எதிரிகள் பக்கத்தில் சேர்ந்து மொகலாய சாம்ராஜ்யத்திற்கு விரோதமாய் அவர்களுக்கு உதவி செய்து வந்தான். அவன் இராணுவ ரகசியங்களை எதிரிகளுக்கு எடுத்துரைத்து விட்டால் என்ன செய்வது என்று அஞ்சிய ஔரங்கசீப் தன் மகனுக்கு ஒரு கடிதம் எழுதினார்.**

**'மகனே! அவசரப்பட்டு வந்து விடாதே... எதிரிகளுடன் மிகவும் அன்னியோன்யமாகப் பழகி அவர்களுடைய இராணுவ ரகசியங்கள் அத்தனையும் அறிந்துகொண்டு வந்து சேர்!'**

**கடிதம் எழுதி அதை எதிரிகளின் கையில் சிக்குமாறும் செய்துவிட்டார். பிறகு அவர் மகனுக்கு நேர்ந்த கதி பற்றிச் சொல்ல வேண்டியதில்லை.**

**– 'அறிஞர்கள் வாழ்விலே' என்ற நூலிலிருந்து மலர் சூர்யா**

தாகவே ஓட்ட முடிந்தது. பிரசாத்தைப் பின் புறம் உட்கார வைத்துக் கொண்டு கூட ஒரு ரவுண்டு வந்தான். நடுவே சாலையில் எதிர்பாராமல் ஒரு நாய் குறுக்கே போனபோது சடன்-ப்ரேக் போட நேர்ந்தது. அப்போது பிரசாத்தின் உடல் அவள்மீது லேசாகக் கூட மோதவில்லை என்பதை உணர்ந்தபோது ஒரு புன்னகை பிறந்தது.

" உங்கம்மா நாலைஞ்சு நாளிலே திரும்பி வந்துடுவான்னு நீ காத்துக்கிட்டிருந்த சமயம் அது சுவாதி. அப்போதுதான் அவங்க கோமளா ஆன்ட்டிக்கு ஒரு லெட்டர் போட்டிருந்தாங்க. ஏதோ ஆர்வத்திலே அந்த போஸ்ட் கார்டைப் படிச்சுட்டேன். அதிலே அவங்க விசாகப்பட்டினத்திலேயிருந்து வேறு சில இடங்களுக்குப் போயிட்டுப் பிறகுதான் சென்னை வரப்போவதாக எழுதியிருந்தாங்க. இதைப் படிச்சா நீ மனசு வாடிடுவியேன்னு தான் அந்தக் கடிதத்தைக் கிழிச்சுப் போட்டேன். சாரி."

இப்போதைய சூழலில் அது பெரிய குற்றமாகத் தெரியவில்லை.

சில நாட்களிலேயே பிரசாத்தின் அக்கா ஜானகி வயலின் வாசித்த ஒரு கச்சேரிக்கு செல்ல நேர்ந்தது.

பாடகி லிங்காஷ்டகத்தை இசையோடு பாடிக்கொண்டிருந்தாள். சுவாதிக்கு அப்பா வின் ஞாபகம் வந்தது.

*"தேவ முனி ப்ரவரார்ச்சித லிங்கம்"*

*"காம தகன கருணாகர லிங்கம்"*

அப்பா இன்னமும் காற்றில் கலந்திருப்பாரா? தான் விமான ஓட்டியாகி ஆகாயத்தில் பறக்கும்போது "அட, எனக்கு இவ்வளவு கிட்டே வந்துட்டியே?" என்று மகிழ்வாரா? அல்லது 'உனக்கு இவ்வளவு துணிச்சலா?' என்று விமானத்தையே கீழே தள்ளிவிடுவாரா?

இசை நிகழ்ச்சி கிட்டத்தட்ட முடிவுக்கு வந்துவிட்டிருந்தது. விமர்சனம் எழுத வந்திருந்த பிரபல பெண் பத்திரிகையாளரை அழைத்துப் பாடகிக்கு மாலை அணிவிக்க வைத்தார்கள் நிர்வாகிகள். ம்ருதங்க வித்வானுக்கு யாரோ ஒருவர் மாலை சூட்டினார். மாலை அணிவித்த ஒவ்வொருவரும் மாலையிடப்பட்டவர் குறித்து சில பாராட்டு வார்த்தைகள் பேசினார்கள்.

முன்வரிசையில் உட்கார்ந்திருந்ததாலோ என்னவோ, நிர்வாகி சுவாதியைக் கையசைத்து அழைத்தார் "குழந்தே, இந்த மாலையை வயலின் வித்வானுக்குப் போட்டுடு" என்றார்

தன் அம்மாவின் வழிகாட்டுதலால் புதுவாழ்வு கண்ட ஜானகி பிரேம்நாத்துக்கு மாலை அணிவிப்பதில் சுவாதிக்கு தயக்கம் எழவில்லை. ஆனால் அதைத் தொடர்ந்து அவள் சில வார்த்தைகளாவது பேசச் சொல்லி மேடையில் இருந்தவர்கள் வற்புறுத்திய போதுதான் சுவாதி பொறியில் மாட்டிக் கொண்ட எலியாய்த் தவித்தாள்.

சுவாதிக்கு வியர்த்தது. "ப்ளீஸ் என்னை விட்டுடுங்க" என்று ஜானகியிடமும், சபா நிர்வாகியிடமும் கூறிவிடலாம் என்று கூடத் தோன்றியது. பேசாமலேயே சென்றுவிட்டால் அத்தனை பேருக்கும் நடுவில் அவள் அதை அவமானமாக உணர்வாளோ என்ற எண்ணம் வேறு கஷ்டப்படுத்தியது.

இதையெல்லாம் மீறி அவள் மனத்தில் இன்னொரு எண்ணம். 'பிரபல பத்திரிகை யாளர் சந்யாவின் மகள் நாலு பேர் நடுவே பேசத் தெரியாமல் தவித்தாள்' என்றால் அவமானம் அவள் அம்மாவுக்கும்தானே?'

அடுத்தநொடியே அவள் பேசத் தொடங்கி விட்டாள். "ராமனின் வில் திறமையைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறோம். இங்கே ஜானகியின் வில் திறமையைக் கண்டும் கேட்டும் ரசித்தவர்களுக்கு, அதற்கு இது குறைந்ததல்ல என்பது புரியும்." அநியாய மற்றும் சற்றே ஸ்ருதி விலகிய ஒப்பீடு எனினும் 'வில்' என்ற சொல்லைக் கொண்டு பின்னப்பட்ட சிலேடை, ஆண் பெண் சமத்துவம் இப்படி சில நகாசு வேலைகள் அந்தப் பேச்சில் இடம் பெற்றுவிட, "அட பரவாயில்லையே இந்தப் பெண்" என்று சபையினர் கைதட்ட, அந்தக் கரவொலி சுவாதிக்கு யானை பலம் தந்தது. தொடர்ந்து சில வாக்கியங்களைப் பேசிவிட்டு அவள் இறங்கியபோது மீண்டும் கைதட்டல்.

சுவாதியின் மனத்தில் தோன்றியிருந்த தன்னம்பிக்கைச் செடி வேகமாக வளர்ந்தது.

அந்த உற்சாகத்தோடு வீடு வந்தபோது வாசலிலேயே கோமளா காத்திருந்தாள். கையில் கடிதம். முகத்தில் பரபரப்பு.

(தொடர்ந்து பறக்கும்)

**"ஊரிலிருந்து எங்கம்மா கொண்டு வந்த அல்வாவை ஏன் தின்ன மறுத்துட்டே?"**

**"மருமகளுக்கே அல்வா கொடுத்துட்டேன்னு நாளைக்கு உங்கம்மா யாரிடமும் தம் பட்டமடிச்சுக்கக்கூடாதேனுதான்!"**

**— உ. ராஜாஜி**



''இனிமே பீச்லே சந்திக்க வேணாம்... வேறே இடம் பார்ப்போம் டார்லிங்...''

''வரிசையா எல்லா சுண்டல் காரன்கிட்டேயும் கடன் சொல்லிக்கிட்டு வந்தப்பவே நினைச்சேன்!''

— தஞ்சை தாமு



''ஆறிலும் சாவு நூறிலும் சாவுங்கிற பழமொழி ரொம்பத் தப்பான பழமொழிங்க.''

''என்ன தப்பு?''

''அதெப்படி ஒருத்தர் ரெண்டு தடவை சாக முடியும்?''

— பர்வதவர்த்தினி

''கொட்டாவி வந்தா உம் புருஷன் வெளியே ஓடுறாரே...ஏன்?''

''என் முன்னாலே வாயைத் திறக்க மாட்டாரு!''

— தஞ்சை தாமு



# தொப்பியும் தொந்தியும்!

''என் நாடகத்துக்கு ஏன் ஸார் அனுமதி தர மறுக்கறீங்க?''

''போய்யா வெளியே! 'தொப்பியும் தொந்தியும்'னு நாடகத்துக்குப் பேர் வைச்சிட்டு அனுமதி வேற கேக்கறியே!

— உ. ராஜாஜி





''மாமியார் மேல அவ்வளவு பிரியமா... ரெண்டு மணி நேரமா அவங்களுக்குப் புடவை செலக்ட் பண்ற?''

''ஹூம்! நானும் புரட்டிப் பார்க்கிறேன், மனசுக்குப் பிடிக்காத மாதிரி ஒரு புடவை அமையலியே?''

— அம்பை தேவா

**குஷி திரைப்படம் பற்றிய கருத்துக் கோவை அல்ல... நிஜமாகவே குஷி வரும்போது என்ன செய்வார்களாம்? ரொம்ப குஷி ஏற்படுத்திய நிகழ்ச்சி எது...? –சொல்கிறார்கள் சில பிரபலங்கள்.**

**விஜய் சிவா:**

என் சம்பந்தப்பட்ட நிகழ்ச்சிகளில் உணர்வுகளை நான் பெரிதாக வெளிக்காண்பிக்க மாட்டேன். ஆனால் என் குடும்பத்தினர் மற்றும் க்ளோஸ் நண்பர்கள் தொடர்பான சந்தோஷ சமாசாரம்னா – முதல்லே 'ஓ'ன்னு ஒரு கத்தல். தரை அதிரும்படி நாலு குதி. எங்க தெரு நாய்கள் சிலது எனக்கு ரொம்ப தோஸ்த். அதுங்களுக்குப் புரை பிஸ்கெட் வாங்கிப் போட்டுடுவேன். ரயில் கட்டணங்களில் இசைக் கலைஞர்களுக்குச் சலுகை தருவதாக ரயில்வே அமைச்சகம் அறிவித்தபோது ரொம்ப மகிழ்ச்சியாய் இருந்தது.

**ஜெயராஜ்:**

நெருங்கிய நண்பர்கள் மற்றும் குடும்பத்தினரோடு பிக்னிக் போவது குஷியான விஷயம். இயற்கையெழில் கொஞ்சும் கொடைக்கானலுக்கு அப்படிப் போனபோது ரொம்பவும் சந்தோஷப்பட்டு மௌத்ஆர்கனில் பழைய இந்தி டியூன்களாக வாசித்துத் தள்ளினேன். வீட்டிலிருக்கும்போது ஜாலியான மூடு வந்தால் என் மகன் வயிற்றுப் பேரன் பேத்தியை முதுகில் சுமந்து கொண்டு யானை அம்பாரி ஊர்வலம் போவேன்.

**டாக்டர் ஜெ. விஸ்வநாத்:**

பொதுவாகவே டிசம்பரில் பிறந்தவர்கள் ஹைப்பர்மேனியாக்குகள் என்பார்கள். நானும் அல்ப சந்தோஷிதான். தன் குழந்தை இரண்டு வாரமாகவே சரியாக மூச்சு விடவில்லை என்றார் ஒரு தாய். அந்த ஒன்றரை வயதுக் குழந்தைக்கு எந்தவித 'வீஸிங்' அறிகுறியும் இல்லை. அவர்களது குடும்பதில் ஆஸ்துமாவும் யாருக்கும் இல்லை. காஞ்சிபுரத்திலிருந்து பேருந்தில் பயணமாகிக் கொண்டிருந்தபோது குழந்தை அதிகமாய் இருமியதென்றும், அதற்குப் பிறகே மூச்சு விடுதலில் இந்த அவஸ்தை என்றும் கூறினார். வழியில் என்ன சாப்பிட்டீர்கள் என்று கேட்டேன். 'வேர்க்கடலை' என்று பதில் வந்தது. எக்ஸ்-ரே மற்றும் ப்ராங்கோஸ் கோபி


• ஜெயராஜ்


• விஜய் சிவா


• ஜெ. விஸ்வநாத்

# குஷி!



• வரதராஜன்

செய்து பார்த்ததில் குழந்தையின் நுரையீரலில் ஒரு வேர்க்கடலை சிக்கியிருந்தது தெரியவந்தது! அதை வெளியேற்றினோம். அப்போது அந்தத் தாயின் முகத்தில் தெரிந்த நிம்மதி எனக்கு எக்கச்சக்க மகிழ்ச்சியைத் தந்தது. இதுபோன்ற மருத்துவ வெற்றிகள் என்னை உற்சாகப்படுத்தினாலும் இதைப் பார்த்து சந்தோஷப்பட முடியாமல் இளவயதிலேயே என் பெற்றோர் இறந்து விட்டார்களே என்ற ஏக்கம் வந்து அந்த உற்சாகத்தை முழுவதுமாக அனுபவிக்க முடியாமல் செய்து விடும்.

**வரதராஜன்:**

உலகக் கோப்பையை இலங்கை அணி வென்றது. இரவு பத்து மணி செய்தியைப் படித்தேன். கிரோபதேசப் பாணியில் "அர்ஜுன (ரணதுங்கா) உன் முழு கவனமும் லாகூரில் ஜொலித்துக் கொண்டிருக்கும் உலகக் கோப்பையின் மீதே இருந்தது. இதனால் நீ வென்று விட்டாய்" என்பது போன்ற சில வரிகளை உணர்ச்சி பூர்வமாக வாசித்தேன். வீட்டுக்குப் போனவுடன் செய்தி ஆசிரியரிடமிருந்து தொலை பேசி அழைப்பு. "நீ அந்த வரிகளை வாசித்தபோது உலகக் கோப்பை அதிகம் ஜொலித்ததா இல்லை உன் முகம் அதிகம் ஜொலித்ததா என்று தெரியவில்லை" என்று பாராட்டினார். குஷியில் ரிசீவரைப் படாரென்று சத்தத்தோடு வைத்துவிட்டு மேஜையைக் 'கும்'மென்று குத்துவிட்டேன். பொதுவாகவே ஜாலியான மூடில் சுத்துவதும், சின்னத் திரையில் ஒளிபரப்பப்படும் பாடலுக்கு மகனோடு சேர்ந்து ஆடுவதும் உண்டு.

— ஜி

## தென்னாப்பிரிக்கா ஆல் அவுட்; நோ லாஸ்

**ம**ன்னன் எவ்வழி தளபதியும் அவ்வழி. கேப்டன் ஷான் பொலக்கின் திருமணத்தைத் தொடர்ந்து லான்ஸ் க்ளூஸ்னரும் கல்யாண பந்தத்தில் சிக்கிக் கொண்டார். தமது நெடுநாள் தோழியான இஸபெலாவை கத்தோலிக்க சர்ச் ஒன்றில் எளிமையான முறையில் திருமணம் செய்து கொண்டார். ரிசப்ஷன் டர்பன் நகரிலுள்ள கிரிக்கெட் க்ளப் ஒன்றில் கோலாகலமாக நடந்தது. தேனிலவு எங்கே என்ற கேள்விக்கு "வெகு தூரத்தில் உள்ள ஒரு இடத்தில்" என்று மட்டும் கூறுகிறார். சந்திரனிலோ?



• க்ளூஸ்னர் மனைவியுடன்

இதே தென்னாப்பிரிக்க அணியின் துவக்க பேட்ஸ்மேன் கிப்ஸ் வேறுவிதத்தில் செய்திகளில் அடிபட்டுக் கொண்டிருக்கிறார். (ஏற்கனவே ஹான்ஸி க்ரோனியேவோடு சேர்ந்து கிரிக்கெட் சூதாட்டத்தில் இவரது பெயரும் அடிபட்டது நினைவிருக்கலாம்). கேப் டவுனிலுள்ள ஊரடங்கு சட்டத்தை மீறி, ஆஸ்திரேலிய அணியோடு மோதுவதற்கு முன்தினம் பார்ட்டிகளில் கலந்து கொண்டு மதுவில் மிதந்ததற்காக பத்தாயிரம் ராண்டுகள் அபராதம் விதிக்கப்பட்டிருக்கிறார். கூடவே மூன்று மேட்ச்களில் இவர் இடம் பெறமாட்டார் என்றும் அறிவிக்கப்பட்டது. 'ஐயோ மனமிரங்கலாகாதா?' என்று கிப்ஸ் பதற, அந்த தண்டனை ஒத்தி வைக்கப்பட்டிருக்கிறது.

– குல்லூ



# வட்டமேஜை

✉ குவியும் அகதிகள்! குமுறும் கடற்படை! அட்டைப்படக் கட்டுரை படித்தேன். இலங்கையில் விடுதலைப் புலிகளுக்கும், ராணுவத்திற்கும் சண்டை நடந்து கொண்டிருக்கும் சமயத்தில் ராமேஸ்வரத்தில் இருக்கும் டென்ஷனான நிலவரத்தை கண்முன் கொண்டு வந்திருந்தது உங்களின் நேரடி ரிப்போர்ட். வெல்டன்.

கு.நா.இராஜேஸ்வரன்,
மொரட்டுப்பாளையம்.

✉ மாதப் பத்திரிகை போல என்று இராம. நாராயணன் டைரக்ட் மற்றும் தயாரிப்புத் திறமையை பாராட்டிய கல்கியின் உவமையை ரசித்தோம், அவரின் உழைப்பைக் கண்டு வியந்தோம்.

எம்.அசோக்ராஜா,
அரவக்குறிச்சிப்பட்டி




✉ தலையங்கம் கண்டேன். 'ராஜீவ்காந்தி செய்த தவறு' என்ற வரி என் மனதைப் பிசைந்தது. கொடுத்த வாக்கைக் காப்பாற்றாத பிரபாகரனையும், விடுதலைப் புலிகளையும் நம்பியது ஒன்றுதான் அவர் செய்த தவறு. மற்றபடி அவர் ஏற்படுத்திய "இந்திய – இலங்கை உடன்பாடு" இலங்கைத் தமிழர்களின் நலனை உத்தேசித்து எடுக்கப்பட்ட இனிய முயற்சி.

தி.சு.பாலசுப்பிரமணியன், நெல்லை

✉ இயல்பாகவே இரக்க உணர்வு மேலோங்கும் ஒரு சிறுவனின் மனநிலையை வெகு அற்புதமாய் விளக்கிய 'மிருகம்' சிறுகதை மனதில் நின்றது!

பாலசுப்ரமணியன், போடிநாயக்கனூர்

✉ கல்வித் திருவிழா நடத்தும் விகம்பூர் கிராமத்தை இந்தியாவின் மாதிரி கிராமமாக அறிவிக்க வேண்டும்.

மு.எஸ்.மு.ராயன், மயிலாடுதுறை

✉ திருச்சியில் 'கந்தா கடம்பா கதிர்வேலா' படத்தைப் பார்த்துவிட்டு வீடு திரும்புகையில்தான் 'கல்கி' வாங்கினேன். படத்தைப் பார்த்து நான் நொந்து – வெந்து யோசித்த விஷயங்கள் அப்படியே 'கல்கி' விமர்சனத்தில் இருந்தது.

ஆர்.பி.ஜெயச்சந்திரன், பூனாம்பாளையம்.

✉ கனவுகள் கருகிப்போகாமலிருப்பதற்கு துவக்கத்திலேயே சரியான வழிகாட்டுதல் இருக்க வேண்டும் என்பதை ஸ்ரீ பி.எச். பாண்டியன் தன் அனுபவத்திலிருந்து கூறியிருப்பது இளைய தலைமுறைகளின் கவனத்துக்குரியது.

கே.வி.ராமன், சென்னை-73

✉ எதிலேயும் பர்ஃபெக்ஷன், கடமையில் காட்டும் தீவிர ஈடுபாடு இவையிரண்டும்தான் ஆர்.எம்.வீரப்பனின் மாபெரும் முன்னேற்றத்தின் மூலகாரணம் என்பதை அறிய முடிகிறது. (என் கோபம் பொல்லாதது) அதையேதான் அவர் மற்றவர்களிடமும் எதிர்பார்க்கிறார்.

## வெல்டன்!

இதில் தவறு ஏதுமில்லை.

இராஜேந்திரன், லால்குடி

✉ **கல்கி 23.4.2000 தேதி இதழில் கபாலீசுவரர் ஆலயத் திருக்குளத்தைப் பற்றி "தருமா, முறையா? தர்மமா" என்ற தலைப்பில் வெளிவந்த கட்டுரை தொடர்பாக: திருக்கோயில் மரபு முறை வழுவாமல் திருக்குளத்தைச் சீர்படுத்தும் நோக்கத்துடன் கொண்டுவரப்பட்ட திட்டம் "லேசர் ஒலி ஒளி காட்சி." குளம் தற்போதுள்ள நிலையிலேயே, கான்கீரிட் எதுவும் போடாமல் - குளத்தை மூடாமல், தற்சமயம் பொதுக் கழிப்பிடமாக ஆக்கப்பட்டதை மாற்றும் பொருட்டு, குளத்தை மேலும் அழகுபடுத்தி, கலை நயத்தை சேர்த்து, மத்திய – மாநில சுற்றுலாத்துறை ஆதரவோடு லேசர் ஒலி, ஒளி காட்சி நடத்தப்படும். அதனால் திருக்குளம் பாதுகாப்பு ஏற்பாடு மேம்படும், ஆணையரின் உத்தரவு கிடைத்ததும் திட்டம் செயல்படும்.**

**சீர்காழி கோ. சிவசிதம்பரம்,**
**அறங்காவலர் குழுத் தலைவர்-**
**கபாலீச்சரம்.**






# ஆங்கிலமே

**எ**ங்க ஆபீஸ்ல சிவராமன்னு ஒருத்தர். அவர் சிரிச்சு நான் இதுவரை பார்த்ததேயில்லீங்க. எப்பப் பார்த்தாலும் மூஞ்சியைக் கடுகடுன்னு வச்சுக்கிட்டு, அது சரியில்ல, இது சரியில்லன்னு முணுமுணுத்துக் கிட்டேயிருப்பார். சரியான சிடு மூஞ்சி.

இதுபோல சிடுமூஞ்சிகளை இங்கிலீஷ்ல 'Grumpy' (க்ரம்பி)ன்னு சொல்றதுண்டு.

"He is grumpy"ன்னா அவர் சரியான சிடுமூஞ்சின்னு அர்த்தம்.

ஆனா எல்லார்கிட்டயும் கலகலப்பாக (நட்புடன்) பழகும் குணம் கொண்டவர்களை 'sociable'னு சொல்லலாம்.

He is very sociable. அவர் எல்லாரிடமும் கலகலப்பாகப் பழகும் குணம் கொண்டவர்.




சின்னச் சின்ன விஷயங்களுக்கெல்லாம் சட்டென்று கோபப்படும் நபர்களுக்கு 'short tempered' (ஷார்ட் டெம்பர்ட்)னு பேரு.

'He is short tempered' அவர் சரியான முன்கோபி.

ஏமாற்றுதல் (மோசம் செய்தல்) சிலருக்குக் கை வந்த கலையாகும்.

இச் செயலை cheat (சீட்) அல்லது deceive (டிசீவ்) என்று சொல்வதுண்டு. அந்த ஆளு சரியான ஏமாற்றுப் பேர்வழி என்பதை இங்கிலிஷ்ல எப்படிச் சொல்வீங்க?

ரொம்ப simple.

"He is a cheat"னு சொல்லலாம். இதையே "He is a deceiver"னும் சொல்லலாம். ஆனா 'cheater'னு சொல்லிடாதீங்க. He is a cheatனுதான் சொல்லணும்.

சின்னச் சின்ன விஷயங்களுக்கு எல்லாம் எளிதில் உணர்ச்சி வசப்படும் நபர்களை 'touch me not' (டச் மீ நாட்) என்று சொல்லலாம். அவள் எளிதில் உணர்ச்சி வசப்படும் குணம் கொண்டவள்.

**தொட்டாற் சுருங்கி!**

தொட்டாற் சுருங்கிச் செடிக்கு 'touch me not plant' என்று பெயர். இதை 'sensitive plant' என்றும் சொல்வதுண்டு.

யார் எதைச் சொன்னாலும், குறை சொன்னாலும் சரி, திட்டினாலும் சரி, அதைப் பொருட்படுத்தாமல் ரொம்ப



# அருகில் வா!

வி. ராஜகோபாலன்

அலட்டிக் கொள்ளாமல் சோப்பு விளம்பரத்தில் வரும் பெண் கூறுவது போல I don't care என்று சிலர் அமைதியாக இருப்பதுண்டு.

ஆனால், யாராவது ஏதாவது குறை கூறிவிட்டால் அப்படியே இடிந்து போய் 'மனசைப் புண்படுத்திட்டாங்களே'னு நெனச்சு எளிதில் உணர்ச்சி வசப்படும் நபர்களின் மனநிலையை வர்ணிக்க "sensitive" என்ற வார்த்தையை 'use' பண்ணலாம்.

"She is very sensitive" என்றால் அவள் எளிதில் உணர்ச்சி வசப்படக்கூடியவள்'னு அர்த்தம். ஒரு சின்னக் குறைபாட்டைக் கூட தாங்கிக் கொள்ள முடியாத 'case'களும் உண்டு. இது போன்ற உணர்ச்சி வசப்படும் தன்மையை 'hyper sensitive' (ஹைபர் சென்சிடிவ்) என்று சொல்வது வழக்கம்.




'தம்மை ஒரு பக்திமான்' என்று எல்லாரும் நினைத்துக் கொள்ள வேண்டும் என்பதற்காக பட்டை பட்டையாய் விபூதியும், வட்டமான குங்குமப் பொட்டும் வைத்துக் கொண்டு நடமாடும் கபட வேடதாரிகளை இங்கிலீஷில் 'hypocrite' (ஹிபக்ரிட்) என்று சொல்வதுண்டு.,

A hypocrite cannot be successful for long. கபட வேடதாரிகளின் வேடம் நீண்ட நாள் நிலைக்காது அல்லவா?

சரி, அவர் ரொம்ப தைரியசாலி, ரொம்ப தைரியமான ஆளு என்றெல்லாம் நாம் சொல்வதுண்டு. 'தைரியமான' என்பதை 'brave, bold, courageous' என்றெல்லாம் சொல்லலாம்.

பயப்படாதே, தைரியமாக இரு என்று கூறி மற்றவர்களுக்குத் தைரியமூட்டும் போது

Don't be afraid
Be bold
Be courageous

என்று சொல்லுங்கள்.

அவர் ரொம்ப தைரியமானவர் என்பதை

He is very brave
He is very bold
He is courageous

என்றெல்லாம் சொல்லலாம்.




பாவம், அவர் கள்ளம் கபடமில்லாத 'குழந்தை' மாதிரி என்று நாம் சிலரை வர்ணிப்பதுண்டு. இது போன்று குழந்தை மனம் கொண்டவர்களை 'child like' என்று சொல்லலாம்.

"He is child like"

அவர் கள்ளம் கபடமில்லாத குழந்தையுள்ளம் கொண்டவர்.

> கள்ளம் கபடம் ஏதுமறியாத நபர்களை "child like" எனலாம். ஆனால் வயசாகியும் சிறுபிள்ளைத்தனமாக நடந்து கொள்ளும் நபர்களை 'childish' என்று சொல்ல வேண்டும்.



இதுவரை மனிதர்களின் குணாதிசயங்களை எப்படி வர்ணிப்பதென்று பார்த்தோம். நம்மிடம் தோன்றும் அன்பு, கோபம், பாசம், கருணை போன்றவற்றை இங்கிலீஷில் எப்படித் தெரிவிப்பதென்பதை அடுத்த வாரம் பார்க்கலாம்.

(தொடரும்)



# முடிவுக்கு வந்த இருநூறு வருட புதிர்!

பிரான்ஸ் நாட்டில் உள்நாட்டுக் கலவரம். பொதுமக்கள் வன்முறை, தீவைப்பு, என எதற்கும் துணிந்து விட்டனர். காரணம், ஊழல், ஒடுக்குமுறை என கவலைப்படாத முடியாட்சியின் விளைவாக நாட்டில் கொடூர பஞ்சம். ஆனால் எதைப் பற்றியும் கவலைப்படாத மன்னன் பதினாறாம் லூயி தனது மனைவி மேரி அன்டாய்னெட், இரு குழந்தைகள் சகிதம் அரண்மனைக்குள் ஒய்வெடுத்துக்கொண்டிருந்தான். கொதிப்படைந்த மக்கள் அரண்மனைக்குள்ளேயே புகுந்தனர். மன்னனையும் அவனது குடும்பத்தையும் முற்றுகையிட்டனர்.

நாட்டின் கடைசி குடிமகனும், இனி விடப்போவதில்லை என்பதை உணர்ந்து கொண்ட மன்னன் தப்பித்து ஓடியபோது, நாட்டு எல்லையைக்கூட தாண்டவிடாதபடி தடுத்து, திரும்பவும் தலைநகருக்கே மக்கள் துரத்தினர். புரட்சி வெடித்தது. பதவியிலிருந்து மன்னன் தூக்கியெறியப்பட்டு பிரான்ஸ் ஒரு குடியரசாக மலர்ந்தது. மன்னன் பதினாறாம் லூயிக்கும், ராணிமேரிக்கும் தேசத் துரோக குற்றத்திற்காக மரண தண்டனை விதிக்கப்பட்டது. மன்னனின் வாரிசுகளான பதினாறு வயது மேரி தெரஸாவும், ஒன்பது வயது லூயி சார்லஸும் சிறையில் அடைக்கப்பட்டனர்.

பதினாறாம் லூயியின் சட்ட பூர்வமான வாரிசு என்றும், அடுத்த மன்னன் என்றும் அறிவிக்கப்பட்ட இளவரசன் லூயி சார்லஸ், ஓராண்டு காலம் ஒரு ஏழைக் குடும்பத்தின் பராமரிப்பால் விடப்பட்டான். பின்னர் 'டெம்பிள்டவர்' என்ற கட்டிடம் ஒன்றில் தனிமைச் சிறை வைக்கப்பட்டான். அதே கட்டிடத்தின் வேறொரு அறையில் இளவரசி. ஆனால் இருவரும் சந்தித்துக் கொள்ள அனுமதி இல்லை. இப்படியொரு நிலையில், இளவரசன் நோய்வாய்ப் பட்டு இறந்து போனதாக அறிவிக்கப்பட்டது. ஆனால் பொதுமக்கள் மத்தியில் வேறொரு வதந்தி பரவியது. ராஜ வம்சத்தின் ஆதரவாளர்கள், இளவரசனை எப்படியோ கடத்திச் சென்று விட்டார்கள். சிறையில் இறந்துபோனது

வேறொரு சிறுவன் என்று நம்பினார்கள்.

இதற்கிடையில் பிரெஞ்சு தேசத்தில் நெப்போலியனுக்குப் பிறகு மீண்டும் முடியாட்சி. அவ்வளவுதான் முப்பதுக்கும் மேற்பட்டவர்கள் தாங்கள்தான் இளவரசன் லூயி சார்லஸ் என்றும், அரசாளும் தகுதி தங்களுக்கே உள்ளதென்றும் உரிமை கொண்டாடினார்கள்!

இதில் ஒருவன் ராஜவம்சத்தைப் பற்றிய நுணுக்கமான விஷயங்களைக் கூறி வியப்பேற்படுத்தினான். அவன் ராஜ உடை அணிந்து வந்தபோது மன்னன் பதினாறாம் லூயி போலவே தோற்றமளித்ததைக் கண்டு பலர் பிரமித்தார்கள். ஆனால் சிறையிலிருந்து அவன் தப்பித்தது பற்றிய 'கதை'யை மக்கள் நம்பத் தயாராகவில்லை.



• பிரெஞ்சு புரட்சி காட்சிகள்

இளவரசி மேரிதெரஸா அவன் தனது தம்பிதானா? இல்லையா! என்று சாட்சி கூற மறுத்து விட்டார். மக்கள் தலையைப் பிய்த்து கொண்டார்கள். பத்திரிகைகளும், எழுத்தாளர்களும், உண்மையான இளவரசன் லூயி சார்லஸ் யார்? என எழுதிக் குவித்தன. சிறையில் இறந்தது இளவரசன் அல்ல என்றே மக்களும் நம்பத் தொடங்கினார்கள்.

**கா**லம் ஓடியது. அறிவியல் வளர்ந்தது. இந்த வரலாற்றுப் புதிருக்கு விடை கண்டு பிடிக்கும் பொறுப்பு பெல்ஜியம் விஞ்ஞானி, ஜீன் ஜேக்வஸ், ஜெர்மன் விஞ்ஞானி பெர்ன் ப்ரிங்க்மேன் ஆகிய இருவரிடமும் ஒப்படைக்கப்பட்டது. சிறையில் இறந்துபோன சிறுவனின் உடலைப் பரிசோதித்த மருத்துவர் அவரது இதயத்தைத் தனது வீட்டிற்கு எடுத்து வந்து பத்திரமாக பாதுகாத்த ரகசியம் விஞ்ஞானிகளுக்குத் தெரியவர, அந்த இதயமே அவர்களின் ஆராய்ச்சிக்குப் பேருதவியாக அமைந்துவிட்டது. அந்த இதயத்தைக் கொண்டே அவன் உடலில் உள்ள பல்வேறு மரபணுக்கள் எப்படி அமைந்திருக்கும் என்பதை தீர்மானித்தனர். இறந்த இளவரசனின் சகோதரி மேரி, அவளது இரு சகோதரிகள் ஆகியோரின் ரோமங்கள், இப்போது வாழ்ந்துவரும், இளவரசனின் தாய்வழி உறவினர்கள், ரொமானிய அரசி ஆன், அவனது சகோதரன் ஆண்ட்ரோ ஆகியோரின் மரபணுக்களையும் பரிசோதித்து இறுதி முடிவுக்கு வந்தனர். "சிறையில் இறந்த சிறுவன் இளவரசன் லூயி சார்லஸ்தான்" என்று திட்டவட்டமாக அறிவித்தனர். ஆனால் பத்திரிகையாளர்கள் குழுவில் இதை விஞ்ஞானிகள் அறிவித்தபோது அவர்கள் ஏற்கவில்லை. இந்த ஆராய்ச்சிக்கான முழுச் செலவையும் ராஜ பரம்பரையினர்தான் ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள். "ஆதலால் அவர்கள் விருப்பத்துக்குத் தகுந்த மாதிரி உங்கள் முடிவுகளை மாற்றிக் கொண்டீர்களா?" என்றும் "சிறையில் இறந்தது மேரியின் (நமக்குத் தெரியாத) வேறொரு மகனாகவும் இருக்கலாமே" என்றும் கேட்டிருக்கிறார்கள். இருந்தாலும் மரபணுத் துறையில் இவ்விரு விஞ்ஞானிகளின் பலமான பின்னணியில் நம்பிக்கைக் கொண்ட பிரெஞ்சு மக்கள் முடிவை பரவலாக ஏற்றுக் கொண்டுள்ளனர். இதன் மூலம் இருநூறு வருடப் புதிர், முடிவுக்கு வந்திருக்கிறது.

இதன் உடனடி விளைவு என்ன தெரியுமா? கவனிப்பாரற்று கிடக்கும் இளவரசன் லூயியின் கல்லறை தோண்டப்பட்டு, அவனது உடல் (எலும்புக் கூடுகள்தான்) தக்க மரியாதையுடன் அவனது பெற்றோர் கல்லறைகளுக்கு நடுவே புதைக்கப்படுமாம்! முடியாட்சியின் மிச்சங்களுக்கு உலக மக்கள் மத்தியில் இன்னும் மரியாதை இருக்கத்தான் செய்கிறது.

— ஜி.எஸ்.எஸ்.




# வருகிறது!

**சென்னையில் வாகனங்களின் எண்ணிக்கை கழுத்தை நெரிக்கிறது. டிராபிக் ஜாம் பிரச்னைக்கு, மினி மேம்பாலங்கள் ஒத்தடம் என்றால், பார்க்கிங் பிரச்னைக்குப் பரிகாரம்...?**

• சேகர்



“நடுத்தர மக்களின் கலர் கனவுகளில் முன்பு டி.வி.யும், குளிர்பதனப் பெட்டியும் முக்கிய மாக இருந்தது. இப்போது பேபிவி கார்! விளைவு இந்தியாவில் உற்பத்தியாகும் இருபத்தேழு சதவிதக் குட்டிக்கார்களை நம்மவர்களே வாங்கி விடுகிறார்கள். மாதத் தவணையில் வீடு தேடி வந்து கார்களை தரும் கார் ஃபைனான்ஸ் கம்பெனிகள் பெருகி விட்டன. இதற்கு காரணம், தாராள மயமும் அதனால் ஏற்பட்டத் தொழில் வளர்ச்சியும் தான்'' என்கிறார் ஒரு நிதி இதழின் ஆசிரியர்.

“தனியார் மற்றும் அரசுத் துறைகளில் வெளிநாட்டு நேரடி முதலீடு அதிகரித்ததால் தான் ஃபோர்டு, மகேந்திரா, ஹூண்டாய், லேன்சர் கார் தொழிற்சாலைகளும் பிளாட் கிளாஸ் தொழிற்சாலை, நைலான் உற்பத்தி, நவீன இறைச்சிப் பதப்படுத்தும் தொழிற் சாலை, ஜெல்லிகேபில் தொழிற்சாலை என்று பெரிய பெரிய தொழிற் கூடங்களும் அவற்றுக்கான உதிரிப்பாகங்கள் தயாரிக்கும் சிறு தொழிற்சாலைகளும் பெருகி விட்டன. மற்றொரு பக்கம் தகவல் தொழில் நுட்பத் துறையை அரசே வளர்த்து வருவதால், கணிப்பொறி பிரிவில் வேலை வாய்ப்புகள் பெருகிவிட்டன. இந்தியாவின் சாஃப்டுவேர் ஏற்றுமதியில் தென்னிந்தியா முதலிடத்தைப் பிடித்துக்கொண்டு விட்டது. இதனால்



# மீட்டர் பார்க்கிங்!

சென்னை போன்ற நகரங்களில் தலா வருமானம் ஆறாயிரம் ரூபாயாக உயர்ந்து விட்டது. இதுதான் வாகனப் பெருக்கத்திற்குக் காரணம்'' என்கிறார் லிமிடெட் நிதி நிறுவனம் ஒன்றின் கம்பெனி செகரட்டரி.

1985ல் பதினாறு லட்சத்து ஒன்பதாயிரம் கிலோ மீட்டராக இருந்த இந்தியச் சாலைகள் 1990-91ல் இருபத்தேழு லட்சமாக விரிந்து விட்டது. 1995-ல் கொண்டு வரப்பட்ட தேசிய நெடுஞ்சாலை சட்டத் திருத்தம், புதிய சாலைகளையும், அடுக்கு மாடி பார்க்கிங் வசதிகளையும் உருவாக்கத் தனியாருக்கு அனுமதி வழங்கிவிட்டது. இதனால் மும்பையில் பல மாடி பார்க்கிங் வசதிகளை உருவாக்கும் முயற்சியில் தனியார் நிறுவனங்கள் ஈடுபட்டுள்ளன. ஆனால் சென்னை போன்று விரிந்து வளரும் நகருக்கு இது போன்ற பார்கிங் வசதிகள் வந்து சேருமா? போக்குவரத்துக் காவல் துறை இணை ஆணையர் சேகரிடம் கேட்டோம்.

"ஒரு காலத்தில் கிண்டியுடன் முடிந்து போன சென்னை இன்று தாம்பரம், மறைமலை நகர் என்று தெற்கேயும், ஸ்ரீபெரும்புதூர், இருங்காட்டுக்கோட்டை என்று மேற்கேயும், மணலி, கும்மிடிபூண்டி என்று வடக்கேயும் வளர்ந்து கொண்டே இருக்கிறது. 1990-ல் நகரில் இருந்த மொத்தக் கார்களின் எண்ணிக்கை ஒரு லட்சத்து பன்னிரண்டாயிரம்தான். ஆனால் இந்தப் பத்து வருடத்தில் இந்தத் தொகை மூன்று மடங்காக அதிகரித்து விட்டது. இதனோடு, பேருந்துகள், ஆட்டோக்கள், லாரிகள், இரண்டு சக்கர வாகனங்கள், சைக்கிள்கள் என்று சென்னையில் உள்ள வாகனங்களின் எண்ணிக்கை இருபது லட்சத்தைத் தாண்டுகிறது. இதனால் மண்டையைப் பிய்த்துக்கொண்டுதான் போக்குவரத்தைப் பராமரிக்க வேண்டி இருக்கிறது. பார்க்கிங் வசதி குறையக் குறைய வர்த்தகம் பெரிதும் பாதிக்கப்படும் என்பது உண்மை. அதனால்தான் தி.நகர், மயிலை, பாரிமுனை, புரசைவாக்கம், நுங்கம்பாக்கம் போன்ற பகுதிகளில் உள்ள பல சாலைகளை ஒரு வழிப் பாதையாக மாற்றி பேரலல் பார்க்கிங் வசதிக்கு ஏற்பாடு செய்திருக்கிறோம்... பார்க்கிங் வசதி இல்லாத பகுதி என்று சென்னையில் ஏதுவும் இல்லை. ஆனால் கார்களின் எண்ணிக்கையோடு பார்க்கிங் ஏரியாவை ஒப்பிட்டால் மிகமிகக் குறைவுதான்... பார்க்கிங் வசதி அதிகரிக்கப்பட வேண்டுமானால், நெருக்கமான பகுதிகளில் உள்ள இட உரிமையாளர்கள் முன் வந்தால், வர்த்தக ரீதியாக பார்க்கிங் வசதி ஏற்படுத்திட, அரசு தரப்பில் தேவைப்படும்



• யாகூப்கான்

அத்தனை உதவிகளையும் போக்குவரத்துக் காவல்துறை செய்து தரத் தயாராக இருக்கிறது." என்றார் சேகர்.

"இப்போது இருக்கும் பார்க்கிங் இடங்களில் மணிக்கணக்கில் காரை விட்டு விட்டுப் போய் விடுபவர்கள் அதிகமாக இருக்கிறார்கள். இதைத் தடுக்க விரைவில் மீட்டர் பார்க்கிங் என்ற முறையை அறிமுகப்படுத்த ஆலோசித்து வருகிறோம். இதன்படி, அதிக பட்சமாக ஒரு மணி நேரம் பார்க்கிங் செய்யலாம். அதிக நேரம் பார்க்கிங் செய்பவர்களிடம் மீட்டர் அடிப்படையில் கட்டணம் வசூலிக்கப்படலாம். சென்னையைப் பொருத்தவரை பலமாடி பார்க்கிங் வசதிகள், ஒரு கனவு தான். காரணம் இது போன்ற பார்க்கிங்குகளில் ஒரு மணி நேரத்திற்கு இருபது ரூபாய் கட்டணம் கொடுக்கும் மனோபாவம் வேண்டும். அது வளர இங்கு நீண்ட நாள் ஆகும்" என்கிறார் சேகர்.

**செ**ன்னை மாநகராட்சி எல்லைக்கு உட்பட்ட பார்க்கிங் பகுதிகளில் கட்டணம் வசூலிக்கும் உரிமையை ஒப்பந்த அடிப்படையில் முன்னாள் ராணுவத்தினர் நலச் சங்கத்திற்கு விட்டிருக்கிறது மாநகராட்சி. ராணுவத்திலிருந்து ஓய்வு பெற்றவர்களும், பணிக்காலம் முடிந்தவர்களும், பார்க்கிங் கட்டணம் வசூலிக்கும் வேலைகளில் மாதச் சம்பளத்திற்கு அமர்த்தப்பட்டிருக்கிறார்கள்.

"ஒரு மணி நேரத்திற்கு இரண்டு ரூபாய் வசூலிக்கிறோம். காலை பத்து மணியிலிருந்து வாகனங்கள் குவிய ஆரம்பித்து விடும். பார்க்கிங் செய்ய முடியாத பட்சத்தில் வாடிக்கையாளர்கள் வேறு ஷாப்பிங் ஏரியாவிற்குப்போய் விடுவார்கள். ஒவ்வொரு கடை உரிமையாளரும் தங்களது வாகனங்களை வேறு கடைக்கு முன்பாக பார்க் செய்து விடுவது பெரிய தலைவலி" என்கிறார் ஈவினிங் பஜார் பார்க்கிங் பகுதியில் கட்டணம் வசூலிக்கும் முன்னாள் ராணுவ வீரர் யாகூப் கான்.

**வா**கனப் பெருக்கத்தால் ஏற்கெனவே புகையும், இரைச்சலும் சென்னையை மாசுபடுத்திக் கொண்டிருக்க, பார்க்கிங் வசதியும் இல்லாது போனால் கார்களை வெறும் காட்சிப் பொருளாக வீட்டிலேயே விட்டுவிட்டு மாநகரப் பேருந்துகளில் போய் வர வேண்டியதுதான்!

- **ஜெயன்**

படங்கள்: **வெங்கடேஷ்**

# வேர்க்குரு என்பது வெறும் அரிப்பல்ல.
# அது ஒரு சருமக்கோளாறு.



## விரைவில் நிவாரணம் பெற நைஸில்.

வெயில் காலத்தில் வியர்த்துக்கொட்டி, பிசுபிசுவென்று உடல் இருக்கையில் உங்கள் சருமத்தின் வியர்வை சுரப்பிகள் அடைத்துக்கொள்ளும். அதனால் அரிப்பு ஏற்படும், கடுமையாக சொரியத் தூண்டும்.

அப்போது சருமத்தில் தொற்று ஏற்பட வாய்ப்புண்டு.

நைஸிலில் மட்டுமே உள்ளது கிருமிகளைக் கொல்லும் க்ளோர்ஃபெனஸின். இந்த முக்கிய உட்பொருள் வேர்க்குருவுக்கு எதிராக கடுமையான செயல்புரியும். அதனால் வேர்க்குருவிலிருந்து விரைவான நிவாரணம் தருவது மட்டுமல்லாது, அதைச்செய்கையில் இதமும், சுகமும் கூடுதலாய் தரும்.




**நைஸில்**

வேர்க்குரு பவுடர்

கிருமிகளைக் கொல்லும் க்ளோர்ஃபெனஸின் அடங்கியது.

# குறையொன்று 71

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சாரியார்

பாகவதோத்தமர்களிடம் ஏன் பக்தி வேண்டும் என்று கேட்டால், இதிஹாஸ சமுச்சயம் என்கிற கிரந்தத்திலே அழகாகச் சொல்லியிருக்கிறது : ஒரு கிருஹத்திலே ஒருத்தரின் உதவியை நாடி உள்ளே போகிறார் இன்னொருத்தர். அங்கே குழந்தைகளெல்லாம் விளையாடிக் கொண்டிருக்கின்றன. போனவர் ஒரு குழந்தையைப் 'பளார்' என்று ஒரு அறை வைக்கிறார்! இன்னொரு குழந்தையைப் பிடித்துத் தள்ளினார். இது மொத்தத்தையும் உள்ளே எஜமானர் உட்கார்ந்து பார்த்துக் கொண்டிருக்கிறார். அவரிடம் காரியார்த்தியாகப் போகிறார் இவர். ஏதோ கேட்டுப் பெறுவதற்காகப் போகிறார். அவர் குழந்தையையே அடித்து விட்டுப் போய்க் கொண்டிருக்கிறார்!

உள்ளே உட்கார்ந்திருப்பவர் இவர் கேட்க வந்ததைக் கொடுப்பாரா? இவரோடு பேசுவாரா? உள்ளே போகிறபோதே அந்தக் குழந்தைகளைக் கொஞ்சிக் கொண்டு போக வேண்டாமோ? விசாரித்து விட்டுப் போக வேண்டாமோ? அப்படிப் பண்ணினால் அல்லவா உள்ளே இருக்கிறவர்களுக்குத் திருப்தி!

அவர் குழந்தையை வெறுக்கிறார். ஆனால் அவரிடம் போய் யாசிக்கிறார்!

அந்த மாதிரி, பகவத் பக்தர்களான பகவானுடைய குழந்தைகளை ஒருத்தர் வெறுத்து, பகவானை மாத்திரம் சேவிக்கிறார்கள் என்று வைத்துக் கொள்ளுங்கள். பகவான் திரும்பிப் பார்க்க மாட்டான். பகவானுடைய குழந்தைகளிடத்திலே பற்று இருந்தால்தான், பாகவத ப்ரீதி இருந்தால்தான், பகவான் அனுக்கிரஹிப்பான் என்கிற விஷயத்தையும் இந்த இடத்திலே எடுத்துச் சொல்வதனாலே பகவத் பக்தி மாத்திரம் நமக்கு ஏற்பட்டால் பிரயோஜனமில்லை. பாகவத பக்தி அளவும் அது போய் நிற்க வேண்டும். அதுதான் விசேஷம்.

இன்னுமொரு ரொம்ப அழகான விஷயம்; இதையும் ஆசார்யர்கள்தான் எடுத்துக் காட்டுகிறார்கள்.

அயோத்யா காண்டம் ஆரம்பத்தில் முதல் சுலோகம்.

பரதன் கிளம்பிப் போனான் கேகய நாட்டுக்கு... அவன் மாமா - யுதாசித் என்று அவருக்குப் பெயர். அவர் வந்து பரதனை அழைத்துக் கொண்டு போவதற்காக வருகிறார்; அழைத்துப் போய் விடுகிறார். இந்த இடத்திலே சத்ருக்னனுக்கு அனேக விசேஷணங்கள் - அடைமொழிகள் போட்டு வர்ணிக்கப்படுகிறது. அதிலே 'அகை:' - குற்றமற்றவன் - என்பது ஒன்று.

அகம் என்றால் குற்றம். குற்றமற்றவன் என்று சத்ருக்னனைச் சொல்கிறாரே! என்ன குற்றம் என்றால் ராம பக்தி என்கிற குற்றம்.

இதற்கு வியாக்யானம் பண்ணுகிறபோது 'ராம பக்தி குற்றமா?' என்று எல்லோருக்கும் சந்தேகம் வருகிறது. ராம பக்தியோடு நின்றால் அது குற்றம். ராமனுடைய சரணாரவிந்தத்தை ஆச்ரயித்த பாகவதர்களிடத்தில் பக்தியோடு இருந்தால்தான் குற்றமற்ற நிலை.

சத்ருக்னன் இருக்கிறானே, அவன் ராமனுடைய திருவடியை ஆச்ரயிக்கும்படியான பரதனுடைய திருவடியிலே அசஞ்சல பக்தி உடையவன். தனக்கென்று எதையுமே அவன் விரும்பாதவன். ராமாயணத்திலே பாருங்கள். பரதனுக்கு அனேக சுலோகங்கள். ராமனுக்கு அனேக சுலோகங்கள். லக்ஷ்மணனுக்கு அனேக சுலோகங்கள்! சத்ருக்னனுக்கு அந்த மாதிரி சுலோகங்கள் உண்டா...? ஒரு அரை சுலோகத்திலே வருவான் அல்லது கால் சுலோகத்திலே வருவான். அவனுக்கென்று ஒரு பிரதிஷ்டை இல்லாமல் இருந்தான். தனக்கென்று எதையுமே அவன் கொள்ளவில்லை. பாகவத பிரதிபக்தியோடு இருந்தான். ராமனிடத்திலே அசஞ்சல பக்தி அவனுக்கு. பரதனிடத்தி

லேயோ சொல்ல முடியாத பாகவத பிரதி பக்தி - மிக உயர்ந்த நிலையில் அவனிடத்திலே இருந்தது அதனால் தான் சத்ருக்னன் என்றே அவனைக் கொண்டாடியிருக்கிறது.

நமக்குச் சத்ரு இந்த்ரியங்கள். இந்த்ரியங்களை ஜெயித்தவன் அவன்.

அதனால்தான், பாதனுக்கு

# லங்ளை



மட்டும் தாராபலன், வார சூலை இதெல்லாம் இல்லாமலிருக்கிறதா என்று நாள் பார்த்து அனுப்பினார் வசிஷ்டர். சத்ருக்னன் கூடத்தான் போனான். அவனும் சக்ரவர்த்தித் திருமகன் தானே? அவனுக்கு யாராவது நாள் பார்த்தவர்கள் உண்டா? 'நீ போகப் போகிறாயா? இருக்கப் போகிறாயா?' என்று கேட்டவர்கள் உண்டா? கூடவே சத்ருக்னனும் புறப்பட்டுப் போகிறான். - சக்ரவர்த்தி வந்தால்

கூடவே உடைவாள் வருகிற மாதிரி! பரதன் பின்னால் போவதையே பேறாகக் கொண்டவன் அவன்.

ஆகையினாலே சத்ருக்னனுடைய நிலை இருக்கிறதே.... அது எவ்வளவு உயர்ந்த நிலை!

மதுரகவியாழ்வார் காட்டிய வழி மிக உயர்ந்த வழி. அது அவர் வழியே அல்ல; தொல்வழி; பழமையான வழி. அவருக்கும் மூலம் உண்டு என்கிறார் சுவாமி தேசிகன்.

பாகவதோத்தமர்களிடத்திலே அடி பணிந்து நிற்றல் என்பதை மதுரகவி ஆழ்வார் எவ்வாறு காட்டினார்?

அவர் அயோத்தி அருகே சஞ்சாரம் பண்ணிக் கொண்டிருக்கிறார். அப்போது, திடீரென்று தெற்கு திக்கில் ஒரு ஜோதி தென்பட்டது. பிரகாசம், ஒளி! அதைப் பார்த்தவுடனே, அயோத்திக்குப் போக வேண்டும் என்று நினைத்தவர், அப்படியே தெற்கு திக்காக வந்தார்.

அப்படியே வந்தால், அது தாமிரபரணி தீரத்திலே திருக்குருகூர் – ஆழ்வார்திருநகரி என்று சொல்லக்கூடிய திவ்ய தேசத்தில் ஒரு பெரிய புளியமரம். அந்தப் புளிய மரப் பொந்தில் ஒருத்தர் உட்கார்ந்திருக்கிறார். அவர் திருமேனியிலிருந்து எழக்கூடிய காந்தி தான் வடதேசம் வரைக்கும் அடிக்கிறது! அதைப் பார்த்துக் கொண்டே வந்து விட்டார்!



''நாளுக்கு நாள் டீ.வி. நிகழ்ச்சி தயாரிப்பாளர்கள் ரொம்ப மோசமாயிட்டாங்க.''

''ஏன்? என்னாச்சு?''

''நான் எழுதி அனுப்பின 'துணுக்கை' கதைன்னு நினைச்சுட்டு மெகா தொடர் பண்ணிட்டாங்க.''

— பொள்ளாச்சி கே. சித்ரா

## அருள்வாக்கு

**இன்றைக்கும் உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு நடக்கும் வேத பாடசாலைகள் மூடிப் போகாதபடியும், இவற்றில் மேலும் வித்யார்த்திகள் சேருமாறும் பண்ண வேண்டும். வித்யார்த்திகளுக்கும் அத்யக்ஷகர் (வாத்தியார்)களுக்கும் கணிசமான திரவிய சகாயம் பண்ணினால்தான் இந்தக் காரியம் நடக்கும்.**

**பிராம்மணனுக்கு ரொம்பவும் ஜாஸ்தியாக லௌகிக சௌகரியங்களையும், தன வஸ்தியையும் தரக்கூடாதுதான் என்றாலும், நல்ல ஸம்பாத்தியம் தரக்கூடிய பல தொழில்கள் அவர்களை வசீகரிக்கிற தற்காலத்தில், சிலராவது இப்படிப்**

வந்து பார்த்தால் இவர் கண்ணை மூடிக் கொண்டு உட்கார்ந்திருக்கிறார். கண்ணைத் திறப்பாரா என்று பார்ப்பதற்காக ஒரு கல்லை எடுத்து அவருக்கெதிரிலே போட்டார் மதுரகவி ஆழ்வார்.

'டொக்'கென்று கல் கீழே விழுந்தவுடனே அந்த ஓசை கேட்டு கண்ணைத் திறந்து பார்த்தார் அந்த ஞானி.

'ஓஹோ! இவருக்கு ஞானம் இருக்கிறது. இவரிடம் ஒரு கேள்வி கேட்போம்' என்று முடிவு செய்து கேட்டார் :

''செத்ததின் வயிற்றில் சிறியது பிறந்தால்
எத்தைத் தின்று எங்கே கிடக்கும்?'

என்று ஒரு கேள்வியைக் கேட்டு வைத்தார்.

''அத்தை தின்று அங்கே கிடக்கும்'' என்றார் உள்ளே இருந்தவர்!

இப்படிச் சொன்னவுடனே அவரையே ஆசார்யராக வரித்து அவரிடத்திலே விசேஷமாகப் பற்று கொண்டு நின்றார்!

எப்பேர்ப்பட்ட உயர்ந்தவர் மதுரகவி ஆழ்வார்! அவரே, இவரைத் தவிர வேறு ஆசார்யர் இல்லை. வேறு மார்க்கம் அறியேன்' என்று அங்கேயே தங்கி விட்டார். இது மதுரகவியாழ்வார் காட்டிய உயர்ந்த தான வழி.

மதுரகவியாழ்வார் துவாபர யுகத்திலேயே. தோன்றினார். கலியுகம் பிறந்த பிற்பாடு தோன்றியவர் நம்மாழ்வார்.

மதுரகவியாழ்வார் துவாபரயுகத்தில் இருந்தபோது பூலோகத்திலே வாசுதேவன் கிருஷ்ணன் துவாரகையில் இருந்தான். ஒரு

பூரணமாக வேதத்தைக் கற்றுக் கொண்டு பிற்பாடு சொல்லிக் கொடுப்பது என்ற பிராம்மண ஸ்வதர்மத்தையே செய்ய வேண்டுமானால், அப்படிப்பட்டவர்கள் "இல்லை" என்று அழாத அளவுக்கு அவர்களுக்கு, வஸதி பண்ணித் தரத்தான் வேண்டும். ஆதியில் இல்லாத அநேக புதுப்புது சௌகரியங்களும், சுக சாதனங்களும் வந்துவிட்ட இந்த நாளில், சிலரை மட்டும் பரம வைராகிகளாக இருந்து கொண்டு ஸ்வதர்மத்தைப் பண்ணுங்கள் என்று சொன்னால், வேதரக்ஷணம் என்பது நின்றே போய்விட வேண்டியது தான். அதனால் வேதத்துக்கே தங்களை அர்ப்பணித்துக் கொள்ளும்படியாகச் சிலரைப் பண்ணும் போது, அவர்களுக்கு நாம் நன்றாக சம்மானம் செய்து, திரவிய சகாயம் நிறையக் கொடுக்கத்தான் வேண்டும். அவர்களுக்கு 'லக்ஷுரி' கூடாதாயினும், மற்றத் தொழில்கள் அவர்களை இழுத்துக் கொள்ளாத அளவுக்கு ஸௌகர்யம் பண்ணித்தரத்தான் வேண்டும்.



— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்.

நாள் கூட அவர் கிருஷ்ணனைப் போய் சேவிக்கவில்லை. ஆனால், அங்கேயிருந்து வந்து நம்மாழ்வார் திருவடியைச் சேவித்து விட்டார்.

பதினோறு பாசுரங்களிலே நம்மாழ்வார் வைபவத்தை - பாகவத வைபவத்தைச் சொல்லியிருக்கிறார்.

மற்ற ஆழ்வார் பாசுரமெல்லாம் பகவத் வைபவம். இந்தப் பதினோறு பாசுரம் பாகவத பிரபாவம்.

இது மிகவும் ஏற்றமுடையது.

*கண்ணி நுண்சிறுத் தாம்பினால் கட்டு*
*உண்ணப்*
*பண்ணிய பெருமாயன் என் அப்பனில்,*
*நண்ணித் தென்குருகூர் நம்பி*
*என்றக்கால்*
*அண்ணிக்கும் அமுதூறும்*
*என்நாவுக்கே*

என்ற பாசுரத்தைத் திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டேயிருக்க வேண்டும்.

இதிலே அவர் என்ன காட்டுகிறார் என்றால், ராமனை விட்டு சத்ருக்னன் எப்படி பரதன் பின் போனானோ, எப்படி பரதனையே பற்றினானோ, அந்த மாதிரி கிருஷ்ணனை விட்டு, கிருஷ்ணனுடைய சந்தோஷமே நம்மாழ்வார் வடிவாக வந்தது என்று நம்மாழ்வார் திருவடியை ஆச்ரயித்தார் மதுரகவி.

இது தொல்வழி. பழமையான மார்க்கம் - உத்தமமான மார்க்கமானதனாலே, உயர்ந்த பகவத் பக்தி எப்போது சிறக்கும் என்று கேட்டால், பாகவத பிரதிபத்தி இருந்தால்தான் சிறக்கும்.

**ப**கவானிடத்திலே எல்லோருமே அன்பு கொள்வார்கள். சஹஸ்ரநாமத்தைப் பாராயணம் பண்ணுவார்கள். ஆனால் பாகவதோத்தமர்களிடத்திலே அன்பு இராது. அவர்களை ஏதாவது தப்பு சொல்லிக் கொண்டேயிருப்பார்கள். 'அவர் இப்படிப் பண்றார் இவர் இப்படிப் பண்றார்' என்று தோஷம் சொல்வார்கள். அந்த மாதிரி தோஷம் சொல்லாதே என்று வேதமே சொல்லித் தருகிறது.

(தொடரும்)

"மாமியார் வீட்டிலிருந்து திரும்பி வந்த மனைவியை, பட்டாசு வெடிச்சு வரவேற்றாயாமே ஏன்?"

"நூறாவது தடவையா கோவிச்சுட்டுப் போய்த் திரும்பி வந்தாளே!"

— அம்பை தேவா



ஸ்ருதி ஸ்ம்ருதிபுராணனாம் ஆலயம் கருணாலயம்!
நமாமி பகவத்பாத சங்கரம் லோக சங்கரம்!!

**ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதிபதி
ஸ்ரீ சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதி
மஹாஸ்வாமிகள் அதிஷ்டானத்தில்**

## கோடி அர்ச்சனை மஹாயக்ஞம்

அன்புடையீர்,

காஞ்சீ காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்த்ர ஸரஸ்வதி ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள், ஜகத்குரு ஸ்ரீ சங்கர விஜயேந்த்ர ஸரஸ்வதி ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள் அவர்களின் பரிபூர்ண அனுக்ரஹத்தின் பேரில் நாளது விக்ரம வைகாசி 6-ந் தேதி (19.5.2000) முதல் காஞ்சிபுரம்-1, சாலைத் தெரு, காஞ்சீ காமகோடி பீடம் ஸ்ரீ சங்கரமடத்தில் ஜகத்குரு ஸ்ரீ சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதி சங்கராசார்ய மஹா ஸ்வாமிகள் அவர்கள்

## அதிஷ்டானத்தில்
## கோடி அர்ச்சனை மஹாயக்ஞம்

சிவாஸ்தானம் ஸ்ரீ பிரும்மபுரீஸ்வரர் கோவிலில் வைதீகம் தினசரி காலை 7 மணி முதல் 9 மணி வரையிலும், மாலை 4 மணி முதல் 6 மணி வரையிலும் நடைபெறும். ஸ்ரீ சங்கர பக்த ஜன சபா 91, சாலைத் தெரு, காஞ்சீபுரம் மேற்படி இடத்தில் ஸ்ரீ மஹா ஸ்வாமிகள் நூற்றாண்டு விழா மண்டபம் கட்ட காஞ்சீ காமகோடி பீடாதிபதி ஜகத்குரு இரு மஹனீயர்களும் சில நாட்களுக்கு முன்பு அடிக்கல் நாட்டியுள்ளார்கள்.

சுத நூற்றாண்டு விழா மண்டபம் கட்டும் பணியில் பக்தகோடிகள் எல்லோரும் பங்கு கொள்ள வேண்டும் என்ற நோக்கத்தில் கோடி அர்ச்சனை ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

ஆகவே பக்தகோடிகள் அனைவரும் இக் கைங்கர்யத்தில் பங்கு கொண்டு ஸ்ரீ மஹா ஸ்வாமிகள் அவர்களின் பரிபூர்ண அனுக்ரஹத்திற்கு பாத்திரர்களாகும்படி கேட்டுக் கொள்கிறோம்.

இங்ஙனம்,
**ஸ்ரீ சங்கர பக்தஜன சபா டிரஸ்ட்**
91, சாலைத் தெரு, காஞ்சீபுரம்.

# இது பணம் கொழிக்கிற விளையாட்டில்லை!

நீச்சல் வீரர் குற்றாலீஸ்வரனையும் டிரயத்லான் வீராங்கனை அமுதாவையும் தெரிந்த அளவுக்கு ரேகா ராமச்சந்திரனைத் தெரிந்திருக்க நியாயமில்லை. இந்த இருவரையும் வெளியில் கொண்டுவந்துவிட்டு நிழலாகவே இருந்து வருபவர் ரேகா. தமிழ் நாடு ட்ரயத்லான் அசோஸியேஷன் செயலர், இந்திய ட்ரயத்லான் அசோஸியேஷனின் துணைத் தலைவர், சர்வதேச ட்யரத்லான் அமைப்பிற்கான பெண்கள் கமிட்டி துணைத் தலைவர் என்று ஏகப்பட்ட பதவிகளைச் சுமந்து கொண்டிருக்கும் அவரை ஆழ்வார்ப்பேட்டையிலுள்ள அவரது இல்லத்தில் சந்தித்தோம்.

"என் மகன் ராகுலை ட்ரயத்லானில் பெரிய ஆளாகக் கொண்டு வர வேண்டும்ங்கற எண்ணத்தில்தான் இந்த பீல்டுல இறங்கினேன். அவனோட நீச்சல் ட்ரெயினிங்கிற்கு நிறைய பேர் உதவினாங்க. 1991ல் ராகுல் நீச்சல் போட்டியில் தேசிய விருது வாங்கினான். இந்த பீல்டுல மத்தவங்களை விட மீனவர்கள் நல்லா ஈடுபடுவாங்க. ஏன்னா கடல்லதானே அவங்களோட வாழ்க்கை. நீச்சலும் அவங்களுக்கு அத்துபடி. அதனால



அவங்கள்ல திறமையானவங்களை ஊக்குவித்தால் என்னன்னு தோணிச்சு. என் கணவர் ராமச்சந்திரனின் உதவியோட செயல்ல இறங்கிட்டேன். இப்ப என்னிடம் 120 குழந்தைகள் ட்ரெயினிங் பண்றாங்க'' என்று சொல்லும் ரேகா, இவர்களுக்கான உடை, உணவு, பிற சாதனங்கள் அனைத்தையும் இலவசமாக வழங்குகிறார்.

"நம்ம இந்தியர்கள் மனோரீதியில் ரொம்ப வீக்'' என்று ஒரு குண்டைத் தூக்கிப் போட்ட ரேகா, கொஞ்சம் நிறுத்தி ஆரம்பித்தார்.

"நாட்டுக்காக இதைப் பண்ணணும்; கண்டிப்பா அதைச் சாதிக்கணும்கற வைராக்கியம் ரொம்பக் குறைவு. விளையாட்டுக்காக வெளிநாடு போறோம்னு வச்சுக்கோங்க... அங்க நம்மாளுங்க நல்லா ஊர் சுத்துவாங்க, ஷாப்பிங் போவாங்க, எல்லாம் பண்ணிட்டு, சாப்பாடு சரியில்லைம்பாங்க. அதையும் இங்கேயிருந்தேவா கொண்டு போக முடியும்? அட்ஜஸ்ட் பண்ணிப் போகத் தெரியறதில்லை. இந்த விஷயத்துல சீனா, ஜப்பான்காரங்களைக் கண்டிப்பா பாராட்டணும். இரண்டு ரொட்டியைச் சாப்பிட்டுட்டுக் கூட சமாளிச்சுடுவாங்க. நம்மாளுங்களை மனோரீதியில் தைரியப்படுத்தறதே பெரிய விஷயம். அப்படி தைரியப்படுத்தினால் நிறைய வெற்றி பெறலாம்.''

**ச**ர்வதேச பெண்கள் அமைப்பின் சார்பில் 1998ம் ஆண்டின் சிறந்த பெண்மணி என்ற விருதைப் பெற்றிருக்கிறார் ரேகா.

ஜெர்மனி சென்றிருந்தபோது தாம் காண நேர்ந்த பயிற்சி முறையை விவரித்தார்:

"ஒரு பெரிய தொட்டி. அதுக்குள்ளே மின்சக்தி கொண்டு வேகமா பாய்கிறது தண்ணீர். அந்த வேகத்தை எதிர்த்து ஒருவர் நீந்தறார். அப்போ அவரோட கை, கால் நரம்புகள் எப்படி செயல்படுகின்றன என்பதை அதற்கான கருவிகளோடு கண்டறிகின்றனர். இந்த மாதிரி டெக்னிகலா ரொம்ப முன்னேறிக் கொண்டிருக்கிறது இந்தத்துறை. இப்படிப்பட்ட விஷயங்கள் எல்லாம் இங்க வர்றதுக்கு ரொம்ப நாளாகும்'' என்றவரிடம் கிரிக்கெட், டென்னிஸ் மாதிரி இதில் பணம், பரிசுகள் கிடைக்குமா? என்றோம்.

"ம்ஹூம். அந்த விளையாட்டுகளில் கொட்டுகிற மாதிரி இதில் பணம் அதிகமா கிடைக்காதுங்கறது உண்மைதான். 'இந்தப் போட்டியில சாம்பியன்ஷிப் வாங்கிக் கொடுத்தா எல்லோரும் ஊட்டிக்கோ குற்றாலத்துக்கோ டூர் போகலாம் என்கிற மாதிரிதான் ஏதாவது சொல்லி ஊக்கப்படுத்த வேண்டியிருக்கு. அதுக்கான செலவும் சொந்தப் பணத்திலேயிருந்துதான். ட்ரயத்லானை நான் ரொம்ப விரும்பறதாலதான் இதெல்லாம் முடியுது. நிறைய பேர் ஹெல்ப் பண்றாங்க. இருந்தாலும் இதுல பங்கு பெறுகிறவங்களுக்குச் சுய முனைப்பு வேணும் அவங்களே தினமும் ப்ராக்டிஸ் பண்ணணும் அப்படிப் பண்ணினா நல்லா வரலாம்'' என்கிறார்.

"ஒலிம்பிக் போட்டியில் முதல் தடவையா ட்ரயத்லானை அறிமுகப்படுத்தப் போறாங்க... இங்கேயிருந்து....?''

"இல்லை... அதுல கலந்துக்க ஆசியாவிலிருந்து ஒருத்தரைத்தான் தேர்ந்தெடுப்பாங்க. அதுக்கு நிறைய ப்ராக்டிஸ் வேணும். இங்கயிருந்து அனுப்ப முடியாது.''

"விளையாட்டு வீரர்களைத் தேர்ந்தெடுப்பதில் 'அரசியல்' அதிகம் இருப்பதாகச் சொல்லப்படுவது உண்மைதானா?''

"இருக்கலாம். இந்த விளையாட்டுகளில் கலந்துக்கற ஒவ்வொருத்தரும் எவ்வளவு கஷ்டப்படுறாங்கங்கறது அவங்களுக்குத் தான் தெரியும். சரியா சாப்பிடாம, பணம் இல்லாம ஏழ்மையான நிலையில் இருந்துதான் நிறைய பேர் வர்றாங்க. அப்படி இருக்கும்போது இதிலயும் 'பாலிடிக்ஸ்' ஆரோக்கியமானதில்லை.''

"அரசு உதவிகள் எப்படி?''

"வெளிநாடுகள் போனா பணம் கொடுக்கிறாங்க. ஆனா அதை வாங்கறதுக்கு வருடக்கணக்குல போராடணும்'' என்று சிரித்துக் கொண்டே சொல்லும் ரேகா ராமச்சந்திரன், உடல் ஊனமுற்றோருக்கான பள்ளி ஒன்றையும் சென்னையில் நடத்தி வருகிறார். இது அவர் மகளுக்காக ஆரம்பிக்கப்பட்ட பள்ளி!

— **செ. ஏக்நாத்**

படங்கள்: **ஜரிஷ்**



# வலி

ஒருத்தனின் கைக்காசு அடுத்தவனிடம் வருவதற்குள் எத்தனை அவஸ்தை. கார்த்திகேயன், மேஸ்திரியின் ஒவ்வொரு அசைவையும் பார்த்துக் கொண்டிருந்தான். அவர் தொண்டையைக் கனைக்கும் போதும், "யார்ராது?" என அழைக்கும் போதும் தன்னைத்தானே என எண்ணுவதும், ஏமாறுவதுமாக ஓடியது.

"அவசரம் மேஸ்திரி... ஐந்நூறு ரூவா பணம் வேணும்."

இரண்டு நாட்களுக்கு முன் மேஸ்திரியின் வீட்டிற்குப் போய்க் கேட்டுவிட்டு வந்தான்.

"அக்கா பொண்ணுக்கு சீர்... தாய் மாமான்னு நான் ஒருத்தன்தான். திடீர்ச் செலவு... குடுத்தீங்கன்னா வாரம் நூறு புடிச்சக்கிட்டு..."

பேனா கத்தியை மடக்கியபடி, "யேய்... சின்னப் பொண்ணு..." என்று கூப்பிட்டார் மேஸ்திரி.

"என்னவாம்?"

உள்ளே இருந்து பதில் குரல் வந்தது.

மும்தாஜ் யாசீன்

"சுடுதண்ணி விளாவியாச்சா?"

"மீனு ஆஞ்சுக்கிட்டு இருக்கேன். கொஞ்சம் பொறுங்க..." "தத்தேறி..." மேஸ்திரி காறித் துப்பினார். "இன்னும் ஏன் நிற்கிற?" என்பதைப் போல அவனைப் பார்த்தார். "அப்புறம்?" "அதான்... சிரு... முன்பணமா..."

"காக வேணும்னா வந்து நிப்பீக... திருப்பித் தர்றப்ப காணாமப் போயிருவீக... எல்லாப் பயலும்."

"இல்லீங்க மேஸ்திரி. சம்பளத்துல பிடிச்சுக்கிட்டு மிச்சம் குடுத்தாப் போதும்..."

"ம்... நான் கந்து வட்டித் தொழில் பண்றேன்னு நெனைச்சிட்டியா?"



"எனக்கு வேற வழியில்லை. எதிர்பாராத செலவு... மாமான்னு நான்தான். தயவுசெஞ்சு மனசு வச்சு..." சுய இரக்கத்தில் குரல் உடைந்து அழுகை வந்து விடுமோ என்றிருந்தது.

"ம்... பார்க்கலாம்..." மேஸ்திரி எழுந்தார். கார்த்திகேயன் அசையவில்லை.

உள்ளே போக அடி எடுத்தவர், "முருகேசுகிட்டச் சொல்லு. நாளைக்கு சைட்டுக்கு வர்றேன்..." முருகேசன் அவருடைய முதன்மை ஆள். அவர் இல்லாத சமயங்களில் அவன்தான் எல்லாம். "சரி..." என்று தலையாட்டினான்.

விடைபெற்றுக் கொண்டு புறப்பட்டான்.

முருகேசன் எல்லாம் விவரமாகக் கேட்டான். "வாங்கிரலாம்... ரெண்டு நாள் பொறு..." என்றான். சொன்ன தோரணை நம்பிக்கையூட்டுவதாக இருந்தது.

"கெடச்சிருமா?" செல்வி சாதம் பரிமாறிக் கொண்டே கேட்டாள்.

"முருகேச அண்ணன் வாங்கித் தர்றேன்னிருக்காரு..."

"கிடைக்கலேன்னா... என் கம்மலை வேணா அடகு வச்சிரலாம்."

"வேணாம். விசேஷத்தப்ப மூளியா நின்னா நல்லா இருக்காது."

"ஆமா..."

அவளது நொடிப்பு தனது தன்மானத்தைச் சுண்டுவது போல உணர்ந்தான்.

காலம் இப்படியேதான் போகுமா?

பெயிண்ட் நெடி. தொங்கு சரம், சுண்ணாம்புச் சுரண்டல், வாரக் கூலி...!

அக்காவுக்கு நல்ல மனது. வாழ்க்கையும் அவளுக்கு ஏற்ற மாதிரியே அமைந்து விட்டது. சாதாரண ஓட்டல் சிப்பந்தியாக இருந்த மாமா, மாஸ்டராகி, டீக்கடை வைத்து, மிலிடரி ஓட்டலாக வளர்ந்து சொந்த வீடு, கார் என எங்கேயோ போய் விட்டார்.

அக்கா அபூர்வ மனுஷி. வசதி உயர்ந்த போதும் தன்னை உயர்த்திக் கொள்ளாமல் அதே எளிமை, பழக்க வழக்கம் மாறாமல் இருந்தாள். பார்க்கிற போது பிரியத்துடன் பக்கத்தில் இருத்திக் கொள்வாள். சௌக்கியம் பற்றி விசாரிப்பாள். தொழில் விவரம் கேட்பாள். "இதென்னடா பொழப்பு... வேற ஏதாச்சும் செய்யேன்."

"செய்யணும்க்கா..."

"வேணா.... எங்கூட வந்து இரு. கடைக்கு ஒத்தாசையா..."

"ம்ஹூம்... நல்லா இருக்காது..."

பிரிதலுக்குரிய வருத்தத்துடன் விடைபெறும்போது அவனது கரத்தைப் பற்றி காசு திணிப்பாள். "என்னத்துக்கு இதெல்லாம்?"

"இருக்கட்டும்டா..."

பண்டிகைக்குத் துணிமணி எடுத்து அனுப்புவாள்.

இரண்டு தினங்களுக்கு முன்பு கடிதம் எழுதியிருந்தாள். "கார்த்தி... உம்மருமக பெரியவளா ஆயிட்டா... பதிமூணாம் நாளு நன்னீராட்டு வச்சிருக்கோம். தயாராயிரு. அடுத்த வாரம் நானும் மாமாவும் பத்திரிகையோட ஊருக்கு வர்றோம்."

கார்த்திகேயனுக்குப் பிரமிப்பாக இருந்தது. ராஜி அவன் தூக்கி வளர்த்தப் பெண்.

செல்விதான் அவனை நடப்பு உலகிற்குக் கூட்டி வந்தாள். "ஆனந்தக் கூத்து போதும். மாமன் சீர் செய்யணுமே. எவ்ளோ வச்சிருக்கீக?"

பகீரென்றது.

அன்றைக்கு உறக்கம் வராத ராத்திரி ஆகி விட்டது. புதுத் துணிமணி, பழம், தேங்காய், மாலை, சந்தனம் என்று அவன் சொன்ன கணக்கைப் பார்த்தால் எழுநூறு, எண்ணூறு ஆகும் போலிருந்தது. ஐநூறாவது கடன் வாங்காமல் முடியாது.

அன்றைக்கு மத்தியான நேரம். மாடிப் படிக்குக் கீழே உட்கார்ந்து பெரிய டப்பாவிலிருந்து, சின்னதிற்குள் பெயிண்ட் ஊற்றிக் கொண்டிருந்தான்.

"கார்த்தீ..." முருகேசன் குரல்.

"ஏண்ணே..."

எழுந்து ஓடினான்.

ஹாலில் சட்டாம்பிள்ளை மாதிரி முருகேசன் நிற்க பக்கத்தில் நடராஜன்.

"நடராசு... ஒத்தாசைக்கு இவன் போதும்ல?"

"போதும்ணே..."

"அப்ப... நாளைக்கே ஆரம்பிச்சுருங்க.."

ஏதோ வேலை விஷயம் என்று தெரிய சப்பென்றிருந்தது. மேஸ்திரி பணத்தைப் பற்றி இவனிடம் ஒன்றும் சொல்லவில்லையா?

"கார்த்தி... நீயும் நடராசும் பாரதி நகர் பில்டிங்குக்குப் போயிருங்க. இனி ஒரு வாரம் அங்கதான் வேலை..."

"சரிண்ணே..."

"அடுத்த செவ்வாய்க்குள்ள வேலை முடியணும்.."

"எப்படிண்ணே..." கார்த்தி மலைத்தான். பெரிய கட்டடம் அது. மூவாயிரம் சதுர அடிக்குக் குறையாது.

## தொட்டுப் பார்க்கலாமா?

எம்.எம். அகர்வால், டெல்லியைச் சேர்ந்த ஒரு பிசினஸ் புள்ளி. அண்மையில் உ.பி.யிலிருந்து ராஜ்யசபைக்குச் சென்றிருப்பவர். அவருக்கு, தம் பக்கத்து சீட்டில் இருக்கும் பிரபல எம்.பி. பற்றி ஒரு சந்தேகம். கரு கரு வென்று இருக்கும் அவரது தலைமுடி நிஜம் தானா? இல்லை விக்கா? முதல் சில நாட்களுக்கு அவர் தயங்கினாலும், அப்புறம், பக்கத்து சீட் எம்.பி.யை நேரடியாகவே கேட்டு விட்டார்.

அவர், "என் தலைமுடி ஒரிஜினல்தான்! ஆனால் நரையை மறைக்க டை அடித்திருக்கிறேன்."

கிறேன்'' என்றார். ஆனாலும் புதியவருக்கு முழுமையாக நம்பிக்கை ஏற்படவில்லை. ''நான் தொட்டுப் பார்க்கலாமா? என்று தயங்கித் தயங்கிக் கேட்க, அவர் சிரித்துக் கொண்டே 'ஓ.கேஸ்' சொன்னார்.


• திலீப் குமார்

தாமே தொட்டுப் பார்த்தபின்தான் புது எம்.பி. சமாதானமானார். சந்தேகம் ஏற்படுத்திய தலைமுடிக்குச் சொந்தக்காரர் யார் தெரியுமா?

பிரபல இந்தி நடிகர் திலீப் குமார்தான்!

—எம்.

"அதெல்லாம் தெரியாது... வீட்டுக்காரன் பதினாலாம் தேதி சாவி வேணும்ங்கிறான். முடிச்சு ஆகணும்..."

''அப்ப... இன்னும் ரெண்டு பேரை அனுப்புங்க...''

''இந்த ரேட்டுக்கு நாலு பேரை அனுப்பினா கட்டுப்படி ஆகாது...''

முருகேசன், அவன் கேள்வி கேட்பதில் எரிச்சலடைந்தவன் போலப் பார்த்தான்.

"என்னப்பா சொல்றே? போறியா?"

"சரி..."

"அப்படிச் சொல்லு... ராசா" முருகேசன் அவனது தோளில் தட்டிக் கொடுத்தான்.

புதியதாக உருவாகி வரும் நகர் அது. அங்கொன்றும் இங்கொன்றுமாக வீடுகள். சாயாவுக்குக் கூட வழியில்லை. ஒரு கிலோ மீட்டர் நடக்க வேண்டும். "எங்கிருந்துதான் மகராசனுக்குக் காசு கிடைக்குதோ..." என்று எண்ணும்படி கட்டடம் பிரம்மாண்டமாக எழும்பியிருந்தது. நீள ஹால். ஆறேழு அறைகள் – சகல வசதிகளுடன்.

ஏழு நாட்களுக்குள்... முடியுமா...?

"ஒனக்குத் தெரியுமா... இங்க வேலைக்கு வர மத்தவனுக மாட்டேன்னுட்டானுக..." என்றான் நடராஜன்.

"அப்படியா?"

"ம்... நாமதான் இளிச்சவாயனுக..."

"நானும் அட்வான்ஸ் கேட்டிருக்கேன். அதான்..."

கார்த்திகேயன் விரக்தியுடன் அவனைப் பார்த்தான்.

''மூத்த பொண்ணுக்கு வளைகாப்பு வருது. மாப்ளை வீட்டுச் செலவுதான்.''

"ம்..."

"மேஸ்திரி நாலு பேரு கூலிய வாங்கிருவான். நம்ம உழைப்பை வச்சு நமக்கே கடன் தருவான். அதுவும் மனசு இருந்தா."

"என்ன செய்யறது?"

நடராஜின் வயது கருதி கீழ்ப்பகுதியை அவனுக்கு ஒதுக்கி, உயரமான பகுதியில் தான் நின்று கொண்டு கார்த்திகேயன் வேலை செய்ய ஆரம்பித்தான்.

செய்யச் செய்ய முடியாத வேலை. பம்பரமாக இயங்க வேண்டியிருந்தது. உள்ளங்கால் வலித்தது. நிலத்தைப் போல அல்ல ஏணி. உடம்பின் முழுக் கனத்தையும் உள்ளங்கால்தான் தாங்க வேண்டும். இடுப்பும், பிடரியும் விண்ணென்று வலி தெறித்தது. தோள்பட்டைக் குடைந்தது. கீழ்த்தளம் கூட இன்னும் முடியவில்லை.

சாயங்காலம் மேஸ்திரி வந்தார்.

"இன்னும் நாலு நாள் இருக்கு. முடிச்சிரலாம்ல?"

"ம்ங்க...."

"அப்ப சரி..." கொஞ்ச நேரம் இருந்து விட்டுப் புறப்பட ஆயத்தமானார். இருவரும் பின்னாலேயே நடந்தார்கள்.

"ஆங்... அட்வான்ஸ் கேட்டீகள்ல... ராத்திரி வீட்டுக்கு வாங்க..."

மேஸ்திரி அறியாதவாறு நடராஜன் அவனைப் பார்த்து நமுட்டலாகச் சிரித்தான்.

கார்த்திகேயனுக்குத் திருப்தியாக இருந்தது. செல்வியும், அவனது அப்பாவும் போய் ஜவுளி வாங்கி வந்தார்கள்.

மஞ்சள் கலரில் பச்சையும் ஊதாவும் டிசைன் போட்ட பாவாடை. பளபளக்கும் துணி. ரவிக்கை. தாவணி...

மத்த சீர்வரிசைகளைப் புறப்படுகிற போது வாங்கிக் கொள்ளலாம் என்று சொன்னாள் செல்வி. "இது போதாதா புள்ள?"

"இதெல்லாம் கவுரதியாக்கும். அவுக தரத்துக்கு இல்லேன்னாலும் நம்ம தரத்துக்கு செய்யறதைச் செஞ்சுதான் ஆகணும்..."

அக்காள் எத்தனையோ உதவியிருக்கிறாள். தானும் ஒரு மனுஷனாக நின்ற பிறகு, அவளுக்காகச் செய்கிற முதல் செலவு இது. செலவு கூட அல்ல. கடமை. அக்காவைப் பெருமைப்படுத்துகிற காரியம்.

அன்று ஞாயிறு. செல்லையாவின் டீக்கடையில் பேப்பர் படித்து விட்டு கால் வலிக்கு வைத்தியம் பற்றி விசாரித்துக் கொண்டிருந்த போது, பக்கத்து வீட்டுப் பையன் ஓடி வந்தான். "கார்த்திண்ணே.... ஒங்க வீட்டுக்கு கார் வந்திருக்கு."

எழுந்து வீட்டிற்கு வர –

அக்காவேதான். கூடவே மாமாவும். "வாங்க... வாங்க..." பூரிப்பில் அவனது முகம் மலர்ந்தது.

"வாடா..." அக்கா பக்கத்தில் இடம்

## போலீசுக்குப் பாதுகாப்பாக சி.ஆர்.பி.எஃப்!

**நூ**று நாட்கள், பதினெட்டாயிரம் கிலோ மீட்டர்கள், தமது மோட்டார் சைக்கிளிலேயே இந்தியா முழுவதும் சுற்றி வந்திருக்கிறார் கரூர் மாவட்டம் வாங்கல் காவல் நிலைய தலைமைக் காவலரான என்.சிவாஜி.

தீவிரவாதிகளை ஒழிக்க காவல்



துறையினருக்குப் பொதுமக்களின் ஒத்துழைப்பு அவசியம் எனவும், காவல்துறையினர்-பொதுமக்கள் நல்லுறவு, மதநல்லிணக்கம் இவற்றை வலியுறுத்திதான் இந்தச் சுற்றல். கடந்த ஜனவரி 31ம் தேதி தொடங்கிய இந்தப் பயணத்தைக் கோவை கமிஷனர் ராதாகிருஷ்ணன் துவக்கி வைத்தார். இந்தப் பயணத்தில் நிறைய சவால்களைச் சந்தித்திருக்கிறார் இவர். அஸ்ஸாம் மாநிலத்திலிருந்து திரிபுரா தலைநகர் அகர்தலா வரைக்கும் தீவிரவாதிகள் தொல்லை இருக்கலாம் என்று மத்திய ரிசர்வ் போலீஸ் படையினர் (சி.ஆர்.பி.எஃப்) இவருடன் பாதுகாப்புக்கு வந்தார்களாம்! தமது பயணத்தின்போது ஆந்திரம், மிசோரம், அருணாசல பிரதேசம், ஜம்மு-காஷ்மீர் முதல்வர்களைச் சந்தித்துப் பாராட்டுகளைப் பெற்றிருக்கிறார்.

— ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

காட்டினாள். நான் இன்னும் சின்னப் பையன் என்று நினைப்புப் போல. சிரித்துக் கொண்டே எதிரில் உட்கார்ந்தான்.

வீடே மணத்தது. அக்காள் பூ வாங்கி வந்திருப்பாள் போல. செல்வியின் கூந்தல் நிறைய மல்லிகைப்பூ.

பேசினார்கள். வியாபாரம், குடும்ப நிலவரம், அக்காள் இரண்டு ஏக்கர் தென்னந் தோப்பு வாங்கியிருப்பது...

செல்வி ஜாடை செய்து கூப்பிட்டாள். எழுந்து வர –

"அப்புறம் பேசலாம். முதல்ல பலகாரம் ஏதாச்சும் வாங்கிட்டு வாங்க. அப்படியே சமையலுக்கும் வேண்டியதைச் செய்யணும். சாப்பிட்டுப் போகணும்னு சொல்லுங்க..."

"அதானே..." கார்த்தி வெளியே புறப்பட, அக்காள் பிடித்துக் கொண்டாள். "ஒண்ணும் வேணாம்.. நாங்க உடனே கௌம்பணும்..."

"நல்லா இருக்கு நாயம்..."

"இன்னும் நிறைய இடம் போகணும்ப்பா.. நமக்குள்ள என்ன சம்பிரதாயம்... விடு.. இன்னொரு நாள் பார்த்துக்கலாம்..." -அதுவரை அதிகம் பேசாமலிருந்த மாமாவும் சொன்னார். இருவரும் எழுந்து விட்டார்கள்.

"ஏய்... அந்தத் துணிமணிய காட்டினியா?"

செல்வி அவசரமாக உள்ளே போய் எடுத்து வந்தாள்.

"என்னால முடிஞ்சதுக்கா... மாமன் சீர்..."

"பாருங்க இவனை..." அக்காள் கையில் வாங்கித் தடவிப் பார்த்தாள். தோளில் பிரித்துப் போட்டு மாமாவின் பக்கம் திரும்பினாள்.

"வீணா ஏன் செலவு பண்றே?" என்றார் மாமா.

"தாய்மாமன்னு இருந்துக்கிட்டு இது கூட செய்யலைனா எப்படி?" என்றான் கார்த்தி.

"டேய்.. இவரு தங்கச்சி, நான்தான் சீர் செய்வேன்னு ஒரே பிடிவாதம். எங்களைக் கேக்காம பட்டுச் சேலையும் தங்கச் சங்கிலியும் கூட எடுத்து வச்சுட்டா..."

"அதெப்படிக்கா? நான் ஒருத்தன் இருக்கிறப்ப..."

"அவளும் முறைக்காரிதானேடா.. உன்னால முடியாதுன்னு நான்தான் சரீன்னுட்டேன்..." அவன் அதிர்ச்சியுடன் பார்க்க,

"ஒண்ணும் நினைக்காதே. இந்தத் துணிய சபையில வச்சாலும் நல்லா இருக்காது. இங்கேயே இருக்கட்டும். லீவுல வீட்ல இருக்கும்போது தைச்சுப் போட்டுக்கச் சொல்றேன்" – அவனது சம்மதம் முக்கியம் இல்லை என்பதைப் போல துணிகளைப் பையில் வைத்து விட்டுப் புறப்பட்டாள்.

வாசல் வரைக்கும் போனவள் திரும்பி, "கால் வலியாமே... செல்வி சொன்னா... இந்தா.. ஆஸ்பத்திரிக்குப் போய்க் காட்டு..." வழக்கம் போல ரூபாய் நோட்டை மடக்கி நீட்டினாள். கார்த்தி முதன் முறையாக வாங்க மறுத்தான்.

"ஏண்டா?"

"இதெல்லாம் வலி இல்லைக்கா..." என்றான். ○

''நம்ம தலைவர் இருந்தாலும் ரொம்ப மோசம்...''

''எப்படி?''

''ஒரேயடியா, ராஜராஜ சோழர் ஆட்சியைக் கொண்டு வருவோம்னு சொல்றாரு!''

— வந்தவாசி பா. ஜெயக்குமார்



''டைவர்ஸ் கேஸுக்கு நான் எப்பவும் பத்தாயிரம் வாங்கறது வழக்கம்.''

''நான் எப்பவும் ஐயாயிரம் தான் கொடுக்கறது வழக்கம்!''

— சீர்காழி வி. ரேவதி

# நின்னு கொல்லும்!





''ஒரு பல் பிடுங்க அம்பது ரூபாயா? அந்தக் காலத்துல அஞ்சோ பத்தோதான் கேட்பாங்க...''

''நீங்க அந்தக் காலத்துலேயே எல்லா பல்லையும் பிடுங்கிக்கிட்டு இருக்கலாமே!''

— தஞ்சை தாரூ



''நீ வேலை பார்க்கிற டிபார்ட்மெண்ட்ல டாக்டர் உட்கார்ந்துகிட்டேதான் ஆபரேஷன் பண்ணுவாரா! ஏன்?''

''தெய்வம்தான் நின்னு கொல்லுமாம்! சொல்றாரு!''



இலங்கை விழாக் குழுவினருடன் பாபா



# ஒயிட் ஃபீல்டில் சந்திரிகாவின் மாமா!

இலங்கையில் ராணுவமும், விடுதலைப் புலிகளும் கடுமையாக சண்டையிட்டுக் கொண்டிருக்கிற வேளையில் சிங்களர்களும் தமிழர்களும் கைகோத்து வைகாசி விசாகத்தைக் கொண்டாடியிருக்கிறார்கள். இலங்கை ஜனாதிபதி சந்திரிகாவின் தாய் மாமா சிவலி ரத்வதே எதிர்க்கட்சியான யு.என்.பி.யின் முக்கிய தலைவரான ஜெயசூர்யா ஆகியோர் இணைந்து அதில் கலந்து கொண்டிருக்கிறார்கள். இந்நிகழ்ச்சி நடந்தது சத்ய சாயியின் ஒயிட் ஃபீல்டில்!

மே மாதம் பத்தொன்பது தொடங்கி மூன்று நாட்கள் ஒயிட் ஃபீல்டில், புத்தர் அவதரித்த, முக்தியடைந்த வைகாசி விசாகத்தை வெகு விமரிசையாகக் கொண்டாடினார்கள்.

எம்மதமும் சம்மதம் என்கிற கோட்பாட்டின்படி, சத்ய சாய்பாபா தம் பக்தர்களுடன் ஆண்டு தோறும் தீபாவளி, கிறிஸ்துமஸ், மிலாது நபி, புத்த பூர்ணிமா என கொண்டாடி வருகிறார். அதன்படி ஒயிட் ஃபீல்டில் ஒவ்வொரு ஆண்டும், வைகாசி விசாகத்தை நடத்தும் பொறுப்பு, ஒவ்வொரு நாட்டைச் சேர்ந்த சாய் பக்தர்களுக்கு அளிக்கப்படுகிறது. இந்த ஆண்டு விழா நடத்தும் பாக்கியம் இலங்கைக்குக் கிடைத்தது. தமிழர்களும், சிங்களர்களும் ஆக சுமார் இரண்டாயிரம் பேர் ஒயிட் ஃபீல்டுக்கு வந்து, வைகாசி விசாகத்தை வெகு விமரிசையாகக் கொண்டாடி, சத்ய சாயியின் கருணையைப் பெற்றார்கள். (அடுத்த ஆண்டு விழா நடத்தும் பொறுப்பு மலேசியாவுக்கு.)

யாழ்ப்பாணத்தில் கடும் சண்டை என்றபோதிலும் இலங்கை ராணுவத் தளபதி ரோஷன் தலுவதே இங்கு வந்ததற்கு இதுதான் காரணம். அவர் அதிதீவிர சாய் பக்தராம்.

ஒயிட் ஃபீல்டில் மூன்று தினங்கள் நடந்த விழாவில் உலகெங்கும் இருந்து சுமார் எட்டாயிரம் பேர் கலந்து கொண்டனர்.

இலங்கையின் பிரபல பாலே நடனக்குழு ஒன்று, புத்தரின் அவதாரம் முதல் முக்தி வரை மிக அற்புதமான நாட்டிய நிகழ்ச்சியை மேடை ஏற்றியது. அக்குழுவினரை ஆசிர்வதிக்கும் விதமாய், பாபா, ஒரு தங்கச் சங்கிலி வரவழைத்து அளித்திருக்கிறார்.

- மௌலி

# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி – 2000

படைப்பாளிகளே, வாசக எழுத்தாளர்களே! நீங்கள் அனைவரும் ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் சிறுகதைப் போட்டி வந்தே விட்டது!

**முதல் பரிசு – ரூ. 5000**

**இரண்டாம் பரிசு – ரூ. 3000**

**மூன்றாம் பரிசு – ரூ. 2000**



தவிர, பிரசுரத்துக்குத் தேர்வாகும் ஒவ்வொரு கதையும் ரூ. 500 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளர் எனில், வழக்கம் போல் போனஸ் உண்டு!

***விதிமுறைகள் :***

- சரித்திரம், சமூகம், மர்மம், நகைச்சுவை என எப்படிப்பட்ட கதையாகவும் இருக்கலாம். கதை உங்கள் சொந்தக் கற்பனையாக இருக்க வேண்டும்; அவ்வளவுதான்!
- கல்கியில் 4 பக்கங்களுக்கு மிகாமல் இருப்பது நல்லது.
- சொந்தக் கற்பனைதான் என்பதற்கு உறுதிமொழிக் கடிதம் வேண்டும். அது இல்லாத கதைகள் பரிசீலிக்கப்பட மாட்டா.
- அறிமுக எழுத்தாளர் எனில், இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லையென்றும் போட்டி முடிவு வெளியாகும் வரை எழுதுவதில்லை என்றும் உறுதி மொழி தர வேண்டும்.
- முழு வெள்ளைத் தாளில் ஒரு பக்கத்தில் மட்டுமே எழுத வேண்டும்.
- தேர்வாகாத கதைகளைத் திரும்பப் பெற, போதிய தபால் தலைகள் ஒட்டிய அஞ்சல் உறை இணைக்கப்பட வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.
- ஒருவரே எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.
- பரிசுக்குரிய கதைகளை நடுவர்குழு பரிசீலித்துத் தேர்ந்தெடுக்கும். சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே இறுதி.
- முடிவு வெளியாகும் வரை, எவ்வித கடிதப் போக்கு வரத்தோ, தொலைபேசி விசாரிப்புகளோ கூடாது.
- **'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி – 2000'** என்று உறையின் மேல் தவறாமல் குறிப்பிட்டு, அனுப்ப வேண்டிய முகவரி:

**ஆசிரியர், கல்கி, 47, ஜவாஹர்லால் நேரு சாலை,**
**ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097.**

- கதைகள் வந்து சேரக் கடைசித் தேதி : **ஜூன் 15.**
- போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் ஆகஸ்ட் 6 ஆண்டு மலரில் வெளியாகும்.

***படைப்பாளிகள், வாசக எழுத்தாளர்கள் அனைவரும் உற்சாகத்துடன் கலந்து கொண்டு சிறப்பிக்க அழைக்கிறோம்.***

**— ஆசிரியர்**

# பதினைந்தே நாட்களில் ஒரு படம்!

கோடிகளை முதலாகப் போட்டு, கையைச் சுட்டுக் கொண்டு வலியால் துடிக்கும் தயாரிப்பாளர்களுக்கு அட்வைஸ் பண்ணுகிற மாதிரி ரெடியாகியிருக்கும் படம் "சப்பாணி!"

வெறும் பத்து லட்சத்தில், பதினைந்தே நாட்களில் தயாரிக்கப்பட்டிருக்கிறது இப்படம். ஹீரோக்கள், ஹீரோயின்கள் கால்ஷீட் பிரச்னை இல்லை; அவர்களுக்கான லட்சக் கணக்கு சம்பளம் இல்லை. இப்படி ஏகப்பட்ட 'இல்லை'களோடு கதையை மட்டுமே மையமாகக் கொண்டு தயாரிக்கப்பட்டிருக்கும் இப்படம் குழந்தைகளுக்கானது!

"சங்கரநாராயணன்ங்கறவர் கோயில் பூசாரி... அவருக்கு இரண்டு பெண் குழந்தைகள். பதினேழு வயசுல ஒருத்தி- மாயா. ஏழு வயசுல அம்மு. இந்தக் குழந்தைகளுக்கு அம்மா இல்லை. இவங்க பக்கத்து வீட்ல இருப்பவன் எட்டு வயசு பாஸ்கர். இவனை பாக்கான்னு கூப்பிடுவாங்க. இந்த எட்டு வயசு பையனுக்கும் அம்மா இல்லை; அப்பா மட்டும்தான். அப்பா 'தண்ணி' வண்டி. இவனுக்கு ஒரு கால் ஊனம். அதனால சப்பாணின்னும் சொல்வாங்க. தாழ்த்தப்பட்ட இந்த சிறுவன் கூலி வேலை செய்தும், அப்புறம் ஆரஞ்சு மிட்டாய்களை விற்றும் சம்பாதிக்கிறான்.

"பூசாரி மகள்களும் இவனும் ஃப்ரண்ட் ஆயிடறாங்க. தங்கள்ல ஒருத்தன் மாதிரி நினைச்சுக்கிறாங்க. இந்த நேரத்துல பூசாரி சாதியைச் சேர்ந்தவங்கயெல்லாம், அந்தப் பையனோட ஏன் பழகறீங்க? அவன் தாழ்த்தப்பட்டவன். அவன்கூட அலையக் கூடாதுன்னு சொல்றாங்க. இந்த நேரத்துல பூசாரி திடீர்னு இறந்துவிட, அனாதையாகறாங்க அம்முவும், மாயாவும். சொந்தம் பந்தம் யாரும் உதவிக்கு வராத நிலையில் அவர்களுக்கு உதவியாக இருக்கிறான் பாஸ்கர். ஒரு திருட்டுக் குற்றத்தில் பாஸ்கரோட அப்பாவும் ஜெயிலுக்குப் போய் விட.... நடுத்தெருவில் மூன்று பேரும்!

- இப்படிச் செல்லும் கதையில், கிளைமாக்ஸ் நெஞ்சில் நங்கூரம் பாய்ச்சும்'' என்கிறார் படத்தின் இயக்குனர் தேவராஜன்.

இவர் சினிமா டைரக்டர் மட்டுமல்ல. கேரள முன்னாள் மாஜிஸ்திரேட்! இது வரை ஆறு படங்கள் எடுத்துள்ளார். இவர் தயாரித்து இயக்கிய தாழ்வர, மயில்பீலி, பவ, போன்ற படங்கள் இந்திய மற்றும் சர்வதேச திரைப்பட விழாக்களில் இடம் பெற்றுள்ளன.

இப்படத்தின் வசனம் மற்றும் பாடல்களை எழுதும் சுரா இப்படம் தோன்றியக் கதையைச் சொன்னார்:

''டைரக்டர் தேவராஜன் இருபது வருஷத்துக்கு முன்னால சென்னையிலிருந்து


• தேவராஜன்


• சுரா



மாயா

வெளிவந்த மலையாள பத்திரிகையான 'மித்ரகைரலி'-யில் வேலை பார்க்க வந்தவர். அந்தப் பத்திரிகையில உதவி ஆசிரியரா நான் இருந்தப்போ எனக்குப் பழக்கம். பிறகு அவர் ட்ராக் மாறி கேரளா போய் சினிமாவுக்கு வந்துட்டார்.

"1989-ல் தேவராஜன் 'தாழ்வர' என்ற படத்தை எடுத்தார். நக்ஸலைட் பிரச்னையை வச்சு எடுக்கப்பட்ட படம் அது. அப்பவே ஒரு



வெயிட்டான சப்ஜெக்டை தூக்கி படம் பண்ணியிருக்கிறதப் பார்த்து பிரமிச்சேன். அது மாதிரியான படங்களைத் தமிழ்ல ஏன் எடுக்க மாட்டேங்கிறாங்கன்னு தோணிச்சு.

ரொம்ப வருஷம் கழிச்சு தேவ

# ...ாக்கா, சப்பாணி!

ராஜன் சொன்ன கதையைத் தமிழ்ல எடுக்க முடிவு பண்ணினோம். பிறகு தமிழ், மலையாளம் இரண்டு மொழியிலயும் எடுக்கலாம்னு தீர்மானிச்சோம். அதுமட்டுமில்லாம தமிழ்ல குழந்தைகள் படம் ரொம்பக் குறைவு. இந்தப் படம் வந்தா நல்ல வரவேற்பு இருக்கும் என்று நினைத்தோம்'' என்கிறார்.

இப்படத்தில் மாயாவாக நடிப்பவர் பிரவீதா (அட்டைப்படம்). திருச்சூர் அருகிலுள்ள ஒற்றப் பாலத்தைச் சேர்ந்த இவர் குழந்தை நட்சத்திரமாக மலையாளப் படங்களில் வலம் வந்தவர். ஷாஜி என்.கருண் இயக்கிய 'ஸ்வம்' படத்தில் நடித்ததற்காக சிறந்த குழந்தை நட்சத்திரத்திற்கான தேசிய விருதைப் பெற்றிருக்கிறார். பரத நாட்டியம் மற்றும் மோகினி ஆட்டத்தில் டிப்ளோமா பெற்றுள்ள இவர், 'இனி எல்லாம் சினிமாதான்' என்கிறார்.

சப்பாணியாகவும், அம்முவாகவும் நடித்திருப்பவர்கள் தேவராஜனின் குழந்தைகளான திலீப் ராஜூம், அபர்ணாவும்.

இந்தப் படத்தின் மூலம் இசையமைப்பாளராகிறார் இளையராஜாவின் உறவினரான ரவிவர்மா.



ஓவர்சீஸ் ரைட்ஸ், டி.வி. ரைட்ஸ் என்று தொடங்கி மேலும் பல ரைட்ஸ்களைக் கூட்டிப் பெருக்கிப் பார்த்தால் முதலுக்கு மேல் நிச்சயம் லாபமிருக்கிறது. "கதையை மட்டுமே மூலதனமாகக் கொண்டு வரும் பல லோ பட்ஜெட் படங்களுக்கு இது முன் மாதிரியாக அமையும்; அதே நேரத்தில் இந்தப் படம் மூலம் சிறந்த கதையம்சம் உள்ள படங்கள் தமிழில் நிறைய உருவாகவும் வழியிருக்கிறது'' என்கிறார் சுரா.

— ஏக்ஜி

நீண்ட கால சஸ்பென்ஷனுக்குப் பின், மீண்டும் டெபுடி முனிசிபல் கமிஷனராகப் பதவி ஏற்றிருக்கிறார் கைர்நார். ஆறு வருடங்களாக மும்பைக் காரர்களுக்கு முடக்கப்பட்டிருந்த சேவையை, வட்டியும் முதலுமாக திருப்பித் தர, 'டிமாலிஷன்' (நடைபாதை ஆக்கிரமிப்புகளைத் தகர்ப்பது) வேலைகளைப் புயல் வேகத்தில் துவங்கிவிட்டார்! மும்பையில் திடீர்ப்புயல் (அசல்தானுங்க) அடித்த அன்றுதான், இந்த 'டிமாலிஷன்' புயலை (அவர் வெளியே போக முடியாத காரணத்தால்) வளைக்க முடிந்தது.

# மீண்டும் இடி மன்னர்!

**ஓய்வு பெற ஒரு மாதமே இருக்கையில், உங்களைத் திரும்பவும் பதவியில் அமர்த்தியபோது மனக் குமுறவில்லையா?**

என் காயங்கள் ஆழமானவை. இனி எதுவுமே பாக்கியில்லை என்ற அளவுக்கு, அவமானங்களைச் சுமந்தாகிவிட்டது. என் இன்னல்களைப் பகிர்ந்துகொண்ட என் மனைவிக்குத்தான் இது பெரும் ஆறுதலைத் தந்தது. ரிடையர் ஆவதற்கு முன்னால், மீண்டும் நான் டெபுடி கமிஷனர் நாற்காலியில் உட்கார வேண்டும் என்பது அவள் ஆசை; அது நிறைவேறி விட்டது; அவ்வளவுதான்...!

**ஆறு வருட இழப்பை ஆறு மாதங்களில் ஈடு செய்ய முடியுமா?**

முடியாது; குறைந்தபட்சம் ஐந்து வருடங்களாவது வேண்டும்; அப்போதுதான் என் சேவையின் பயனை மக்கள் அனுபவிக்க முடியும்.

**தற்சமயம் கிட்டியிருக்கும் ஆறு மாத பதவி நீட்டிப்புக்குச் சிவசேனைக்காரர்கள் எப்படி ஒத்துக்கொண்டார்கள்?**

கடைசி காலத்தில், நான் வாயால் கெட விரும்பவில்லைதான். அனாவசிய சர்ச்சையைக் கிளப்பப் பிடிக்கவில்லை. ஆனால் சிவசேனைக்காரர்கள், பசை உள்ள பக்கம் சாய்பவர்கள் என்பதை எப்படிச் சொல்லாமலிருக்க முடியும்? மக்கள் என் பக்கம் என்பதை நன்றாகத் தெரிந்துகொண்டு, எனக்கு ஆதரவு தருவதே மேல் என நினைக்கிறார்கள்.

**போலீஸ் இப்போது உங்களுக்குப் பக்க பலமாகத் துணை புரிகிறார்களே? அப்படியானால் காங் - தேசியவாத காங்கிரஸ் அரசும் உங்களை ஆதரிப்பதாகத்தானே அர்த்தம்?**

உண்மைதான்; விலாஸ்ராவ் தேஷ்முக்கிற்கு இதிலெல்லாம் முக்கிய பங்கு உண்டு. பிரதானமாக அவரும், ஏனைய கமிஷனர்களும், பொதுமக்களும், மீடியாவும் கொடுத்த 'ஸப்போர்ட்'தான் நான் இன்று சுதந்திரமாக இயங்குவதற்கு முக்கிய காரணம்.

**நடைபாதை வியாபாரிகளின் 'லாபி' என்ன அத்தனை சக்தி வாய்ந்ததா? உங்களை இந்தப் பாடுபடுத்துகிறார்களே?**

'ஈஸி மணி' என்பதுதானே இன்றைய தலைமுறையின் தாரக மந்திரம்? ஒழுங்காக இடத்தை வாங்கி கடை போட வேண்டுமென்றால் வி.எஸ்.டி., சர்ச்கேட் முதலான ஏரியாக்களில் மூன்றுக்கு மூன்றடி இடத்தைப் பெற கோடி கோடியாகச் செலவாகும். கோடிகளுக்கு இவர்கள் எங்கே போவார்கள்? அதனால் இப்படி 'அஃப்தா' (வாரா வாரம் சம்பந்தப்பட்டவர்களுக்கு சம்திங் அழுதல்) கொடுத்துவிட்டு கடை போடுவதால், இவர்களுக்கு நல்ல லாபம்; இவர்களின் யூனியனும் ரொம்ப ஸ்ட்ராங்க்; அடிதடி, ரகளை என்பதிலிருந்து இப்போதுதான் பேச்சுவார்த்தைக்கு இறங்கி வந்திருக்கிறார்கள்.

**இந்த ஒரு மாதத்தில் எத்தனை எதிர்ப்புகளைச் சந்தித்திருக்கிறீர்கள்?**

மூன்றுமுறை தாக்கப்பட்டிருக்கிறேன்; காலில் அடி வாங்கியிருக்கிறேன்; என் சக ஊழியர்களெல்லாம் காயம் பட்டிருக்கிறார்கள். வீரத் தழும்புகள் எக்கச்சக்கம். ஃபோனில் வரும் மிரட்டல்களுக்கு அளவே இல்லை! ஆனால், அதை ஒரு பொருட்டாக நான் நினைப்பதில்லை.

**அழிவை விரும்பும் 'destructive mind' உங்களுக்கு இருப்பதால்தான் இப்படி டிமாலிஷன் வெறியராக இருப்பதாகச் சொல்கிறார்களே?**

எனக்கு இந்த டிமாலிஷன் தொழிலே பிடிக்கவில்லை; "டிமாலிஷன் மேன்" என்ற பட்டமும் ரசிக்கவில்லை. ஆனால் நான் கடமையைச் செய்தாக வேண்டும். நான் என் கடமையைச் சரிவரச் செய்தாலே மும்பை ஐம்பது சதவிகித அழகாகி விடும். மற்றதை சம்பந்தப்பட்ட துறையினர்தான் கவனிக்க வேண்டும். தற்சமயம் விஎஸ்டி பகுதியை நடைபாதை வியாபாரிகளிடமிருந்து மீட்டிருக்கிறேன். இனி மத்திய ரயில்வேதான் அதை அழகுபடுத்துவது பற்றி யோசிக்க வேண்டும். பார்ஸிகளின் 'பெஹ்ரம் வெல்' என்ற தொழுகைத் தலத்தையும் ஆக்ரமிப்புகளிலிருந்து விடுவித்ததில் அவர்களுக்கு ஏக மகிழ்ச்சி. 250 ஆண்டுகள் புராதானமாயிற்றே அது!



**ஒருவழியாக ஷரத்பவார் மீது நீங்கள் ஏவிய குற்றச்சாட்டுகளுக்கு ஆதாரங்களைத் தந்து விட்டீர்களாக்கும்?**

என்னால் இரண்டு வண்டி ஆதாரங்களைச் சேகரித்துக் கொடுத்திருக்க முடியும்; ஆனால் அந்தத் தேடலில் நான் சாதித்திருக்கக் கூடியது என்ன? ஷரத்பவார் என்ற ஒரு தனி மனிதரைத்தான் 'டிமாலிஷ்' பண்ணியிருக்க முடியும். ஆனால் நான் குறி வைத்தது புரையோடிப் போயிருந்த நம் வழிமுறைகளை; லஞ்சமும் ஊழலும் நலிந்திருந்த நம் சமூகத்தை; கிரிமினல்களும் அரசியல்வாதிகளும் கைகோத்துக் கொண்டு குட்டிச் சுவராக்கிய நம் சமுதாயத்தை; பப்புகலானி, டாக்கூர் போன்ற கிரிமினல்களுடன் பவாருக்கு இருந்த தொடர்பைப் பற்றித்தான் பத்திரிகைகள் பக்தி பத்தியாக எழுதினவே? இன்னும் என்ன ஆதாரம் வேண்டும்?

**அப்படி என்றால் கபில் மீதிருக்கும் குற்றச்சாட்டை, பிரபாகரோ, பிந்த்ராவோ நிரூபிக்க வேண்டாமென்றாகிறதே?**

அது வேறு கதை; கார்கில் விஷயத்தில் ஒரு பெரிய பி.ஜே.பி தலைவரைப் பற்றி கபில் ஏதோ விரும்பத்தகாத விதத்தில் பேசியிருக்கிறார். அதற்குத்தான் இந்தப் பழி வாங்கும் படலம். இடைப்பட்டவர்களெல்லாம் பகடைகள்.

**ரிடையரானால் எப்படிப் பொழுதைக் கழிப்பீர்கள்?**

எனக்கோ என் மனைவிக்கோ பணம், பொருள், பகட்டு எதிலும் விருப்பமில்லை; இந்தச் சமூகத்திற்கு நாங்கள் பட்டிருக்கும் கடனை அடைக்க வேண்டும் என்பதுதான் ஒரே குறிக்கோள். அதற்கென, மக்களுக்கு விழிப்புணர்ச்சியை ஏற்படுத்தும் பணிகளிலேயே எப்போதும் ஈடுபடுவோம். இன்னும் கொஞ்சம் தீவிரமாகலாம். அல்லது மக்கள் துயர் துடைக்கும் பணிகள் வேறு எதிலாவது ஆர்வம் காட்டலாம்!

— ஜெயஸ்ரீ ராஜ்





# காஞ்சியில் பூஜை; அமெரிக்காவில் பிரசாதம்!

"குழந்தைக்குப் பிறந்த நாள்; காஞ்சிபுரம் கோயில்ல அர்ச்சனைப் பண்ணனும். என்ன செய்யலாம்?"

-அமெரிக்காவிலோ அல்லது ஆஸ்திரேலியாவிலோ உட்கார்ந்து கொண்டு இப்படி மூளையைப் பிசைந்துக் கொண்டிருப்பவர்களுக்கு இனி கவலையில்லை. வந்து விட்டது www.eprarthana.com.

கம்ப்யூட்டர் முன் அமர்ந்து இன்டர்நெட்டில் இந்த முகவரிக்குள் நுழைந்தால் வரவேற்பலை- தமிழகத்தின் நானூறு கோயில்களும் இரண்டாயிரம் இந்து தெய்வங்களும்!

எந்தக் கோயிலில் அர்ச்சனை/பூஜை செய்ய வேண்டும் என்பதைக் குறிப்பிட்டு அதற்கான இடத்தில் நிரப்பினால் அதோடு உங்கள் கடமை முடிந்து விட்டது. இனி அர்ச்சனை/பூஜை முடிந்து பிரசாதம் உங்கள் வீட்டுக் கதவைத் தட்டும். அமெரிக்காவில் இருந்தாலும்.

பிரசாதம் வீட்டிற்கு வருமா? எப்படி? "அந்த வேலையை நாங்கள் செய்கிறோம். எந்தக் கோயிலில் எதற்காக அர்ச்சனை செய்ய வேண்டும் என்று சொல்கிறீர்களோ அதன்படி செய்யப்பட்டு பிரசாதத்தை நாங்கள் கொரியரில் அனுப்புகிறோம்" என்கிறார் இந்த வெப்-சைட்டை துவக்கியுள்ள சன் சாஃப்ட்வேர் சொலியூஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் நிறுவன இயக்குனர் நம்பி.

"அர்ச்சனை செய்ய வேண்டிய தேதி, திருமண நாள் போன்றவற்றைக் குறிப்பிட்டு விட்டால் அந்த நாட்களில் இந்த வெப்சைட் உங்களுக்கு நினைவூட்டல் அனுப்பும்" என்கிறார் நம்பி.

இந்த வலைத் தளத்தில் வேறென்னென்ன இருக்கிறது?

தமிழகத்தில் உள்ள இரண்டாயிரம் இந்து தெய்வங்களின் படங்கள் சின்ன சைஸில் இருக்கின்றன. ஒவ்வொன்றையும் 'கிளிக்'கினால் பெரிய சைஸில் பார்க்க முடியும்.

விழா நாட்கள், அஷ்டமி, நவமி, பிரம்மோற்சவம் என்பதிலிருந்து பஞ்சாங்கம் வரை எல்லாமே இருக்கிறது.

ஆமாம், இதற்கெல்லாம் கட்டணம் உண்டா?. அது இல்லாமல் எப்படி? ஒரு அர்ச்சனைக்கு (கோவிலைப் பொறுத்து) ஒன்பது டாலரிலிருந்து ரேட் கூடுகிறது. ஒவ்வொரு அர்ச்சனைக்காகவும் கொடுக்கப்படும் கட்டணத்தில் இருபத்தி ஐந்து சதவிகிதம் சமூக சேவை அமைப்புகளான சிவானந்த குருகுலம், உதவும் கரங்கள் போன்ற அமைப்புகளுக்கு அனுப்பப்படும்.

ஒவ்வொரு அர்ச்சனைக்கும் இரண்டு பரிசு உண்டு! அர்ச்சனைகள் கூடக் கூட பாயிண்டுகள் அதிகமாகி பரிசுகளும் அதிகமாகுமாம்!

பிரார்த்தனை செய்வதற்குக் கூட ஊக்கத் தொகையா? அடக் கடவுளே!

— அப்பு

**Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi**
**Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.**
**Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.**
**Annual Subscription : India : Rs. 275/-; Overseas : Rs. 2000/- (Air Mail)**
**Half Yearly Subscription : India : Rs. 140/-; Overseas : Rs. 1000/- (Air Mail)**

# ஒன்றே ஒன்று மட்டுமே

**யூடிஐ**
**மந்த்லி இன்கம் பிளான் 2000 (செகண்ட்)**

# நீங்கள் விரும்பும் வகையில்

| வரியற்ற கவர்ச்சிமிகு வருமானம்<br>ஆ.ஒ. 9.65% வருடாந்திரமாக வழங்கப்படும்<br>ஆ.ஒ. 9.25% மாதாந்திரமாக வழங்கப்படும் | முதிர்வின்போது மூலதன பாதுகாப்பு | 54ஈஏ முதலீட்டாளர்களுக்கு* நல்லவாய்ப்பு |
|---|---|---|

- 3 தேர்வுகள் உள்ள ஒரு 4 வருட 9 மாத காலவரம்புள்ள திட்டம்.
- 2000 ஜூலை 1 முதல் 2001 ஜூன் 30 வரை உள்ள ஆண்டில் 3 தேர்வுகளின் கீழும் வருமானம் பின்வருமாறு உறுதிப்படுத்தப்படுகிறது.
  - வருடாந்திரம் : வருடத்திற்கு 9.65% வழங்கப்படும்.
  - மாதாந்திரம் : வருடாந்திரம் 9.25% விழுக்காட்டில் மாதாந்திரம் வழங்கப்படும்.
  - க்யூமுலேடிவ் : 9.65% கியூமுலேட் வடிவில்
- மீதியுள்ள காலம்/வருடங்களுக்கு உரிய விகிதங்கள் ஒவ்வொரு மார்ச் மாதமும் முன்னதாக அறிவிக்கப்படும்.
- **குறைந்தபட்ச முதலீடு** : ரூ. 10,000/.
- **முதிர்வின்போது மூலதன பாதுகாப்பு:** என்ஏவி அடிப்படையில் அல்லது முதலீட்டின் முகமதிப்பில் முதிர்வு இதில் எது அதிகமோ அது வழங்கப்படும். இந்த உத்தரவாதம் மறுகொள்முதல்களுக்கு நீட்டிக்கப்படுவதில்லை.
- **லிக்விடிட்டி:** 3 ஆண்டுகளுக்குப்பின்பு என்ஏவி அடிப்படையிலான விலையில் மறுகொள்முதல் வசதி. மேலும் முதலீடுகள் NSE ன் ஹோல்சேல் டெப்ட் செக்மென்டில் அட்டவணை இடப்படும்.
- **தற்போது, எல்லாவிதமான முதலீட்டாளர்களுக்கும் முழுதும் வரி–விலக் குள்ள வருமானம்.**
- ***54 ஈஏ முதலீட்டாளர்களுக்கு இரட்டை லாபம்** 2000 ஏப்ரல் 1ம் தேதிக்கு முன்பு விற்கப்பட்ட/மாற்றம் செய்யப்பட்ட நீண்டகால அடிப்படையிலான சொத்துக் களுக்கு பொருந்தும்.
- **ECS மூலம் வருமானம் வரவு வைக்கப்படுகிறது** 11 புதிய மையங்கள் உட்பட தேர்ந்தெடுத்த 22 மையங்களில் முதலீட்டாளர்களின் கணக்கில் நேரடியாக வருமானம் சேர்க்கப்படுகிறது.

*கூடுதல் விபரங்களுக்கு, உங்கள் அருகிலுள்ள யூடிஐ அலுவலகம் அல்லது முக்கிய பிரதிநிதி/முகவரை தயவுசெய்து அணுகவும்.*




## யூனிட் ட்ரஸ்ட் ஆஃப் இந்தியா

இந்தியாவின் மிகப்பெரிய மியூச்சுவல் ஃபண்ட்

13, சர் வித்தல்தாஸ் தக்கர்ஸி மார்க், நியூ மெரீன் லேன்ஸ், மும்பை-400 020.
டெலிபோன்: 2031818. வெப்சைட்: www.unittrustofindia.com

CWPL-UTI-TAM

**விற்பனை 2000 ஜூன் 24ம் தேதிவரை நடப்பில்**

இடர்ப்பு நிலைமைகள்: மியூச்சுவல் ஃபண்ட் மற்றும் செக்யூரிட்டிகளில் செய்யப்படும் முதலீடுகள் மார்க்கெட் ஏற்றத்தாழ்விற்கு உட்பட்டவை. திட்டத்தின் என்ஏவி திட்டத்தின் போர்ட்ஃபோலியோவை பாதிக்கும் காரணங்களைப் பொறுத்து ஏறவோ இறங்கவோ செய்யலாம். கடந்தகால செயல்பாடுகள் எதிர்கால பலன்களை சுட்டிக்காட்டுவதாகாது. காலவரைக்கு முன்பான மறு கொள்முதலுக்காக மூலதன பாதுகாப்பு உத்தரவாதம் அளிக்க முடியாது மற்றும் இத்தகைய நிலைகளில் மறுகொள்முதல் விலை என்ஏவியைப் பொறுத்தது. மந்த்லி இன்கம் பிளான் 2000 (செகண்ட்) என்பது திட்டத்தின் பெயரே தவிர திட்டத்தின் தரம் எதிர்கால வருமானம் அல்லது ஆதாயங்களை ஒரு வகையிலும் குறிப்பிடுவதாகாது. முதலீடு செய்யும் முன் வழங்கு பத்திரத்தை தயவு செய்து பார்க்கவும்.

தெற்கு பிராந்திய அலுவலகம் : சென்னை : (044) 5210347 கிளை அலுவலகங்கள் : சென்னை, 5210356/5230985 • திருச்சி : 760060. • மதுரை : 738186 • கோயம்புத்தூர் : 214973. சப்ராஞ்சைஸ் அலுவலகம்: சேலம் 416414. சிஆர் கலெக்‌ஷன் மையங்கள் : • குன்னூர் : 31037 • கடலூர் : 21712 • தர்மபுரி : 61012 • திண்டுக்கல் : 432244 • ஈரோடு : 252494. • காஞ்சீபுரம் : 20076 • காரைக்குடி : 22277 • நாகர்கோயில் : 40274 • மைலாடுதுறை : 26739 • பாண்டிச்சேரி : 339080/346209 • ராஜபாளையம் : 21360 • தஞ்சாவூர் : 31374. • திருநெல்வேலி : 339567 • தூத்துக்குடி : 325621.

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / Chief PMG-141 / 2000 *
Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 37 * Registered as a Newspaper in Srilanka

# Jyothy Laboratories Ltd.

## ''உஜாலாவின் உன்னத வெண்மை விஞ்ஞான ரீதியிலான சாதனை.''




**ஜோ**தி லேபின் ஆய்வுக் கூடத்தில் தொடர்ந்து நன்கு சோதிக்கப்பட்டு வெற்றிகரமாக நிரூபிக்கப்பட்ட உஜாலாவின் இன்ஸ்டா வைட்னிங் சிஸ்டம் (I.W.S.)™ இது தண்ணீரில் உடனடியாகக் கரைவதோடு, துணிகளின் நுட்பமான நூலிழைகளிலுள் ஆழ்ந்து ஊடுருவிவெண்மையின் வெளிச்சத்தை துணிகளில் உடனடியாய் வெளிக்கொணர்கிறது. துணிகள் மீண்டும் துவைக்கும்போது, அழுக்குடன் முழுவதும் வெளியே தள்ளப்பட்டு விடுகிறது. நாட்கள் பல ஆனாலும் துணிகளின் இயல்பான வண்ணம் மாறாமல் புதிது போலவே பாதுகாக்கிறது. ஸ்கின் இரிட்டேஷன்-ஓரல் டாக்சிசிட்டி சோதனைகளில் பாதுகாப்பானது என ஆதாரபூர்வமாக கண்டறியப்பட்ட தயாரிப்பு உஜாலா ஒன்றே.

**1983** முதல் அனேக கோடி உள்நாடு-வெளிநாடு வாடிக்கையாளர்களுக்கு முழுதிருப்தியை உஜாலா வழங்கிக் கொண்டிருக்கிறது. பாரத நாடெங்கும் பல மாநிலங்களில் உள்ள ஜோதி லேபின் விஞ்ஞான தொழில் நுட்ப மேன்மை மூலம் கடும் தரக்கட்டுப்பாடு முறைகளால் தயாரிக்கப்பட்டு ஒவ்வொரு உஜாலாவும் உங்களை அடைகிறது.

**வி**ஞ்ஞான ஆதாரமற்ற முறையில், இரசாயன நிறுவனங்கள் தயாரிக்கும், நூலிழைகளை பலவீனப்படுத்தும், வண்ணம் குறைக்கும் மூலப்பொருட்கள் ஏதும் இதில் இல்லை. தரங்குறைந்த, கலப்பட இரசாயனக் கலவைகள் உங்களின் துணிகளுக்கு சேதம் ஏற்படுத்த இடம் அளிக்காதீர்கள்.

**உ**ஜாலா என கேட்டு வாங்கும் போது விஞ்ஞானபூர்வமற்ற ஏதேனும் ஒரு போலி தயாரிப்பை நீங்கள் பெறவில்லை என்பதை உறுதிசெய்து கொள்ளுங்கள்.




வெண்மையின் புதிய நிறம்

A product of Jyothy Laboratories Ltd.